# தமிழ்ப் புதுக்கவிதைகளில் பெண்ணியம்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**சு.கிருஷ்ணமூர்த்தி**

பதிவு எண்: 2009R1365/2015-2016

**நெறியாளர்**

**முனைவர் ச.இராமமூர்த்தி**

தமிழாய்வுத்துறை

மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி, சிவகங்கை.





## அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தர நிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்றுத் தரமதிப்பீட்டில் 3.64 தரப்புள்ளிகளுடன் $A^+$ தகுதி மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

**காரைக்குடி-630 003**

**ஏப்ரல் - 2019**

**முனைவர் ச.இராமமூர்த்தி**, *எம்.ஏ., எம்.பில்., பி.ஜி.டி.சி,ஏ., சி.ஜி.டி., பிஎச்.டி.,*
**உதவிப்பேராசிரியர்,**
**தமிழாய்வுத்துறை,**
**மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி,**
**சிவகங்கை-630 561.**

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

"**தமிழ்ப் புதுக்கவிதைகளில் பெண்ணியம்**" என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காகத் திரு. ***சு.கிருஷ்ணமூர்த்தி*** செய்துள்ள இவ்ஆய்வு, அவரால் தன்னிச்சையாகச் செய்யப்பட்டது என்றும், இவ்ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**இடம்: சிவகங்கை** **(முனைவர் *ச.இராமமூர்த்தி*)**

**நாள்:** **மேற்பார்வையாளர்**

**சு.கிருஷ்ணமூர்த்தி**, *எம்.ஏ., எம்.பில்., பி.எட்., எச்.டி.சி.ஏ.,* **நாள்:**

**பதிவு எண்: 2009R 1365/2015-2016**
**பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளர்,**
**தமிழாய்வுத்துறை,**
**மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி,**
**சிவகங்கை-630 561.**

# ஆய்வாளர் உறுதிமொழி

**"*தமிழ்ப் புதுக்கவிதைகளில் பெண்ணியம்*" என்னும் தலைப்பில் காரைக்குடி, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் பட்டத்திற்காகச் செய்யப்பட்டுள்ள இவ்ஆய்வு, என் சொந்த முயற்சியால் உருவானதே என்றும், இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்ஆய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.**

**(*சு.கிருஷ்ணமூர்த்தி*)**
**ஆய்வாளர்**

**உறுதிக் கையொப்பம்**

**(முனைவர் *ச.இராமமூர்த்தி*)**
**மேற்பார்வையாளர்**

## நன்றியுரை

"**தமிழ்ப் புதுக்கவிதைகளில் பெண்ணியம்**" என்னும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வினை நிகழ்த்துவதற்கு எனக்கு அனுமதி வழங்கிய காரைக்குடி, அழகப்பா பல்கலைக்கழகத்திற்கு என் நன்றியை முதற்கண் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஏழை, எளிய மாணவர்களின் உயர்கல்விக்காக 1947ஆம் ஆண்டில் இக்கல்லூரியை நிறுவிய மேதகு சண்முக மன்னர் அவர்களுக்கு எனது பணிவான நன்றி என்றென்றும் உரித்தாகும்.

சிவகங்கை, மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரித் தமிழாய்வுத்துறையில் முனைவர் பட்ட ஆய்வு செய்வதற்கு வாய்ப்பளித்த கல்லூரியின் அன்றைய முதல்வர் ***சீ.ஜெகன்னாதன்***, அதே கல்லூரியில் கவுரவ விரிவுரையாளராகப் பணியாற்ற வாய்ப்பு நல்கிய கல்லூரியின் முன்னாள் முதல்வர் ***முனைவர் மெ.பன்னீர்செல்வம்***, மூத்த பேராசிரியர் ***முனைவர் ந.அழகுச்சாமி***, கல்லூரியின் இன்றைய முதல்வர் ***முனைவர் பா.ஹேமலதா*** ஆகிய அனைவருக்கும் நன்றியுடையேன்.

நான் இளங்கலை பயின்ற காலத்தில் இருந்து இன்று வரை தொடர்ந்து என்னை ஊக்கப்படுத்தி வருகின்ற எம் கல்லூரித் தமிழாய்வுத்துறையின் தலைவர் ***முனைவர் வி.கிளாட்சன்*** அய்யா அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வுத்தலைப்பு தேர்ந்தெடுத்ததிலிருந்து, ஆய்வு நிறைவு பெறும்வரை ஆய்வு தொடர்பான சந்தேகங்களை நிவர்த்தி செய்து, ஆய்வு செம்மையுறச் செய்ததோடு, பல்வேறு நிலைகளில் எனக்கும் என் குடும்பத்தாருக்கும் நிறைவான உதவிகளைச் செய்து என்னை ஆற்றுப்படுத்திவரும், மதிப்பிற்கும் போற்றுதலுக்கும் உரிய என் ஆய்வு

நெறியாளர் முனைவர் ச.இராமமூர்த்தி அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றி என்றும் உரியதாகும்.

நான் ஆய்வு செய்த காலங்களில் ஆய்வு தொடர்பான கருத்துக்களை வழங்கி ஆற்றுப்படுத்திய தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் முனைவர் கா.சந்தானலெட்சுமி, முனைவர் சு.விஸ்வநாதன், முனைவர் செ.எபனேசர், முனைவர் மு.சிதம்பரம், முனைவர் து.ஸ்டாலின், முனைவர் கரு.இராமச்சந்திரன், முனைவர் ம.இராமமனோன்மணி, முனைவர் இரா.தங்கமுனியாண்டி, முனைவர் மா.முத்துராமன், முனைவர் ஆ.பாண்டி, திரு.வே.சதீஷ், செல்வி இரா.புவனேஸ்வரி, திருமதி அ.உமாராணி, முனைவர் க.சண்முகநாதன், திரு. ச.முத்துவேல், முனைவர் ப.அழகு ஆகியோருக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வுக்கு வேண்டிய பல்வேறு நூல்களைக் கொடுத்து உதவிய திருவாடனை அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் மு.பழனியப்பன் அவர்களுக்கு என்றென்றும் நன்றியுடையேன்.

இவ்ஆய்வு தொடர்பாகக் கேட்கும்பொழுதெல்லாம் நூல்களை வழங்கி உதவிய கல்லூரியின் மைய நூலகர் முனைவர் அ. வாஞ்சிநாதன் அவர்களுக்கும், துறை நூலகப் பொறுப்பாசிரியர் முனைவர் மு.சிதம்பரம் அவர்களுக்கும், காரைக்குடி, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறை உதவிப்பேராசிரியர் முனைவர் செ.சுரேஷ் அவர்களுக்கும், பூவந்தி, சிவகாசி நாடார் பயோனியர் மீனாட்சி மகளிர் கல்லூரியின் தமிழ்த்துறை உதவிப்பேராசிரியர் முனைவர் ச.கலைவாணி அவர்களுக்கும் என் நன்றி.

ஆய்வு தொடர்பான கலந்துரையாடலின்போது பல அரிய தகவல்களைக் கூறிய பாசமிகு பேராசிரிய நண்பர்கள் திரு. ச.நீலமேகம், திரு. பூ.சேவுகமூர்த்தி, திரு மு.உதயா, திரு.தி.பாலமுருகன், முனைவர் கோ.பாலாஜி, திரு.கொ.மணிமாறன், திரு.சு.நாகராஜன், சே.சாமுவேல் ஆகியோருக்கும் என் நன்றி உரியது.

இவற்றிற்கெல்லாம் அணி செய்தாற்போல் என்னைப் பெற்று வளர்த்துப் படிக்க வைத்த என் அருமைப் பெற்றோர் திரு *மு.சுப்பிரமணி ~ மீனாள்*(நினைவில்) அவர்களுக்கும், ஆய்வுக்காலத்தில் வேண்டிய உதவிகளைச் செய்த என் அன்பு மனைவி *மு.ஜெயந்தி*, என் அருமைக் குழந்தைச் செல்வங்கள் *கி.சஸ்மித்*, *கி.மிதுன யாழினி* ஆகியோருக்கும், என் பாசமிகு சகோதரர் *சு.நாகேந்திரன் ~ கண்மணி*, குழந்தைச் செல்வம் *நா.மீனலோசினி* ஆகியோருக்கும் என் நன்றி.

எனக்குப் பல்வேறு நிலைகளில் உதவிகளைச் செய்து வரும் என் அருமை மைத்துனர் *ப.காளிதாஸ்*, அருமைத் தங்கை திருமதி *கா.ரேகாகாளிதாஸ்*, குழந்தைச் செல்வங்கள் *கா.நர்மதா*, *கா.தீலீபன் கார்த்தி* ஆகியோருக்கும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வேட்டைச் சிறந்த கட்டமைப்புடன் கணினியில் தட்டச்சு செய்து, வடிவமைத்துக் கொடுத்து உதவிய சிவகங்கை, யாழினி கம்ப்யூட்டர் நிறுவனத்தாருக்கு என் நன்றி.

சு.கிருஷ்ணமூர்த்தி

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ. ஆ. | - | உரையாசிரியர் |
| குறள். | - | திருக்குறள் |
| தொகு.ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நன். | - | நன்னூல் |
| நூ. | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பதி.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பா. | - | பாடல் |
| புறம். | - | புறநானூறு |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மு.நூ. | - | முற்காட்டிய நூல் |
| மேலது. | - | மேற்காட்டிய நூல் |
| மொ.பெ.ஆ. | - | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| Edi. | - | Editor |
| P. | - | Page |
| Pp. | - | Pages |

# பொருளடக்கம்





# ஆய்வு அறிமுகம்

ஒரு சமுதாயம் வாழ்ந்த வாழ்வினைக் காணவும், மேற்கொண்ட இலட்சியத்தை அறியவும், பழகிவந்த பண்பாட்டையும் நாகரிகத்தையும் தெளியவும் அவர்களிடையே நெடுங்காலமாக வளர்ந்து வந்துள்ள இலக்கியம் பெரிதும் துணைநிற்கும். அவ்வகையில், தமிழில் கவிதை இலக்கியம் தோன்றி பல ஆண்டுகளாகிவிட்டன. இக்கால எல்லையில் ஆண், பெண் இருபால் படைப்பாளர்களும் கவிதை இலக்கியத்தைப் படைத்துள்ளனர். இக்கவிதைகள் அனைத்தும் பல்வேறு பாடுபொருள்களைக் கொண்டுள்ளன. ஒவ்வொரு பாடுபொருளும் கவிதை இலக்கியத்தின் அரிய கலையாகக் காட்சிப்படுத்தப்பட்டிருக்கிறது. கவிஞர்கள் சமூகத்தின் தொடர்நிகழ்வுகளையோ, இயற்கை, அரசியல், கலை, பண்பாடு, கலாச்சாரம், கல்வி, பெண்களின் அடிமை வாழ்வு, உரிமை மீட்பு, பெண் விடுதலை என்னும் சிந்தனைகளைத் தம் கவிதைகளில் பாடுபொருளாக்கியுள்ளனர்.

பல்லாண்டுகாலமாகப் பல்வேறு சங்கப்புலவர்களாலும் கவிஞர்களாலும் உருப்பெற்ற தமிழ்க்கவிதைகள் இருபத்தியோராம் நூற்றாண்டான இந்நூற்றாண்டில்தான் பெண்களின் வாழ்க்கைச் சிக்கலைப் பிரதிபலிக்கும் ஓர் அரிய கண்ணாடியாகத் திகழ்கின்றன. இக்கவிதைகளின் ஒவ்வொரு பாடுபொருளும் சமூக மாற்றத்தை உருவாக்கும் ஆணிவேராகத் திகழ்கின்றது.

பெண்ணியம் பற்றிய தமிழ்ப்புதுக்கவிதைகள் பெண்களின் அடிமை வாழ்வு, பணிப்பெண்களுக்கு ஏற்படும் சிக்கல்கள், இல்லத்தரசிகளுக்கு ஏற்படும் சிக்கல்கள், பெண் குழந்தைகளுக்கு ஏற்படும் சிக்கல்கள் எனப் பல்வேறு தளங்களில் பெண்களின் சிக்கல்களை முன்னிலைப்படுத்தி அமைந்திருந்தாலும், அச்சிக்கல்களைத் தீர்ப்பதற்கான வழிமுறைகளையும் எடுத்துரைத்துள்ளன. இப்புதுக்கவிதைகள் ஆண் - பெண் என்ற வேறுபாட்டைக் களைந்து சமதர்மச் சிந்தனையைத் தூண்டும் கவிதைகளாகப் பிரதிபலிக்கின்றன.

உரிமை என்பது உலக உயிர்கள் அனைத்திற்கும் பொதுவானதாகும். ஒவ்வோர் உயிரினமும் தான் விரும்புவதைத் தன் விருப்பப்படி செய்யும் அதிகாரத்தைப் பெற்றிருக்கிறது. ஆனால், மனித இனத்தில் சரிபாதியாகக் காணப்படும் ஆணும் பெண்ணும் சமநிலையில் உரிமை பெற்றிருக்கவில்லை. இம்முரண்பாடுகள் உலகளாவிய நிலையில் பொதுவாகக் காணப்பட்டாலும், சமூகம், அரசியல், கலை, பண்பாடு, பொருளாதாரம், மதம் ஆகிய அனைத்துத் தளங்களிலும் பெண்களின் ஆக்கப்பூர்வமான பங்களிப்பும் உரிமையும் மறுக்கப்படுகின்றன. பெண்களை அடிமைப்படுத்திச் சுரண்டும் ஆணாதிக்கக் கருத்தாக்கம் பால் வேறுபாடின்றி, ஆண்களும் பெண்களும் ஏற்றுக்கொள்ளும் வண்ணம் சமூகக் கொள்கையாக நிலைநிறுத்தப்பட்டுள்ளது. பெண்களை இரண்டாம் நிலையில் வைத்துப் பார்க்கும் ஆணாதிக்கக் கருத்தியலில் இருந்து இருவரும் முற்றிலும் விடுபடுவதே பெண்ணியமாகக் கருதப்படுகிறது.

தமிழ்ப்புதுக்கவிதைகள் இலக்கிய வரலாற்றில் பல்வேறு மாற்றங்களை நிகழ்த்தியிருந்தாலும், சமூக அக்கறையோடும் மனிதநேயத்தோடும் ஆண் - பெண் சமதர்மப் போக்கினைக் காட்சிப்படுத்துவது கவிஞர்களின் தனித்துவத்தைக் காட்டுவதாகவே உள்ளது. அந்தவகையில், தமிழ்ப்புதுக்கவிதைகளில் காணப்படும் பெண்ணியம் தொடர்பான கருத்துக்களை ஆராய்வது இன்றியமையாததாகின்றது.

## ஆய்வுத் தலைப்பு

"***தமிழ்ப் புதுக்கவிதைகளில் பெண்ணியம்***" என்பது இவ்ஆய்வின் தலைப்பாக அமைகின்றது.

## ஆய்வு நோக்கம்

சமூகம் என்பது ஆணும் பெண்ணும் இணைந்ததுதான் என்றாலும், இவ்விருவருக்குமான சமூக வாழ்க்கைமுறை ஒன்றாக இல்லை. உலக அளவில் முதன்முதலில் பெண்வழிச் சமூகம்தான் கால்கொண்டது என அறிஞர்கள் கருத்துரைத்திருந்தாலும், அந்தச் சமூகத்தினர் ஆண்களின் மீதான கற்பிதங்களை எவ்வாறு கற்பித்திருந்தனர் என்பதற்கானச் சான்றுகள் தெளிவாகக் கிடைக்கப்பெறவில்லை. பெண்வழிச் சமூகம் தளர்த்தப்பட்டு ஆணாதிக்கச் சமூகம் கால்கொண்டது முதலாகப் பெண்களின் மீதான கற்பிதங்கள் அவர்களை இரண்டாம் நிலைப்படுத்துவதாகவே அமைந்துள்ளன. இந்நிலையில், பெண்கள் தங்களின் மீதான கற்பிதங்களைக் கேள்வி கேட்க முனைந்ததிலிருந்து பெண்ணியம் காலூன்றத் தொடங்கியது. இத்தகைய பெண்ணியச் சிந்தனைகள் தமிழ்ப் புதுக்கவிதைகளில் எத்தகையப் பரந்த வீச்சினைக் கொண்டிருக்கின்றன என்பதை வெளிப்படுத்துவதையே நோக்கமாகக் கொண்டு இவ்ஆய்வு அமைகின்றது.

## கருதுகோள்

தமிழ் இலக்கியப் படைப்பாக்கத்துறையில் இந்நூற்றாண்டில் கவிதைப் படைப்பு என்பது மிதமிஞ்சிய நிலையில் உள்ளது. இதில் பெண்களின் பங்களிப்பும் குறிப்பிடத்தக்க அளவு உயர்ந்துள்ளது. ஆணாதிக்கச் சமூகத்தால் அடக்கி ஒடுக்கப்பட்ட பெண்கள் ஒரு கட்டத்தில் அவ்வடக்குமுறையை எதிர்கொள்ள முனைந்தனர். அவ்வெழுச்சியின் விளைவாக உருவானதுதான் "பெண்ணியம்" என்ற துறையாகும். கவிஞர்கள் தங்களின் கவிதைப்படைப்பில் பெண்களுக்கு ஏற்படும் சிக்கல்களைப் பதிவு செய்தது மட்டுமின்றி, அவற்றிற்கான தீர்வுகளையும் பதிவு செய்துள்ளனர். தீர்வுரைத்தப் படைப்பாளர்களைப் பெண்ணியவாதிகள் என்று அழைப்பர். இப்பெண்ணியவாதிகளின் கவிதைகள் பெண்களின் முன்னேற்றத்திற்கு வழிகாட்டுகின்றன என்பதைக் கருதுகோளாகக் கொண்டு இவ்ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வு எல்லை

தேர்ந்தெடுக்கப்பட்ட இருபால் கவிஞர்களின் கவிதைகளில் காணப்படும் பெண்ணியம் தொடர்பான சிந்தனைகளை வகைதொகைப்படுத்தி விளக்குவது மட்டும் இவ்ஆய்வின் எல்லையாக அமைகின்றது.

## ஆய்வு ஆதாரங்கள்

இவ்ஆய்விற்குப் பயன்படும் ஆதாரங்கள் முதன்மை ஆதாரங்கள் என்றும், துணைமை ஆதாரங்கள் என்றும் இருவகையாகப் பகுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

## முதன்மை ஆதாரங்கள்

சமுதாயத்தில் வீட்டிற்குள்ளேயே அடங்கி ஒடுங்கிக் கிடந்த நிலைமாறி, ஆண்களுக்கு இணையாகச் சமூகம், அரசியல், பொருளாதாரம் ஆகிய துறைகளில் ஆண், பெண் சமநிலையைவிடச் சற்று உயர்ந்த எண்ணிக்கையில் பெண்கள் பங்காற்றி வருகின்றனர். இந்நிலையில் முன்பு இருந்த சமூகம் பற்றிய கருத்தியல் பெண்ணியவாதிகளுக்கு மாற்றுக் கருத்தியல் ஏற்பட்டிருக்கின்றன. அவ்வகையில், பெண்கவிஞர்கள் முன்வைக்கும் எதிர்க்கருத்தியல்களைக் கண்டறியும்நோக்கில் பின்வரும் பெண் கவிஞர்களான அனிதா, ஆண்டாள் பிரியதர்ஷினி, இளம்பிறை, கனிமொழி, குட்டிரேவதி, சல்மா, சுகிர்தராணி, தமிழச்சி தங்கபாண்டியன், தாமரை, சே.பிருந்தா, பொன்மணி வைரமுத்து, மாலதி மைத்ரி, இரா.மீனாட்சி, அ.வெண்ணிலா, வைகைச் செல்வி, ஆண் கவிஞர்களான அப்துல் ரகுமான், அறிவுமதி, இன்குலாப், கலாப்ரியா, நா.காமராசன், சிற்பி, ஈரோடு தமிழன்பன், பழநிபாரதி, பழமலய், பிரமிள், மீரா, நா.முத்துக்குமார், மு.மேத்தா, வைரமுத்து, நெல்லை ஜெயந்தா ஆகிய முப்பது இருபால் கவிஞர்களின் தேர்ந்தெடுக்கப்பட்ட அறுபத்தைந்து கவிதைத் தொகுப்புகள் இவ்ஆய்விற்கு உரிய முதன்மை ஆதாரங்களாக அமைகின்றன.

## துணைமை ஆதாரங்கள்

கவிதைஇலக்கியம் தொடர்பாக இதுவரை வெளிவந்துள்ள நூல்கள், திறனாய்வு நூல்கள், ஆய்வு நூல்கள், ஆய்வுக்கோவைகள், இதழ்கள், கட்டுரைகள், அகராதிகள், கலைக்களஞ்சியங்கள் ஆகியன இவ்ஆய்விற்குத் துணைமை ஆதாரங்களாக அமைகின்றன.

## ஆய்வு அணுகுமுறைகள்

இவ்ஆய்வு, தமிழ்ப்புதுக்கவிதைகள் பற்றிய ஆய்வு என்பதால் விளக்கவியல் அணுகுமுறை (*Descriptive Approach*), ஒப்பியல் அணுகுமுறை (*Comparative Approach*), உளவியல் அணுகுமுறை *(Psychological Approach),* வரலாற்றியல் அணுகுமுறை *(Historical Approach*), சமுதாயவியல் அணுகுமுறை *(Sociological Approach)* மற்றும் பகுப்புமுறைத் திறனாய்வு (*Analytical Criticism)* ஆகிய திறனாய்வு அணுகுமுறைகளைப் பின்பற்றி இவ்ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வுக் கட்டமைப்பு

"***தமிழ்ப் புதுக்கவிதைகளில் பெண்ணியம்***" என்னும் பெயரிய இவ்ஆய்வு ஆய்வு அறிமுகம், ஆய்வு நிறைவுரை நீங்கலாகப் பின்வரும் ஐந்து இயல்களைக் கொண்டதாக அமைந்துள்ளது. அவை:

1. பெண்ணியத்தின் வளர்ச்சிநிலை
2. பணிக்குச்செல்லும் பெண்கள் எதிர்கொள்ளும் சிக்கல்கள்
3. இல்லத்தரசிகள் எதிர்கொள்ளும் சிக்கல்கள்
4. பெண்குழந்தைகள் எதிர்கொள்ளும் சிக்கல்கள்
5. பெண்களின் மீட்பியற் சிந்தனைகள்

ஆகும்.

## இயல் விளக்கங்கள்

"***பெண்ணியத்தின் வளர்ச்சிநிலை***" என்னும் முதல் இயலில், பெண்ணியம்- சொற்பொருள் விளக்கம், பெண்ணியம் தோற்றம்பெறக் காரணங்கள், பெண்ணியத்தின் தோற்றுவாய், பெண்ணியத்தின் வகைகள், மேலைநாடுகளில் பெண்ணியம், இந்தியாவில் பெண்ணியம், இந்தியப் பெண்ணிய அமைப்பு உருவாகக் காரணங்கள், தமிழ்நாட்டில் பெண்ணிய முன்னோடிகள், பெண்ணியத்தின் மூன்று அலைகள், தமிழ் இலக்கியங்களில் பெண்ணியச் சிந்தனைகள், பெண்ணியத்தின் இன்றைய வளர்ச்சிநிலை ஆகியன பற்றிய கருத்துக்கள் விரிவாக எடுத்துரைக்கப்பெற்றுள்ளன.

"***பணிக்குச்செல்லும் பெண்கள் எதிர்கொள்ளும் சிக்கல்கள்***" என்னும் பெயரிய இரண்டாம் இயலில், வேலைவாய்ப்பில் பெண்களுக்கான இடம், பல்வேறு பணிநிலைகளில் பெண்கள், பணிக்குச்செல்லும் பெண்களுக்கு ஏற்படும் சிக்கல்கள், பணிக்குச் செல்லும் பெண்களைத் தங்களோடு பணியாற்றும் சகஊழியர் என்று பார்க்காமல், பாலியல் தேவைக்கானப் பொருளாகக் கருதும்நிலை, பணிக்குச்செல்லும் பெண்களின் இரட்டைப் பணிச்சுமை, ஊடகத்துறையில் பெண்களுக்கு ஏற்படும் பாலியல் சிக்கல்கள், பேருந்துப் பயணத்தின்போது பெண்கள் எதிர்கொள்ளும் பாலியல் கொடுமைகள், அலுவலக மேலதிகாரியின் பார்வை, பெண்களுக்கு ஊதியத்தில் உரிமை இல்லாதநிலை, விலைமகளிரின் வாழ்க்கைச் சூழல், பெண்களின் ஓய்வின்றிய உழைப்பு, இவ்வாறானச் சமூகச்சூழலில் பணியாற்றும் இடங்களில் உடல்ரீதியாகவும், மனரீதியாகவும் பெண்கள் எதிர்கொள்ளும் சமூகச்சிக்கல்கள் போன்ற நிகழ்வுகளை வகைதொகைப்படுத்தி, தக்க சான்றுகளுடன் விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

"***இல்லத்தரசிகள் எதிர்கொள்ளும் சிக்கல்கள்***" என்னும் பெயரிய மூன்றாம் இயலில், இல்லத்தரசிகளாக இருக்கக்கூடிய பெண்கள் எதிர்கொள்ளும் பல்வேறு சிக்கல்கள் விளக்கிக் காட்டப்பட்டுள்ளன. பெண்களுக்கான கருத்துச் சுதந்திரமின்மை, ஊதியமில்லா வேலைக்காரியாக மதிக்கப்பெறுதல், இல்லத்தில் பணியாற்றும்

இயந்திரங்களாகப் பார்க்கப்படுதல், சொந்த உறவுகளாலேயே உடல் மற்றும் மனரீதியாகப் பாதிக்கப்படுதல், பெற்றோரால், புகுந்த வீட்டினரால் ஏற்படும் பல்வேறு இன்னல்கள், குடும்பத்தின் தலைமுறை அடிமைகளாக எண்ணும் கொடுமை, மாமனார், மாமியார், நாத்தனார் போன்றோரால் ஏற்படும் கொடுமைகள், இளம்வயது திருமணத்தால் விளையும் சிக்கல்கள், மரபுசார்ந்த பணிகளில் பெண் அன்றும் இன்றும் எதிர்கொள்ளும் சிக்கல்கள், ஆணாதிக்கத்தால் மனைவிக்கு ஏற்படும் தீமைகள் எனக் குடும்பத்தளத்தில் இல்லத்தரசிகள் எதிர்கொள்ளும் பல்வேறு சிக்கல்களைத் தமிழ்ப்புதுக்கவிதைகள்வழி சான்றுகளுடன் விளக்கிக் காட்டப்பட்டுள்ளன.

"***பெண்குழந்தைகள் எதிர்கொள்ளும் சிக்கல்கள்***" என்னும் நான்காம் இயலில், பெண்குழந்தைகளுக்குக் கருவிலிருந்தே சிக்கல் தொடங்குவதை எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. பெண்குழந்தைகள் மீதான சமூகத்தின் பார்வை, சிறுவயதிலேயே பாலினப்படுத்தப்படும் கொடுமை, பெண்குழந்தை பிறப்பால் வரவேற்பின்மை, பெண் சிசுக்கொலை, சிசுக்கொலைக்கான முறைமைகள், அறிவியல் கண்டுபிடிப்பும் கருக்கலைப்பும், பெண்குழந்தைகள் வளரும் விதம், பாலியல் வன்முறை, குழந்தை மணத்தின் கொடுமை, குழந்தைத் தொழிலாளர்களின் வாழ்வியல் சிக்கல், குழந்தையின் பணிச்சுமை, வீட்டு வேலைகளுக்குப் பெண்குழந்தைகளை அனுப்புவதால் அக்குழந்தைகளுக்கு ஏற்படும் பாலியல் வன்முறை, பெண் குழந்தைகள் மீதான வக்கிர ஆண்களின் மிருகச் செயல் என்பனபோன்ற பெண் குழந்தைகளுக்கு ஏற்படும் பல்வேறு சிக்கல்களை வகைதொகைப்படுத்தி இருபால் கவிஞர்களும் பதிவுசெய்துள்ள விதம் பற்றி உரிய சான்றுகளுடன் விளக்கிக்காட்டப்பட்டுள்ளன.

"***பெண்களின் மீட்பியற் சிந்தனைகள்***" என்னும் பெயரிய ஐந்தாம் இயலில், பெண்ணியம் - தத்துவப்பார்வை, மீட்பியற் சிந்தனை விளக்கம், பெண்களின் மேன்மை, பெண்ணுரிமைச் சிந்தனை, பெண்களின் நால்வகைப் பண்புகள், பெண்விடுதலை பற்றியச் சிந்தனை, பெண்கல்வியால் ஏற்பட்ட சமூக மாற்றம், பெண்ணியத்தின்

ஊன்றுகோல், நிலவுடைமைத் தோற்றம், பெண்ணின்றி ஆணில்லை என்ற நிலையை அறிதல், பெண்களின் பிரச்சனையைத் தீர்க்கப் பெண்களே சங்கம் அமைத்துப் போரிடும் பாங்கு, மூடத்தனத்தை ஒழியச் செய்தல், வரதட்சணைக்கானத் தீர்வுகள், மணமுறிவுக்கான உரிமை, மறுமணம் - ஒரு தீர்வு, அரசியலில் பெண்களின் தடம், பெண்களை அரசியல் போராட்டத்திற்கு அழைக்கும் ஆணின் குரல்கள், ஆண், பெண் சமநிலைச் சிந்தனை எனப் பெண்களுக்கான மீட்சி குறித்த சிந்தனைகளைத் தமிழ்ப்புதுக்கவிதைகளின்வழி சான்றுகளுடன் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

## ஆய்வு நிறைவுரை

இவ்ஆய்வின் இயல்தோறும் கண்டறியப்பட்டுள்ள முடிவுகள் "***ஆய்வு நிறைவுரை***" என்னும் இப்பகுதியில் நிரல்படத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

## துணைநூற் பட்டியல்

இவ்ஆய்விற்குப் பயன்பட்ட முதன்மை நூல்கள், துணைமை நூல்கள், இதழ்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள், ஆய்வுக்கோவைகள், அகராதிகள், கலைக்களஞ்சியங்கள் ஆகியன "***துணைநூற் பட்டியல்***" என்னும் இப்பகுதியில் அகரவரிசையில் இடம்பெற்றுள்ளன.

## ***பின்னிணைப்பு***

இவ்ஆய்விற்கு முதன்மை ஆதாரங்களாக விளங்கும் கவிதைத் தொகுப்புகளைப் படைத்த கவிஞர்களின் நிழற்படங்கள் "***பின்னிணைப்பு***" என்னும் இப்பகுதியில் இடம்பெற்றுள்ளன.



# இயல் - 1

# பெண்ணியத்தின் வளர்ச்சிநிலை

## 1.0.முன்னுரை

"பெண்ணியம்" என்பது சமூக அக்கறையின் வெளிப்பாடாகும். சமூகம் என்பது மானுட இனத்தின் கூட்டிணைவைக் குறிப்பதாகக் கொள்ளலாம். ஆண்கள் எந்த அளவு சமூக அமைப்பிலும், பொருளாதாரத்திலும், அரசியலிலும் ஈடுபட்டு உரிமை கொண்டாடுகின்றார்களோ அந்த அளவுக்குப் பெண்களுக்கும் உரிமைகள் வழங்கப்பட வேண்டும். சமூகத்தின் சரிபாதியாக விளங்கும் பெண் இனத்தின் இருத்தலைப் பேசுவது. ஆணாதிக்கப் பிடியிலிருக்கும் பெண்களின் பிரச்சினைகளைக் கண்டறிந்து தீர்க்க முயல்வது, பெண்களின் மீதான சமூக மதிப்பீட்டைப் புரிந்துகொள்வது, எது பெண்ணியம்? என்ற கோட்பாட்டிற்கு நிலையான விளக்கத்தைக் காண்பதோடு, முதன்மைப்படுத்தப்பட்ட சமூக எல்லையில், மனித இனம் இயற்கைச் சூழலோடு இயைந்து உலகத்தை மேம்படுத்திக் கொண்டுள்ள வரலாறே இவ்வுலகத்தின் வரலாறாகும்.

"பெண்ணியம்" என்றாலே "ஆண்களை எதிர்ப்பது" என்ற எண்ணம் சமூகத்தில் பரவலாக நிலவி வருகிறது. உண்மையில் பெண்ணியத்தின் நோக்கம் அதுவன்று. காலம் காலமாக அடிமைப்படுத்தப்பட்டு வாழும் பெண்களை மீட்டு, அவர்களுக்குக் கல்வியின் மூலம் விழிப்புணர்வு ஏற்படுத்திச் சமூகத்தில் நிலவும் ஆண் - பெண் என்ற வேறுபாட்டைக் களைந்து, சமூகத்தில் ஆண்களுக்கு இணையான மதிப்பினைப் பெற்றுத் தருவதே, பெண்ணியத்தின் நோக்கமும் செயற்பாடும் ஆகும்.

பெண்ணியத்தை மிகச் சரியாகப் புரிந்து கொள்வது இன்றையத் தேவையாக இருக்கிறது. பெண்ணை முதன்மைப்படுத்தியிருந்த தாய்வழிச் சமுதாயத்திலிருந்து, தந்தை வழிச் சமுதாயம் மலர்ந்த காலம் முதல் பெண்களின்நிலை கேள்விக் குறியாகவே இருந்து வருகிறது.

பெண்ணை முதன்மைப்படுத்தப்பட்ட தாய்வழிச் சமுதாயத்தில் இருந்து மெல்ல மெல்லக் குடும்பம் என்ற ஓர் அமைப்பு தோன்றத் தொடங்கியது. ஆண், பெண் இருவரிடையே சமநிலை ஏற்படுவதற்கு மாறாக, ஆதிக்க நிலையை ஆண்கள் கைப்பற்றியதும் சமூக வரலாற்றில் நிகழ்ந்துவிட்ட நிகழ்வுகளாகும். ஆண்கள் குடும்பச் சுமையைப் பெண்ணின் மீது ஏற்றித் தம்முடைய உரிமையை மிகையாக உணர்த்தித் தனது ஆதிக்க மேலாண்மையைச் சிறுகச் சிறுக நிலைப்படுத்திக் கொண்டனர். இப்போக்கு சமூகத்தில் காலூன்றியமைக்குக் குடும்ப அமைப்பே காரணமாக அமைகின்றது.

## 1.1.பெண்ணியம்-விளக்கம்

"பெண்ணியம்" என்பதற்கு அறிஞர்களும் அகராதிகளும் பல விளக்கங்களைக் கொடுத்துள்ளன. அவை:

> "**சமூகத்திலும் வேலைத்தளத்திலும் குடும்பத்திலும் நிலவும் பெண் ஒடுக்குமுறை மற்றும் சுரண்டல் பற்றி பெண்களின் உணர்வுநிலைகளும், இந்நிலையை மாற்றுவதற்குப் பெண்களும் ஆண்களும் எடுக்கும் உணர்வுப்பூர்வமான நடவடிக்கைகளும் பெண்ணியத்தின் பரந்துபட்ட வரையறையாக இப்போதைய நிலையில் கொள்ளலாம்**"[1]

என்கின்றார் அரங்க மல்லிகா.

"பெண்ணியம்" என்பதைக் குறிக்க *Feminism* என்ற ஆங்கிலச் சொல்லைப் பயன்படுத்துகின்றனர். பெண்ணியம் என்பதற்குப் பல விளக்கங்கள் தரப்பட்டு வருகின்றன. அந்த விளக்கங்களுக்கு இடையே பல வேறுபாடுகள் இருந்தாலும்,

1. அரங்க மல்லிகா, தமிழ் இலக்கியமும் பெண்ணியமும், பக். 1-2.

அடிப்படையில் அவை, "பெண்ணியம்" என்பதற்குப் "பாலியல் சமத்துவம்" (Sexual Equality) என்ற பொருளைத் தருகின்றன.

"பெமினிசம்" (Feminism) என்ற ஆங்கிலச் சொல் தமிழில் பெண்ணியம், பெண்ணியல், பெண்நிலை வாதம், பெண்ணுரிமை எனப் பலவாறு மொழி பெயர்க்கப்படுகிறது. இவற்றில் "பெண்ணியம்" என்ற சொல்லே இன்று பெருவழக்காய் நிலைபெற்று விட்டது.

*Feminism* என்ற ஆங்கிலச் சொல் *Femina* என்ற இலத்தீன் மொழிச் சொல்லின் திரிபு ஆகும். பெண் என்னும் சொல் பெண்மைக்குரிய இயல்புகளை உடையவள் என்று பொருள்படும்.

> "1890 வரையில் பெண்ணியம் என்பதைக் குறிக்க மகளிரியம் (*Womanism*) என்ற சொல்லே பயன்படுத்தப்பட்டது. 1895 ஆம் வருடம் ஏப்ரல் 27 ஆம் நாளன்று வெளியிட்ட அத்தீனா என்ற கிரேக்கப் பெண் தெய்வக்கோயில் என்ற நூலில் ஆலிஸ் ரோசி என்பவர் பெண்ணியம் என்ற சொல்லை மகளிரியம் என்ற சொல்லுக்கு மாற்றாகப் பயன்படுத்தினார்"[2]

என்ற செய்தியை அறியமுடிகின்றது.

"பெண்ணியம்" என்ற சொல்லுக்கு ஆக்ஸ்போர்டு அகராதி,

> "பெண்களின் தேவையை நிறைவேற்ற அவர்கள் சார்பாக வாதாடுவது/ போராடுவது (Advocacy of the Claims of Women)"[3]

என்ற பொருளைத் தந்துள்ளது.

சென்னைப் பல்கலைக்கழக ஆங்கில தமிழ்ப் பேரகராதி "Feminism' என்பதற்குப் பெண் உரிமைக் கோட்பாடு என்பதனை,

---

2. இரா. ஸ்ரீவித்யா, நவீனப் பெண்ணியல் திறனாய்வும் வ.ரா.வின் புதினங்களும், ப. 19.
3. ஆக்ஸ்போர்டு தமிழகராதி, ப. 27.

"பெண்ணுரிமை ஆதரவு என்று கூறியிருக்கும் பொருள் பொருத்தமுடையதாகும்"[4]

என்கிறது.

*Delux* ஆங்கிலம் தமிழ்ப் பேரகராதியானது, பெமினிசம் என்பதற்குப் "பெண்களின் உரிமையை வற்புறுத்தும் ஓர் இயக்கம் என்றும், பெண்ணியத்தைத் தனிப்பட்ட ஓர் இயக்கம் என்றும், விளக்கம் தருகின்றது."[5]

பெண்ணியம் என்பதைத் "தத்துவம்" என்ற நிலையிலும் "இயக்கம்" என்ற நிலையிலும், "கோட்பாடு" என்ற நிலையிலும் தனித்தனியாக விளக்கிக் கொண்டோமேயானால், "பெண்ணியம்" என்பதன் முழு விளக்கத்தையும் அறிந்து கொள்ள முடியும்.

பெண்ணியம் என்ற தத்துவமானது,

"ஆண் மேலாதிக்கத்தில் வழி வழியாய் வந்த பண்பாட்டின் அடிப்படையில், பெண்கள் தனித்துவம் பெறாமல் வாழ்ந்து கொண்டிருப்பதையும், ஆண்களின் பாலியல் தேவைக்குப் பயன்படு பொருளாகத் தள்ளப்பட்ட விதத்தையும், ஆண்களைச் சார்ந்து, அவர்களின் நலன் பேணுவதையே வாழ்வாகக் கொண்டுள்ள நிலையையும் எடுத்துரைக்கின்றது."[6]

பெண்ணியம் என்ற இயக்கமானது,

"பெண்கள் தாமாக முடிவெடுத்து, அவர்களின் விருப்பப்படி வாழ்க்கையை நடத்திச் செல்லும் ஒரு சமூகத்தை உருவாக்குவதாகும். இஃது, பெண்களிடையே பல மாற்றங்களை ஏற்படுத்தி, அவர்களின் மேற்கூறிய இலக்கை அடைவிக்க உதவும் புரட்சிகரமான செயற்பாடு உடையதாகும்"[7]

என்று விளக்கம் தருகிறார் இரா.பிரேமா.

---

**4.** *Madras University English Tamil Dictionary, P. 307.*
**5.** *Delux Dictionary, P.* 401.
**6.** இரா.பிரேமா, பெண்ணியம், ப. 12.
**7.** மேலது, பக். 12-13.

பெண்ணியம் என்ற கோட்பாட்டிற்கு,

> **"ஆண்கள் எந்த அளவு சமூக அமைப்பிலும், பொருளாதாரத்திலும், அரசியலிலும் ஈடுபட்டு உரிமை கொண்டாடுகிறார்களோ, அந்த அளவுக்குப் பெண்களுக்கும் மேற்கூறிய துறைகளில் அனைத்து உரிமைகளும் வழங்கப்பட வேண்டும் என்று கூறுவதோடு, அதனடிப்படையில் நன்கு வரையறுக்கப்பட்ட சமூக அமைப்பை உருவாக்கித் தரவும் முயலுகிறது"**[8]

என்ற விளக்கத்தினை முன் வைக்கிறார்.

> **"பெண் எந்த ஆணுக்கும் நிகரானவளே. எந்த நிலையிலும், எந்தக் காலத்திலும், அவள் அடக்கி வைக்கப்படக் கூடாது. தனிமைப்படுத்தி வைக்கப்படக் கூடாது, சார்பு நிலைப்படுத்தக் கூடாது"**[9]

என்று பிரேமா அவர்கள் பெண்ணியத்திற்கு விளக்கம் தருகிறார்.

மனித இனத்தின் சரிபாதியாக உள்ள பெண்கள் காலங்காலமாகத் தங்கள் உரிமைகளை இழந்து அடிமைப்படுத்தப்பட்டுத் துன்புறுத்தப்பட்டனர். அந்த நிலையினின்று விடுதலை பெறுதலும், கல்வியறிவின் மூலம் சமுதாயத்தில் விழிப்புணர்வைப் பெறச் செய்தலும் பெண்ணியம் ஆகும். சமுதாயத்தில் பெண்களுக்கு ஆண்களிடமிருந்து சரியான மதிப்பினைப் பெற்றுத் தருதல் பெண்ணியத்தின் நோக்கமாகும். பெண்ணியம் என்பது ஆண்களை எதிர்க்கும் இயக்கம் அல்ல, மாறாக பெண்களுக்குச் சமமான உரிமைகளைச் சமுதாயத்தில் போராடிப் பெற நினைக்கும் ஓர் இயக்கமாகப் பெண்ணியம் நிலைத்து நிற்கின்றது.

## 1.2.பெண்ணிய வரலாறு

கி.பி 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பெண்ணியம் என்ற கோட்பாடு நவீனத்துவத்தின் சூழலமைப்பில் எழுந்தது. இதனைத் தொடர்ந்து பிரான்சு நாட்டைச் சார்ந்த சீமோன் தெ பௌவர் *(Simon De Beavoir*) எழுதிய இரண்டாவது பாலினம் (*The Second Sex,* 1949) என்ற நூலை முன்னோடியாகக் கொண்டு பெண்ணியம் ஓர்

8. இரா.பிரேமா, பெண்ணியம், ப. 13.
9. மேலது, ப. 12.

அறிவார்ந்த கொள்கையாகவும், போராட்டக் கருவியாகவும் முன் வைக்கப்பட்டது. இதனால் பல நாடுகளில் பெண்ணுரிமை ஒரு பிரச்சினையாகப் பேசப்பட்டது. பல இயக்கங்களும் தோன்றின. சமூகச் சீர்திருத்த உணர்வுடைய பலர் பெண்ணியம் பற்றிப் பேசவும், எழுதவும் முன் வந்தனர்.

## 1.3.பெண்ணியத்தின் தோற்றம்

'Feminism' என்ற ஆங்கிலச் சொல் கி.பி 19ஆம் நூற்றாண்டில் முதன் முதலாகப் பயன்படுத்தப்பட்டது. ஆனால் 18ஆம் நூற்றாண்டிலேயே ஆங்காங்கு பெண் விடுதலைச் சிந்தனை எழுச்சி பெற்றிருந்தது. இருப்பினும் பெண்ணியம் என்ற கோட்பாடு 19ஆம் நூற்றாண்டில்தான் காலூன்றத் தொடங்கியது. இக்கோட்பாட்டின் தோற்றம் பற்றி இரு வேறு கருத்துக்கள் நிலவி வருகின்றன.

> **"முதலாளித்துவத்திற்கு எதிராக எழுந்த மார்க்சிய வர்க்கப் போராட்டத்தில் ஆதிக்க வெறியர்களை எதிர்க்கும் நோக்கில் அதன் ஒரு பகுதியாக ஆண் ஆதிக்கத்திற்கு எதிராகவும், பெண் ஒடுக்கு முறைக்கு எதிராகவும் குரல் எழுப்பப்பட்டது. இதுதான் பெண்ணியத்தின் வேர் என்றும் இதிலிருந்துதான் பின்பு பெண்ணியம் தனி ஒரு கோட்பாடாக உருப்பெற்றது"**[10]

என்ற கருத்தை மார்க்சியப் பெண்ணியவாதிகள் கூறுகின்றனர். ஆனால், *'Pure Feminist'* என்று சொல்லக்கூடிய தூய பெண்ணியவாதிகள் இக்கருத்தை ஏற்றுக் கொள்ளவில்லை.

> **"பெண்ணியம் என்பது 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் மேலை நாடுகளில் பகுத்தறிவின் அடிப்படையில் ஆண்களுக்குச் சமமான உரிமைகள் வேண்டி பெண்கள் எழுப்பிய குரலில் தோற்றம் பெற்றது"**[11]

என்றே இவர்கள் கருதுகின்றனர். தோற்றம் வெவ்வேறாக இருந்தாலும், பெண்ணிய அமைப்புக்களால்தான் பெண்ணியச் சிந்தனை வளர்ந்தது. இவ்வளர்ச்சியின்

---

**10.** இரா. பிரேமா, பெண்ணிய அணுகுமுறைகள், ப. 18.
**11.** மேலது.

விளைவாகவே பெண்கள் தங்கள் மீது ஏவிவிடப்பட்டிருந்த அடக்கு முறைக்கு எதிராகத் தீர்க்கமாக எழுப்பிய குரலே பெண்ணியத்திற்கு எழுச்சியூட்டியது.

## 1.4.உலக அளவில் பெண்களின் போராட்டம்

சமுதாயத்தில் மாற்றங்கள் தோன்றுவது வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் அடிப்படையானது ஆகும். பதினெட்டாம் நூற்றாண்டு வரை சமூக மதிப்பீடுகள் அனைத்தும் மதச் சார்புடையதாக இருந்தன. சமுதாயத்தில் மதம் முழு ஆதிக்கம் செலுத்தியது. இச்சமூகத்தில் நிலவி வந்த தீமைகளும், மதத்தின் பெயரால் சமூகக் கட்டுப்பாடுகளைத் தளர்த்தக் கூடாது என்ற கொள்கையும் காலங்காலமாகக் கடைப்பிடிக்கப்பட்டு வந்தன.

## 1.5.பெண்ணியம் தோன்றக்காரணங்கள்

பதினெட்டாம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் சில மாற்றங்கள் உருவாகத் தொடங்கின. பல புதுமையான கருத்துக்கள் தோன்றின. மக்கள் விழிப்புணர்வுப் பெற்று காரண காரியங்களைப் பகுத்தறிந்து, தெளிந்து, உண்மை எனத் தெரிந்தவற்றை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் பரவத் தொடங்கியது. இதன் விளைவாக உலக வாழ்க்கையின் கூறுகள் அனைத்தும் ஆராய்ச்சிக்கு உட்படுத்தப்பட்டன. சமுதாயத்தில் வழி வழியாக வழங்கி வந்த ஏற்றத்தாழ்வுகள், ஆதிக்கம் முதலியவற்றை வலியுறுத்தும் மதிப்புகள் யாவும் விவாதத்திற்கு உரிய பொருளாயின. சமத்துவம், தனிமனித சுதந்திரம், குடியாட்சி, எல்லோருக்கும் ஒரே நியதி என்ற புதிய சமூக மதிப்புகள் உருவாகத் தொடங்கின.

## 1.6.மேலைநாடுகளில் பெண்ணியம்

அமெரிக்கா, இங்கிலாந்து, ஐரோப்பா போன்ற நாடுகளில் தொழிற்புரட்சிகள் தோன்றின. இதன் விளைவாகவும் பெண் கல்வியின் தாக்கத்தாலும் சமூகம், பொருளாதாரம், மதம், அரசியல் போன்றவற்றில் மாற்றங்கள் ஏற்பட்டன. அதன் காரணமாகப் பெண்கள் அவர்களுக்கெனக் குறித்த பணிகளை விட்டு வெளியேறி வந்து புறவாழ்க்கையில் ஈடுபட்டனர். இதனால் ஏற்கனவே நிலவிய மரபு சார்ந்த

**பெண்ணியம் மாறுதல் பெற்று, புதுவகைப் பெண்ணியம் தோன்றலாயிற்று. இவற்றில் முதன்மையானது பெண்கள் பெற்ற கல்வியறிவே ஆகும்.**

## 1.6.1.அமெரிக்காவில் பெண்ணியம்

**1848இல் அமெரிக்காவில் நியூயார்க்கில் உள்ள செனகா பால்ஸ் (*Seneca Falls)* என்ற இடத்தில் நடந்த மாநாடு உலகப் பெண்ணிய வரலாற்றில் ஒரு மைல் கல்லாகும். லுக்கிரிடியா மாட் *(Lucretia Mott*), எலிசபெத் கேடி ஸ்டேன்டன் *(Elizabeth Cady Stanton*) என்ற இரு பெண்மணிகள் இம்மாநாட்டை நடத்தினர். அப்பொழுது அவ்விருவரும் பெண்களுக்கான இயக்கம் ஒன்றை முறையாகத் தொடங்கினர். இம்மாநாட்டில், பெண்களுக்குச் சில சலுகைகள் வழங்கப்பட வேண்டும் என வற்புறுத்தினர். அவையாவன,**

> ***“திருமணமான பெண்களுக்குச் சொத்தில் உரிமை”*** [12]
>
> ***“கல்வியில் பெண்களுக்கு அதிக வாய்ப்பளித்தல்”*** [13]
>
> ***“தொழில், வணிகத் துறை மற்றும் வழிபடும் இடங்களில் (Church) பெண்களுக்கு வாய்ப்பளித்தல்”*** [14]

**என்ற கோரிக்கைகளை முன் வைத்தனர்.**

**அமெரிக்காவில் பெண்ணியத்தின் முன்னோடியாக எலிசபெத் கேடி ஸ்டேன்டனையும், சூசன் அந்தோணியையும் குறிப்பிடுவர். வாக்குரிமைக்காக மட்டுமல்லாமல் அடிமை ஒழிப்புக்காகவும் அவர்கள் போராடினர். அதனால் ஏற்பட்ட தாக்குதல்களையும் எதிர்கொண்டனர். அமெரிக்க நாட்டில் புராட்டஸ்டண்டு மதத்தின் ஒரு பிரிவினரான குவாக்கர்கள் சமூக ஒழுக்கச் சீர்திருத்தங்களில் ஈடுபட்டனர். பெண்களுக்கு அதிக சுதந்திரம் அளித்தனர். பெண்கள் தேவாலயப் பணிகளில் பாதிரிகள் ஆகவும், பொதுக் கூட்டங்களில் பேசவும் அனுமதிக்கப்பட்டனர். குடி ஒழிப்பு**

---

**12.** இரா.பிரேமா, பெண்ணியம், ப. 18.

**13.** மேலது.

**14.** மேலது.

மற்றும் அடிமை ஒழிப்பு ஆகிய இயக்கங்களிலும் குவாக்கர்களின் பங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

புராட்டஸ்டண்டு மதத்தின் மற்றொரு பிரிவினரான யூனிடெரியன்களும் பெண்ணிய எழுச்சியில் பங்கு கொண்டனர். பெண்களுக்கு எதிரானக் கட்டுப்பாடுகளை நீக்கி, கல்வியின் மூலம் மேலோங்கி இருந்தனர்.

ஏவாஞ்சிலிகள் பெண்கள் சமத்துவத்தைப் போற்றினர். 1830களில் நாடு முழுவதும் பரவலாக இவர்கள் பணியாற்றினர். விலைமாதரை நல்வழிப்படுத்தும் பணியிலும் ஈடுபட்டனர். பெண்கள் பொதுவாழ்க்கையில் ஈடுபட வாய்ப்புகள் ஏற்படுத்தப்பட்டது.

1819இல் வால்ட் விட்மன் என்பவர் மேற்கூறிய இயக்கங்களால் உந்தப் பெற்று பெண் விடுதலை, சமத்துவம் என்பவை பற்றி எழுதினார். இவர் சிறந்த அமெரிக்க நாட்டின் ஜனநாயகக் கவிஞர் ஆவார். இவர் பெண்களின் எதிர்கால நிலையை இலட்சியப் பூர்வமாக வடித்துத் தந்தார்.

அமெரிக்க நாட்டில் 1920ஆம் ஆண்டு பெண்களிடையே தீவிர மாற்றங்கள் தோன்றின. பெண்ணிய இயக்கங்கள் வாக்குரிமை பெற்றதனால் பெண்களின் முன்னேற்றத்திற்கு இருந்த தடைகள் முற்றிலும் அகற்றப்பட்டுவிட்டன. இளம் பெண்களிடம் சோசலிச உணர்வு தலை தூக்கியது. இதன் விளைவாக அவர்களிடம் தோற்றத்தில் மாற்றம், உடையில் மாற்றம், நவீன சிகை அலங்காரம் போன்ற மாற்றங்கள் உருவாகத் தொடங்கின. அதன் பின்னர் அமெரிக்காவில் பெண்ணியவாதிகள் செய்த பங்களிப்பானது, பெண் நலச் சட்டங்கள் உருவாவதற்கும் காரணமாய் அமைந்தன.

### 1.6.2.இங்கிலாந்தில் பெண்ணியம்

அமெரிக்காவைப் போலன்றி இங்கிலாந்தில் தொடக்ககாலம் முதலே பெண்ணியம் புரட்சிகரமான மார்க்சிய, சோஷலிசக் கருத்துக்களில் ஆரம்பமாயிற்று.

தொடக்ககாலப் பெண்ணியவாதிகள் 20 முதல் 25 வயதுடைய, கல்லூரிகளில் பயின்ற, அரசியல் ஈடுபாடுடைய பெண்கள் ஆவர். அவர்கள் கல்லூரியில் பயின்ற காலத்தில மார்க்சிசம் தீவிரமடைந்தது. அப்பெண்கள் மார்க்சிச அனுதாபிகளாயிருந்தனர். அவர்கள் அதிகாரம், அந்நியப்படுத்துதல் இவைகளை வெறுப்பவர்கள். இங்கு பெண்களின் குறைகளை முதலில் வெளிக்கொணர்ந்தவர்கள். சமூகத்தின் மேல்மட்டத்திலுள்ள பெண்களன்று; கூலி வேலை செய்யும் பெண்களே ஆவர். மார்க்சியத்தை ஆதரிக்கும் பெண்கள் அவர்களுடன் சேர்ந்து கொண்டு, உழைக்கும் பெண்களின் நிலையை மேம்படுத்த முயற்சிகள் எடுத்துக்கொண்டனர்.

ஆண்களுக்கும், பெண்களுக்கும் சம ஊதியம், குழந்தைகள் காப்பகம், விலைவாசிக் கட்டுப்பாடு, சமூக நலத்திட்டங்கள் போன்ற கோரிக்கைகளை வலியுறுத்தி அவர்கள் போராடினர். இவ்வமைப்புகளில் ஆணாதிக்கம் அதிகமாக இருந்தது. அவர்கள் முதலாளித்துவத்தை எதிர்த்தது போன்று ஆணாதிக்கத்தை எதிர்க்கவில்லை, அதனால் அமெரிக்காவைப்போல் இங்கிலாந்தில் பெண்ணுரிமை இயக்கம் என்ற ஒன்று தீவிரமாகச் செயற்படவில்லை.

ஆயினும், இங்கிலாந்து நாட்டுப் பெண்கள் அமெரிக்கா, பிரான்ஸ், ஜெர்மனி போன்ற நாடுகளில் செயற்பட்ட பெண்ணுரிமை இயக்கங்களைப் பற்றி அறிந்திருந்தனர். இக்காலகட்டத்திலும் இங்கிலாந்தில் பல்வேறுபட்ட நோக்கங்களுடன் பெண்ணியவாதிகள் சிறுசிறு அமைப்புகளாகச் செயல்பட்டனர். அவர்களை ஒன்று திரட்டிச் செயல்பட வைப்பது கடினமான செயலாக இருந்தது. ஆயினும், "பெண்களின் தேசிய ஒருங்கிணைப்புக் குழு" என்ற ஒன்று எல்லாப் பெண்ணுரிமை இயக்கங்களையும் ஒருங்கிணைத்துச் செயற்பட வழிவகை செய்யும் பொருட்டு தொடங்கப்பட்டது.

இவ்வாறாகப் பத்திரிகைகளின் மூலமும், ஆர்ப்பாட்டங்களின் மூலமும் பெண்ணியவாதிகள் பெண்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்த முனைந்தனர். 1970இல் நடந்த உலக அழகிப் போட்டிக்கு எதிர்ப்புத் தெரிவித்தனர். பெண்ணிய இயக்கங்கள் பெண் தொழிலாளர்களின் பிரச்சினைகளை வெளிக்கொண்டு வந்தன. இதனால் பெண்ணிய இயக்கங்களுக்கும், தொழிற் சங்கங்களுக்குமிடையே நட்புறவு நிலவியது. பொது உரிமை தேசியக் குழு (*The National Council For Civil Liberties)* என்ற அமைப்பு ஏற்படுத்தப்பட்டு, அது பெண்களின் உரிமைக்காகப் போராடியது. இவ்வாறு, இங்கிலாந்தில் பெண்ணியம் நன்கு வளர்ச்சி பெறத் தொடங்கியது.

### 1.6.3.ஐரோப்பாவில் பெண்ணியம்

ஐரோப்பாவில் 18ஆம் நூற்றாண்டில் சில சமுதாய மாற்றங்கள் தோன்றின. பெண்ணியம் பற்றிய பல புதுமையான கருத்துக்கள் இக்காலக் கட்டத்தில் தோன்றலாயின. எதையும் காரண காரியத்தோடு ஆராய்ந்து, தெளிந்து, உண்மையை மட்டும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் பரவத் தொடங்கின. சோசலிசவாதிகள், அறிஞர்கள், கவிஞர்கள் எனப் பல திறத்தார் ஐரோப்பியப் பெண்ணிய வளர்ச்சியில் ஈடுபட்டனர்.

ஐரோப்பியப் பெண்ணிய இயக்கத்தின் ஆணிவேராக மேரி உல்ஸ்டோன் கிராப்ட், ஜான் ஸ்டுவர்ட்மில் ஆகியோர் முன்னோடிகளாகத் திகழ்ந்தனர். சமூகத்தில் பெண்கள் தாழ்ந்த நிலையில் வைக்கப்பட்டிருந்தனர். அந்த நிலை மாற வேண்டும் என்ற கருத்துக்கள் ஆங்காங்கே உருவாகத் தொடங்கின. பெண்ணியச் சிந்தனை வளர்ச்சியில் இன்றியமையாத இடம் பிடித்தவர், மேரி உல்ஸ்டோன் கிராப்ட் ஆவார். அவர் எழுதிய "பெண்களின் உரிமைகளை நியாயப்படுத்தல்" (*Vindication of the Rights of Women*) என்னும் நூல், பெண்ணுரிமைப் போராட்டத்தை வலியுறுத்தி, புகழ் பெற்ற நூலாக விளங்கியது.

சமூகம் என்பது ஆண், பெண் ஆகிய இருபாலரையும் கொண்டது. ஆணுக்கும் பெண்ணுக்கும் அனைத்து வழிகளிலும் சமத்துவம் வேண்டும். எல்லாத் துறைகளிலும் வாய்ப்பும், பயிற்சியும் தரப் பெற்றால் பெண்கள் சிறந்து விளங்குவர். அரசியலில் ஈடுபட்டு பெண்கள் பாராளுமன்றம் வரைச் செல்ல வேண்டும் என்பதற்காகப் பெண் கல்வியை மேரி மிகவும் வற்புறுத்தினார்.

பெண்ணானவள் காம இச்சைக்குரிய கருவியாகத் திகழ்வதற்கு முன், பெண் என்பவள் ஒரு மனிதப் பிறவியாக அமைகிறாள். மனித மனத்தைப் பொறுத்த வரையில் பால் வேறுபாடு என்பது கிடையாது. சமுதாயம் தேவையின்றிப் பெண்களைக் குடும்ப அடிமைகளாகவும், காமப் பொருளாகவும் பயன்படுத்துகிறது. இதுவே பல்வேறு பிரச்சினைகளுக்குக் காரணமாக அமைகின்றன.

வில்லியம் காட்வினின் "அரசியல் நீதி" என்ற நூலில் பெண்ணியம் பற்றியக் கருத்துக்கள் நிறைய இடம்பெற்றுள்ளன. அதில் சமத்துவ, சமுதாய அமைப்புக்குச் சமூகச் சீர்திருத்தக் கூறுகளே மிகவும் இன்றியமையாதது எனக் குறிப்பிட்டுள்ளார். ஆண் - பெண் சமத்துவம், விதவைக் காதல் போன்ற செய்திகளை வரையறை செய்துள்ளார்.

இங்கிலாந்து நாட்டின் தத்துவச் சிந்தனைகளில் வில்லியம் காட்வினின் "அரசியல் நீதி" என்ற நூல் ஏற்படுத்தியுள்ள தாக்கத்தை வேறு எந்த நூலும் ஏற்படுத்தவில்லை என ஆஸ்லிட் என்ற எழுத்தாளர் கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது.[15]

1920ஆம் ஆண்டுக்குப் பின் இங்கிலாந்தில் பல பெண்ணிய இயக்கங்களும், போராட்டங்களும் தோன்றின. பெண் உரிமைக்கு ஏற்ற பல சட்டங்கள் ஏற்பட்டன. ஐரோப்பியப் பெண்கள் பெரும் மாறுதலுக்கு உள்ளானார்கள். அவர்களின் வாழ்க்கைப் போக்கு மாறியது. சமத்துவம் நிலவியது. பொதுப் பணிகளில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டனர். மேலை நாடுகளில் பெண்ணியக் கருத்துக்கள் வளர்ந்து காலப் போக்கில்

**15.** இரா.ஸ்ரீவித்யா, மு.நூ., ப. 16.

மாறிவந்த சமூகச் சூழலுக்கு ஏற்றவாறு பெண்ணியச் சிந்தனைகளும் புதிய மாற்றங்களை அடைந்தன.

அகில உலகப் பெண்கள் பத்தாண்டு (1975-1985), பெண்களின் முன்னேற்றத்திற்காகத் தொடங்கப்பட்டது. அது அவர்களின் முழுமையான கல்வி வளர்ச்சிக்குப் பயனுள்ளதாக அமைந்தது. இப்பத்தாண்டுக் காலத்தில் பெண்கள் அவர்களின் நிலையை அறிந்து கொள்ள ஏதுவாக இருந்தது. எல்லாவற்றிற்கும் மேலாக ஆண்களைப் போலப் பெண்களும் அறிவு, ஆற்றல் மிக்கவர்கள். அவர்களின் சேவையும், பங்கும் நாட்டின் ஒட்டுமொத்த முன்னேற்றத்திற்கு எந்த விதத்திலும் குறைந்தது அல்ல என்கிற எதார்த்தப் பார்வை யாவருக்கும் வர இந்த அகில உலகப் பெண்கள் பத்தாண்டு விளங்கியது எனலாம்.

## 1.7.இந்தியாவில் பெண்ணியம்

பதினெட்டாம் நூற்றாண்டில் மேலை நாட்டில் ஏற்பட்ட புதிய சிந்தனைகளும், கோட்பாடுகளும் இந்தியாவில் குறிப்பிடத் தகுந்த தாக்கத்தை ஏற்படுத்தின. இந்தியத் தேசியமும், இந்தியப் பெண்ணியமும் ஒரே கால கட்டத்தில் கட்டமைக்கப்பட்டது. இந்தியத் தேசிய விடுதலை இயக்கப் போராட்டத்தில்தான் பெண்கள்வீட்டைவிட்டு வெளியில் வந்து மிகப்பெரிய அளவில் பங்கேற்றனர். அப்போதுதான் பெண்ணியம் தொடர்பான விழிப்புணர்வும் தொடங்கியது. அன்றைய காலகட்டத்தில்தான் பெண்களின் ஒடுக்குமுறைக்கு எதிரான நிகழ்வுகள் நாடெங்கும் பரவத் தொடங்கின. விதவை மறுமணத்திற்கு ஆதரவு, பலதார மணத்திற்கு எதிர்ப்பு, உடன்கட்டை ஏறுவதைத் தடுத்தல், பெண்கல்வியின் தேவை மற்றும் சட்ட ரீதியான சமத்துவம் போன்ற செயற்பாடுகள் வலியுறுத்தப்பட்டன. மேலை நாட்டுப் பெண்ணியத்திற்கு எதிராக இந்தியப் பெண்ணியம் உருவாக்கப்பட்டது. விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்ட தேசியத் தலைவர்கள் பலர் பெண்களின் பிரச்சினைகளை மையப்படுத்திப் பல போராட்டங்களில் ஈடுபட்டனர். இராஜாராம் மோகன்ராய், ஈஸ்வர சந்திர வித்யாசாகர், தேவேந்திரநாத் தாகூர், கேசவ சந்திரசென், ஜோதிபா.ஃபூலே, பைராம்ஜி மலபாரி,

சுரேந்திரநாத் பானர்ஜி, கோபால கிருஷ்ண கோகலே, மகாத்மா காந்தி போன்றோர் சாதி ஒழிப்பு, விதவை மறுமணம், பெண் கல்வி, குழந்தை மண எதிர்ப்பு முதலிய சீர்திருத்தங்களுக்காகப் பாடுபட்டனர்.

ஆணுக்கு ஒரு நீதி, பெண்ணுக்கு ஒரு நீதி என்று வகுத்துப் பெண்ணடிமைத் தனத்தைச் சட்டமாக்கியிருந்த மனுநீதியை எதிர்த்துக் குரல் கொடுக்கும் போக்குகள் ஆங்கில ஆட்சிக்குப் பின்னரே பெண்களிடையே ஏற்பட்டது. பெண்களுக்குச் சுதந்திரம், சம உரிமை, விதவை மறுமணம், உடன் கட்டை எதிர்ப்பு, பெண் கல்வி முதலானவற்றில் பெண்ணியம் விழிப்புணர்வுப் பெற்றது.

> **"பண்டித இராமாபாய், அன்னி பெசன்ட், சரோஜினி தேவி, ருக்மணி லட்சுமிபதி, முத்துலட்சுமி ரெட்டி, கமலா தேவி, சட்டோபாத்யாயா, விஜயலட்சுமி பண்டிட் முதலியோர் இந்தியப் பெண்களின் முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டவர்களுள் குறிப்பிடத் தகுந்தவர்களாவர்"**[16]

எனப் பெண்ணிய முன்னோடிகளைப் பட்டியலிட்டுள்ளார் ஸ்ரீவித்யா.

1886இல் சுவர்ணகுமாரி தேவி அவர்களின் தலைமையில் பெண்கள் கூட்டமைப்பு உருவாக்கப்பட்டது. அதன் பின்னர் 1917, மே 8ஆம் நாள் சென்னையில் அன்னி பெசன்ட் அம்மையார் தலைமையில் "இந்தியப் பெண்கள் கூட்டமைப்பு" என்கிற அமைப்பு உருவானது. ஜாலியன் வாலாபாக் படுகொலைக்குப் பின்னர் ஏற்பட்ட இந்தியத் தேசிய எழுச்சியில்தான் முதன் முதலில் இந்தியப் பெண்கள் போராட்டக் களத்தில் முழுவதுமாகப் பங்கேற்றனர். ஆங்கிலேயர்கள் கொண்டு வந்த நிறுவனக் கல்வி முறையும் பெண்களின் விழிப்புணர்வுக்குத் தூண்டுகோலாக அமைந்தது.

### 1.7.1.இந்தியப் பெண்ணிய அமைப்பு

இந்தியாவில் ஆங்கிலேயர்களின் முயற்சியால், பெண்களின் கீழானநிலை, அதிலிருந்து மீள வேண்டும் என்ற எண்ணம் உருவானது. பெண்கள் முதலில் தங்களை உணர்ந்தால்தான் அவர்களைத் திருத்த முடியும். எனவே, பெண்களின் அமைப்புகள்

---

**16.** இரா. ஸ்ரீவித்யா, மு.நூ.,ப. 18.

தோன்றின. இந்தியப் பெண்களின் கூட்டமைப்பு, இந்தியத் தேசியப் பெண்கள் குழு, அகில இந்தியப் பெண்கள் மாநாடு போன்ற அமைப்புகள் தோன்றின.

### 1.7.2.இந்தியப் பெண்களின் கூட்டமைப்பு

இந்தியப் பெண்களின் கூட்டமைப்பானது 1917 ஆம் ஆண்டு மே 8 ஆம் நாள் சென்னை அடையாறில், ஐரிஸ் நாட்டைச் சேர்ந்த அன்னிபெசன்ட் அம்மையாரைத் தலைவராகக் கொண்டு தோன்றியது. இவ்வமைப்பு தொடர்ந்து போராடி அனைத்து மாகாணங்களிலும் பெண்களுக்கு ஓட்டுரிமையை, ஆங்கில அரசிடமிருந்து வாங்கித் தந்தது. இது "அகில இந்தியப் பெண்கள் மாநாடு" என்ற அமைப்புடன் சேர்ந்து 1936 இல் இந்தியப் பெண்கள் மதிப்பு, அரசியல், சட்டம், பொருளாதாரம், கல்வி பற்றிய அறிக்கை ஒன்றை இந்திய அரசாங்கத்திற்கு அளித்தது.

### 1.7.3.இந்திய தேசியப் பெண்கள்குழு

இவ்வமைப்பு 1925ஆம் ஆண்டு அகில உலகப் பெண்கள் அமைப்பைத் தலைமையாகக் கொண்டு, அதனோடு இணைந்து செயல்படத் தொடங்கியது. மேலும், இவ்வமைப்பு இந்தியாவிலுள்ள பெண்களை ஒன்று சேர்த்து ஒருவர் மீது ஒருவர் அக்கறை கொள்ள வழிகாட்டியது. சில நூறு ஆண்டுகளுக்கும் மேலாக இருந்து வரும் பெண் அடக்குமுறை, பெண்களுக்கான சட்ட, சமூக இயலாமைகள் போன்றவற்றைப் போக்கி ஒரு தகுதியை ஏற்படுத்திக் கொடுக்க உதவியது.

கி.பி.1939இல் கூடிய பெண்கள் சபை ஒன்றில் இந்தியப் பெண்களின் சமூகநிலை எவ்வாறு இருத்தல் வேண்டுமென்பதைக் குறித்து நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களின் சுருக்கம் பின்வருமாறு,

1. **பெண்களின் நிலை எல்லா வகையிலும் ஆண்களுக்குச் சமமாயிருத்தல் வேண்டும்.**
2. **பெண்களுக்கு வாக்குரிமை வேண்டும்.**
3. **அவர்களும் உத்தியோகம் பெற்று, ஆடவரைப் போன்று ஊதியம் அடைதல் வேண்டும்.**

4. **வயதான பெண்களும், ஆண்களும் விரும்பினால் மணந்து கொள்வதற்குச் சாதி, மதம் என்னும் கட்டுப்பாடுகள் இருத்தல் கூடாது.**
5. **பெண்கள் பருவமடைவதன் முன் மணஞ்செய்து கொள்வதைச் சட்டம் தடைசெய்தல் வேண்டும்."**[17]

மேலும் பெண் உழைப்பாளிகள், தொழிலாளர்களுக்குக் கூலி உயர்வு, மகப்பேறு காலப் பண உதவி, பெண்களுக்கெனத் தனிச் சிறைச்சாலை, அதில் பெண் காவலர்களை நியமித்தல் போன்றவற்றைச் செயல்படுத்தியது.

### 1.7.4.அகில இந்தியப் பெண்கள் மாநாடு

திருமதி "குயிட் கோப்பர்" என்ற ஆங்கிலேயப் பெண்மணி பெண் கல்வி பற்றியும், எதிர்காலத்தைப் பற்றியும் பெண்கள்தான் துல்லியமாக முடிவெடுக்க முடியும் என்ற கருத்தில் இந்தியப் பெண்கள் பற்றிப் பல கட்டுரைகள் எழுதி வந்தார். இக்கட்டுரைகள் "ஸ்திரிதர்மா" என்ற இதழில் வெளிவந்தன. இவ்விதழின் பொறுப்பாளரான "எம்.இ.கசின்ஸ்" என்பவர் பெண்கள் சிந்தித்துச் செயலாற்ற வேண்டுமானால், ஒரு மாநாடு அவசியம் எனக் கருதி நாடு முழுவதும் உள்ள பெண்களுக்கு ஒரு சுற்றறிக்கை அனுப்பினார். எல்லாப் பெண்களும் தேசிய அளவில் ஒருங்கிணைந்து தொடக்கக் கல்வி பற்றி ஆராய்ந்து கருத்துக்களை வெளியிட வேண்டும் என்பதே இவ்வறிக்கையாகும்.

இவ்வறிக்கை செய்தித்தாளில் வெளியிட்டதோடு இல்லாமல், ஐந்நூறு பெண்களுக்குத் தனிப்பட்ட முறையிலும் அனுப்பப்பட்டது. மேலும், வெவ்வேறு இடங்களில் இருபத்தியிரண்டு மாநாடுகள் நடத்தி, கல்வி மற்றும் சமூகச் சீர்திருத்தம் பற்றியும் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. இதனை,

**"பெண்களின் கல்வி நிலை உயர்வு, சமூக நிலை உயர்வு, தொழில் உயர்வு ஆகியன பற்றி இம்மாநாடுகளில் விவாதிக்கப்பட்டது. குழந்தை மணத்தின் பாதிப்பு, பிற்படுத்தப்பட்டோர் நலம் மற்றும் ஓட்டுரிமை என்று**

---

**17.** ந.சி. கந்தையாபிள்ளை, பெண்களும் சமூகமும், ப. 56.

**ஒவ்வொரு பிரச்சினைக்கும் ஒரு குழு அமைத்து, இப்பிரச்சினைகளுக்குப் படிப்படியாகத் தீர்வு காண முற்பட்டன"**[18]

என்பதை இவ்வரிகள் விளக்கி நிற்கின்றன.

1934ஆம் ஆண்டு சிகாகோ நகரில் நடந்த உலகப் பெண்கள் ஒருங்கமைப்பின் கூட்டத்திற்கு இந்தியப் பெண்கள் சார்பாக திருமதி முத்துலெட்சுமி ரெட்டி அம்மையார் கலந்து கொண்டு சிறப்புரை நிகழ்த்தினார். இவர் பெண்களுக்கான சமூகத் தொண்டில் தமது தனி முத்திரையைப் பதித்தவர் ஆவார்.

1940 வரையில் பல இந்தியப் பெண் அமைப்புகள் தோற்றம் பெற்றன. இந்தியப் பல்கலைக்கழகப் பெண்கள் ஐக்கிய சங்கம், ரத்தன் டாட்டா பயிற்சி மையம், ஜோதி சங்கம், விக்காங் கிரிஜா போன்ற அமைப்புகள் பெண்களுக்காகப் பாடுபட்டு இந்தியப் பெண்களின் முன்னேற்றத்தை உயர்த்தின. மேலும், பெண் குழந்தை மணம், கைம்பெண் கொடுமை, தேவதாசி முறை போன்ற சமூகக் கொடுமைகளிலிருந்து பாதுகாக்கவும் முயன்றன. இவ்வமைப்புக்கள் உலக நாடுகளிலுள்ள பெண் அமைப்புக்களோடு தொடர்புகள் ஏற்படுத்திக் கொண்டு, வெளிநாடுகளில் நடக்கும் மாநாடுகளுக்குப் பிரதிநிதிகளை அனுப்பியும், தாங்கள் நடத்தும் மாநாட்டிற்குப் பிற நாட்டுப் பிரதிநிதிகளை அழைத்தும் கருத்துப்பரிமாற்றம் செய்து கொண்டன.

1940இல் இந்திய விடுதலைப் போராட்டம் தீவிரமடைந்தது. மகாத்மா காந்தி விடுத்த அழைப்பின் பேரில் விடுதலைப் போராட்டத்தில் ஒரு சில பெண்களே தீவிரமாகக் கலந்து கொண்டாலும், உப்புச்சத்தியாக்கிரகத்தில் மிகுதியான பெண்கள் கலந்து கொண்டு சிறை சென்றனர். படித்த பெண்களும், படிக்காத பெண்களும் வீட்டை விட்டு வெளியே வராமல் சமுதாய மதிப்பீடுகளுக்குப் பயந்திருந்த மக்கள், காந்தியடிகள் அழைத்தபோது முதன் முதலாகப் போராட்டங்களில் கலந்து கொண்டனர். இதனை கார்வ் என்பவர்,

---

**18.** இரா.பிரேமா, பெண்ணியம், ப. 104.

***"சமூகச் சீர்திருத்த இயக்கங்கள் பெண்களின் சமூகத் தகுதியை உணர்த்தியது என்றும், காந்தியடிகளின் இயக்கம் பெண்களுக்கு தேசிய செயல்பாடுகளில் வாய்ப்பு அளித்து, அவர்கள் தனித்திறனை வளர்த்தது"***[19]

என்று கருத்துரைத்துள்ளதாக இரா.பிரேமா தமது நூலில் கூறியுள்ளது குறிப்பிடத்தகுந்ததாகும்.

விடுதலைக்குப் பின் 1953இல் மத்திய சமூகநல வாரியம் ஒன்றை இந்திய அரசாங்கம் அமைத்தது. இவ்வாரியம் நாடெங்கிலும், கிராமப்புறங்கள் உட்பட ஐம்பதினாயிரம் மகிளா மண்டலங்களைத் தோற்றுவித்து, பெண்களின் சுதந்திரத்திற்குப் பாடுபட்டது.

கி.பி.1960இல் இருந்து இந்தியப் பெண்ணியப் போக்கில் பெரும் மாறுதல் ஏற்பட்டது. பெண் அமைப்புகள் சீர்திருத்தப் பணிகளிலிருந்து விலகி பெண்களின் உரிமைக்கானப் போராட்டத்தில் ஈடுபடத் தொடங்கின. இந்த அமைப்புகள் உழைத்துப் பிழைக்கும் மகளிருக்காகப் போராடின. போராட்டம் "விபூதி பட்டேல்" என்பவரின் தலைமையில் உச்சக்கட்டத்தை அடைந்தது. இப்போராட்டத்தில் ஏழு ஏழைப் பெண்கள் உயிரிழந்தனர். இவர்கள் "ஏழு தியாகிகள்" என்று அழைக்கப்பட்டனர்.

பீகார், மத்தியப்பிரதேசம், மகாராஷ்டிரம் ஆகிய மாநிலங்களில் பழங்குடி மகளிரும் ஈடுபட்டனர். பணக்காரர்கள் இப்பெண்களைக் கற்பழித்துத் துன்புறுத்தியது, ஆண்கள் குடித்துவிட்டு தங்கள் மனைவியரை அடித்துத் துன்புறுத்தியது ஆகியவற்றை எதிர்த்து இப்போராட்டங்கள் மேற்கொள்ளப்பட்டன. இதனைத் தொடர்ந்து பெண்களின் உரிமையை மீட்டெடுப்பதற்காகப் பல போராட்டங்கள் நடைபெற்றன.

## 1.8.சர்வதேச பெண்களுக்கான ஆண்டு

1975ஆம் ஆண்டை சர்வதேச பெண்களுக்கான ஆண்டாக யுனெஸ்கோ அறிவித்தது. இதனைத் தொடர்ந்து ஒவ்வோர் ஆண்டும் மார்ச் 8ஆம் நாள் உலகப்

**19.** இரா.பிரேமா, பெண்ணியம், ப. 106.

பெண்கள் தினமாக உலகம் முழுவதும் கொண்டாடப்பட்டு வருகிறது. இதன் பின் இந்தியப் பெண்கள் வாழ்வில் குறிப்பிடத்தகுந்த மாற்றங்கள் ஏற்படலாயின. இதன் தொடக்கமாக இதே ஆண்டு மார்ச் 8ஆம் நாள் புனாவில் இடதுசாரிகள் ஐக்கியப் பெண்கள் கூட்டமைப்பு மிகப்பெரிய அளவில் விழா எடுத்துக் கொண்டாடினர். இவ்விழாவில் சாதி, மதம், பொருளாதாரம், கல்வி என்ற எந்தப் பாகுபாடும் பார்க்காமல் பெரும்பான்மையினர் பங்கேற்றனர்.

1975ஆம் ஆண்டை சர்வதேசப் பெண்கள் ஆண்டாக உலகம் முழுவதும் கொண்டாடி வந்த வேளையில் இந்திய அரசு அவசரநிலைப் பிரகடனத்தை வெளியிட்டது. இதனால், இதனைத் தொடர்ந்து இரண்டு ஆண்டுகள் பெண்கள் இயக்கங்கள் செயல்பட முடியாமல் முடங்கிக் கிடந்தன. அவசரநிலை முடிவிற்கு வந்தபின் இந்தியாவில் எண்ணற்ற பெண்கள் தன்னார்வக் குழுக்கள் தோற்றுவிக்கப்பட்டன. இக்குழுக்கள் படிக்காத மக்களிடம், மரபு வழியாக மண்டிக் கிடக்கும் மூடநம்பிக்கைகளையும், சடங்குகளையும் போக்குவதற்குப் பாடுபட்டன. மேலும் இத்தன்னார்வக் குழுக்கள், பெண்கள் பொருளாதார முன்னேற்றம் காணவும், அடிமைத் தளையிலிருந்து விடுதலை பெறவும் போராடின.

சுரண்டலை எதிர்ப்பதுடன், பாலினப் பாகுபாட்டைக் களையவும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. மேலும், இக்குழுக்கள் பெண்கள் முன்னேற்றத்திற்காகவும், பாதுகாப்பிற்காகவும் சில நோக்கங்களை முன்வைத்தன. அவையாவன:

1. *பெண்களிடம் அவர்களுக்கு உள்ள சட்ட பாதுகாப்பை எடுத்துரைப்பதுடன் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்துவது.*
2. *பெண்கள் பாலியல் சுரண்டல், பொருளாதாரச் சுரண்டலுக்கு உள்ளாகிறார்கள் என்பதைத் தெரிவிப்பது.*
3. *காலங்காலமாக மரபு வழியாகப் பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளைப் புரிய வைப்பது.*

4. விழிப்புணர்வுடனும், தைரியமாகவும் எதையும் எதிர்கொள்ளப் பெண்களை ஆயத்தப்படுத்துவது.
5. பாலியல் பலாத்காரம், வரதட்சணைக் கொடுமைகள் போன்றவற்றுக்கு முடிவு காண்பது.
6. உடல் ரீதியாகவும், மன ரீதியாகவும் பெண்கள் கணவன் வீட்டாரால் துன்புறுத்தப்படுவதற்குத் தீர்வு காண்பது.
7. பணியிடங்களில் பாலியல் தொல்லைகள் ஏற்பட்டால் அதனை எதிர்கொள்வது குறித்து பயிற்சி அளிப்பது.
8. திருமணமான பெண், கணவன் வீட்டில் இயற்கைக்கு மாறாக இறந்தால் சட்டத்தின் வழி உரிய தீர்வு காண்பது.
9. குடும்பத்திற்குள் காலங்காலமாகப் பெண்கள் அனுபவிக்கும் துன்பத்திற்கு முடிவு காண்பதோடு, இத்துன்பம் எல்லை மீறும்போது சட்டப் பாதுகாப்பைப் பெறுவது.
10. குடும்ப வன்முறையாலோ, வரதட்சணைக் கொடுமையாலோ ஒரு பெண் இறந்தால் அப்பெண்ணின் உடலை உடற்கூறாய்வு செய்து அதன் வழி நடவடிக்கை எடுத்தல்.
11. விளம்பரங்கள், திரைப்படங்கள் உள்ளிட்ட ஊடகங்களில் பெண்கள் கவர்ச்சிப் பொருளாகக் காட்டப்படுகின்றனர். இதற்கு எதிரான நடவடிக்கைகளைத் துரிதப்படுத்துவது.[20]

இவ்வாறு சர்வதேசப் பெண்கள் ஆண்டைத் தொடர்ந்து பெண்கள் தற்சார்புடனும் சுதந்திரமாகவும் வாழத் தொடங்கினர். கல்வி, பொருளாதாரச் சுதந்திரம் பெற்றதோடு தங்கள் குழந்தைகளுக்கு எதிர்காலத்தைப் புரியவைத்தனர். பாலின ஏற்றத்தாழ்வு, முறையற்ற சுரண்டல் ஆகியன முடிவிற்கு வந்தன. இதனால் பெண்கள் தங்களின் அடிப்படை உரிமைகளைப் பெற்று, சமுதாயத்தில் தனித்துவம் பெறத் தொடங்கினர்.

---

20. முனைவர் ஆ. ஜெகதீசன், பாலின சமத்துவம், பக். 167-168.

## 1.9.பெண்ணியத்தின் மூன்று அலைகள்

பெண்ணியம் என்ற கோட்பாடானது தொடக்க காலத்தில் இருந்து தற்காலம் வரை மூன்று முக்கிய நிலைகளைக் கடந்து வந்துள்ளது. அவற்றைப் பெண்ணியத்தின் 1.முதல் அலை, 2.இரண்டாம் அலை, 3.மூன்றாம் அலை என்று வகைப்படுத்தியுள்ளனர் பெண்ணியவாதிகள்.

### 1.9.1.முதல் அலை பெண்ணியம் *(First - Wave Feminism)*

முதல் அலை பெண்ணியம் என்பது பத்தொன்பதாம் நூற்றாண்டிலும், இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் ஐக்கிய நாடுகள் மற்றும் அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் நடை பெற்ற பெண்ணியச் செயல்பாடுகளைக் குறிப்பதாகும். இது பெண்களின் சமுதாய அமைப்பில் மற்றும் சட்டங்களில் காணப்படும் ஆண், பெண்ணுக்கான ஏற்றத் தாழ்வுகளை எடுத்துரைத்து, அவற்றைச் சமப்படுத்த வேண்டும் என்ற நோக்கில் பெண்ணியவாதிகளால் கையாளப்பெற்ற உத்தியாகும். இதனை,

> **"நடுத்தரப் பெண்ணின் கல்வி, வேலை வாய்ப்பு, திருமணச் சட்டங்கள் போன்றவற்றில் காணப்பட்ட சமமற்ற தன்மையை எதிர்த்துப் போராடுவதாக இவ்வியக்கம் அக்காலத்தில் அமைந்திருந்தது. இது பணிக்குப் போகும் பெண்களின் இன்னல்கள் குறித்துக் கூட கருத்துத் தெரிவிக்க இயலாத தொடக்ககாலப் பெண்நிலை வாத அடிப்படை வாய்ந்ததாக இருந்தது. மேலும் இது நவீனத்துவ அடிப்படையில் இவ்வியக்கத்தை நடத்திச் செல்லவில்லை. இத்தகைய பின்னடைவுகள் இருந்த போதும் இதுவும் ஓரளவிற்கு ~ தான் கொண்ட கொள்கைகளில் வெற்றி கண்டது"**[21]

என்று முதல் அலை பெண்ணியம் பற்றிக் குறிப்பிடுகிறார்.

பெண்களின் கல்வியில் பல மாற்றங்கள் உருவாக முதல் அலை பெண்ணியம் முக்கியக் காரணமாக அமைந்தது. பெண்கள் உயர்கல்வி கற்க இருந்த தடைகள் நீங்கின. ஆண்களைப் போலவே பெண்களும் அனைத்துத் துறைகளிலும் சம உரிமை பெற்றனர்.

---

**21.** மு.பழனியப்பன், மகாராணியின் அலுவலக வழி, ப. 1.

### 1.9.2.இரண்டாம் அலை பெண்ணியம் *(Second - Wave Feminism)*

ஆயிரத்து தொள்ளாயிரத்து அறுபதுகளின் பிற்பகுதியிலும், ஆயிரத்து தொள்ளாயிரத்து எழுபதுகளிலும் நடந்த பெண்ணியச் செயல்பாட்டைக் குறிப்பதே இரண்டாம் அலை பெண்ணியமாகும். பெண்களின் சுதந்திரத்திற்காகவும், உரிமைக்காகவும் போராடிய அரசியல் செயல்பாட்டை இது குறிக்கிறது. முதல் அலை பெண்ணியம் வாக்குரிமைப் போராட்டத்தோடு தொடர்புடையது என்றால், இரண்டாம் அலை பெண்ணியம், பொருளாதாரச் சமத்துவத்தை நோக்கிய போராட்டத்தோடு தொடர்புடையது எனலாம்.

அதுமட்டுமின்றி அறிவு, கல்வி, கல்வித்துறையின் செயல்பாடுகள் ஆகியவற்றையும், இவ்வகைப் பெண்ணிய அலை மையப்படுத்துகிறது. கேட் மில்லட்டின் "பாலியல் அரசியல்" என்னும் நூல், அனைத்துத் தளங்களிலும் செயல்படுகிற ஆண்களின் தந்திர அரசியலை அம்பலப்படுத்தியது. இந்த நூல் அமெரிக்கச் சிந்தனையில் மிகப் பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியது. பெண்ணியத்தின் தாய் எனப் போற்றப்படும் பெட்டி பிரைடன் *(Betty Friedan)* 1963 இல் "பெண்ணியல்பு புதிர்நிலை" *(Feminine Mystique)* என்ற நூலின் மூலம் மிகப் பெரிய அதிர்வினை ஏற்படுத்தினார்.

1968 இல் நடத்தப் பெற்ற "மிஸ் அமெரிக்கா" என்ற அழகிப் போட்டிக்கு எதிராக அமெரிக்காவில் மிகப் பெரிய பேரணிகளும், கண்டன முழக்கங்களும் நடைபெற்றன. இதனைத் தொடர்ந்து உலக அளவில் பெண்கள் பல போராட்டங்களை நடத்தி வந்தனர் இக்காலத்தில்,

> **"பெண்ணியம், கறுப்புப் பெண்ணியம், ஓரினச் சேர்க்கைப் பெண்ணியம், சமூகப் பெண்ணியம் எனப் பலவகைகளில் பிரிவுபட்டு வளரத் தொடங்கியது"**[22]

22. மு.பழனியப்பன்,மு.நூ., ப. 1.

என்ற செய்தியை மகாராணியின் அலுவலக வழி என்னும் நூலின் வழியாக அறியமுடிகின்றது.

மறுஉற்பத்தி, அனுபவம், வேறுபாடு என்ற மூன்று விசயங்களை இரண்டாம் அலை பெண்ணியம் வளர்த்தெடுத்தது. இவ்அலை பெண்ணியம் உலகம் தழுவிய பெண் விடுதலைக்காகவும் உரிமைக்காகவும் போராடத் தொடங்கியது.

### 1.9.3.மூன்றாம் அலை பெண்ணியம் (*Third - Wave Feminism*)

ஆயிரத்து தொள்ளாயிரத்து தொண்ணூறுகளின் முற்பகுதியில் முகிழ்த்த பெண்ணிய இயக்கத்தினை மூன்றாம் அலை பெண்ணியம் என்பர். இரண்டாம் அலை பெண்ணியமானது சமூகத்தில் குறுக்கும், நெடுக்குமாக விரவியிருக்கும் ஆணாதிக்கக் கூறுகளை அடையாளப் படுத்துகிறது. மூன்றாம் அலை பெண்ணியமோ, பாலிற்கும், பாலினத்திற்கும் உள்ள வித்தியாசத்தை மையப்படுத்துகிறது. இதன் மூலம் இயற்கைக்கும் கற்பித்தலுக்கும் உள்ள முரணை, அரசியலை வெளிக் கொணர்கிறது.

இரண்டாம் அலை பெண்ணியவாதிகள் போராடிய பால் சமத்துவம் இன்னும் எட்டப் பெறாத ஒன்றாக விளங்குவதால், அதனை அடையும் வரை அவ்வகையான பெண்ணியச் செயல்பாடு தொடர வேண்டும்.

அதே நேரத்தில், சமத்துவம் என்பது பாலின அல்லது பாலியல் வெளிப்பாட்டில் வரம்பினை ஏற்படுத்தலாகாது. ஆணாக இருப்பது எந்த அளவிற்கு மதிப்பு வாய்ந்ததாக இருக்கிறதோ, அந்த அளவிற்குப் பெண்ணாக இருப்பதும் மதிப்பு வாய்ந்ததே. அனைத்துத் துறைகளிலும், அனைத்துப் பெண்களின் விருப்பத் தேர்வினை உள்ளடக்கியதே சமத்துவம்.

பிரச்சினையின் பெரும்பகுதியே பாலினம், பாலியல், பெண்ணியம் - ஆகியவற்றை வரையறை செய்வதுதான். எந்த ஒன்றை வரையறை செய்தாலும், அது மூன்றாம் உலகப் பெண்ணியமாக இருந்தாலும் சரி, அந்த வரையறை,

வரையறுக்கப்படும் பொருளை ஒரு வரம்புக்குள், கட்டுக்குள் கொண்டு வந்து நிறுத்தி விடுகிறது.

இன்றியமையாத ஆற்றலைக் கொண்டிருக்கிற பொது மொழியில் அமைந்த கருத்துக்களை வரவேற்கிறது என்று மூன்றாம் அலை பெண்ணியத்தில் சில கருத்துக்களை முன் வைக்கிறார் பாஸ்கர்.[23]

இவ்வாறு பெண்ணிய இயக்கம் மூன்று அலைகளாகக் கால நிலையில் பிரிந்து பெண்களை எல்லாத் துறைகளிலும் முன்னேற்றி வருகிறது.

## 1.10.பெண்ணிய வகைப்பாடுகள்

பெண்ணியம் அல்லது பெண்ணிலை வாதம் என்பது ஒரே நிலைப்பாடு கொண்டதல்ல. அதனுள் இணைந்துள்ள பெண்களின் வாழ்க்கைச் சூழலுக்கும், அனுபவத்திற்கும் ஏற்ப பலவிதமான கருத்துக்கள் காணக்கிடக்கின்றன. அப்பெண்ணிய வகைப்பாடுகள் குறித்துப் பின்வருமாறு விளக்கலாம்.

### 1.10.1.மிதவாத அல்லது தாராளவாதப் பெண்ணியம் *(Liberal Feminism)*

பதினெட்டாம் நூற்றாண்டில் இவ்வகைப் பெண்ணியம் தோன்றியது. தனிநபர் சுதந்திரம் அரசால் காப்பாற்றப்பட வேண்டும் என்ற கருத்து இக்கொள்கைக்கு அடிப்படையாகும். இது பெண்ணின் சிறப்புக்களைக் கூறுவதிலேயே அதிகக் கவனம் செலுத்தியது. கடவுளுக்கு முன், ஆண் - பெண் எல்லோரும் சமம் என்று சொல்லுகிற அதே நேரத்தில், அதற்காகப் போராடுவதைத் தவிர்க்கிறது. மாறாக, வழக்காடு மன்றங்கள், சட்டமன்றங்கள் முதலியவற்றிற்குப் போவதில் ஆர்வம் கொள்கிறது.

பெண் விடுதலை பற்றி ஆடவர் மிகுதியாக எழுதி வருவது குறிப்பிடத் தக்கதாகும். மேரி உல்ஸ்டோன் கிரா∴ப்ட் தாராளவாதப் பெண்ணியக் கோட்பாட்டாளராகக் கருதப்படுகிறார். வாழ்வின் எல்லாக் கட்டத்திலும் பெண்களுக்கு உரிமைகளும், சந்தர்ப்பங்களும் சமமாகக் கிடைக்க வேண்டும் என்பது இவர் தம்

---

**23.** *Bhasker, A.Shukla, Women on Women: A Feminist Study, P. 11.*

கருத்தாகும். ஜான் ஸ்டுவர்ட் மில் எழுதிய "பெண்ணடிமைத்தனம்" (1869) என்ற நூல் தாராளவாதப் பெண்ணியத்தின் ஆதி நூலாகக் கருதப்படுகிறது.

மிதவாதப் பெண்ணியலார், குடும்ப அமைப்பை அப்படியே ஏற்றுக் கொண்டு சமூகப் பழக்க வழக்கங்களில் மாறுதல்களைக் கொண்டு வர விரும்பினர். இவர்கள் சமூக அமைப்பு ஆகியவற்றை, குறிப்பாகக் குடும்ப அமைப்புப் பற்றி ஏதும் சிந்திக்கவில்லை. சட்டங்களின் தொகுதி சமூகத்தை மாற்றிவிடும் என நம்பினர். இவ்வாறு இப்பெண்ணியம் பெண்ணினுடைய குடும்ப, சமூக வாழ்வில் சீர்திருத்தும் பணியை மேற்கொண்டது.

### 1.10.2.தீவிரவாதப் பெண்ணியம் (*Radical Feminism)*

தாராளவாதப் பெண்ணியத்திலிருந்து விலகி வந்த அமைப்பே தீவிரவாதப் பெண்ணியமாகும். இதனை,

> "*Radical'* என்ற ஆங்கிலச் சொல்லுக்கு 'வேர்' (*Root*) என்பது பொருள். இச்சொல் லத்தீன் மொழியிலிருந்து உருவான சொல்லாகும். சமுதாயத்தில் உள்ள பிரச்சினைகளின் காரணங்களை வேரிலிருந்து ஆராய்வது என்பதைக் கருத்தில் கொண்டே *'Radical'* என்ற சொல்லைப் பெண்ணியவாதிகள் பயன்படுத்தினர். தமிழில் இதைத் 'தீவிரவாதம்' என்று மொழி பெயர்த்துள்ளனர். இஃது மேற்கூறிய பொருளை உணர்த்தவில்லை என்றாலும், *Radical* என்பதன் நேரடியான மொழிபெயர்ப்பாக அமைந்துள்ளது"[24]

என்று விளக்கம் தருகிறது.

தந்தை வழிச் சமூகம் கற்பித்துள்ள பண்பாட்டுக் கட்டமைப்பில் ஆண் - பெண் உயிரியல் கூறு வேறுபாடுதான் குடும்பத்திற்குள் பெண்ணைப் பாலியல் ரீதியாக அடக்கக் காரணமாகிறது என்றுணர்ந்து, தந்தை வழிச் சமூகக் குடும்ப அமைப்பை உடைக்க எழுந்தது, தீவிரவாதப் பெண்ணியம். இப்பெண்ணியம் பற்றி தேவதத்தா,

---

**24.** இரா. பிரேமா, பெண்ணியம், பக். 76-77.

> "**பாலியல் ரீதியான அடக்குமுறை புறக்கணிக்கப்பட்டு பாலியல் ரீதியான உழைப்புப் பங்கீடும், பொருளியல் வர்க்க அமைப்பும் முக்கியப்படுத்தப்பட்ட போது, அது சீர்திருத்தமாக அமைந்து போனதால், தீவிரவாதப் பெண்ணியவாதிகள் தந்தை வழிச் சமுதாயத்தை உடைத்தலை முதன்மை நோக்கமாகக் கொண்டனர். இதன் வேர், உயிரியல் ரீதியான குடும்பம் என்பதால் குடும்பத்தையும் முற்றுமாக உடைக்க விரும்பினார்கள்**"[25]

என்று கருத்துத் தெரிவித்துள்ளார். இவ்வகை எழுச்சி தீவிரவாதப் பெண்ணியத்தினால் எழுந்திருக்கக் கூடும் என்பதை உணர்த்துகிறது.

### 1.10.3.சமதர்மப் பெண்ணியம் (*Socialist Feminism*)

தீவிரவாதப் பெண்ணியப் போக்கில், மார்க்சிய அணுகுமுறையோடு செயல்படுவது சமதர்மப் பெண்ணியமாகும். வர்க்க பேதம், பால் வேறுபாடு ஆகிய இரண்டையும் சமூகத்திலிருந்து நீக்குவதன் மூலம் எல்லாவிதச் சுரண்டலையும் நீக்க முடியும். ஆண் மேலாதிக்கமோ, பெண் மேலாதிக்கமோ இல்லாத சமதருமச் சமூகத்தை உருவாக்க முடியுமென்பது இதன் நோக்கமாகும்.

> "**சமதர்மப் பெண்ணியமானது, முதலாளித்துவத்தையும், ஆண் நாயகத்தையும் ஒழித்து, சமூகத்தின் எல்லா விதமான சுரண்டல்களையும் நீக்கி ஆண்மை, பெண்மை என்ற பாகுபாடற்ற சமுதாயத்தை நிறுவப் பாடுபடுவது ஆகும்**"[26]

என்று சமதர்மப் பெண்ணியத்தை இவ்வரிகள் விளக்கி நிற்கின்றன.

தந்தை வழிச் சமூக அமைப்பில் ஆண்கள் பெற்ற சொத்துரிமையே பெண்ணடிமைக்கு வித்திட்டது என்பது சமதர்மப் பெண்ணியவாதிகளின் வாதமாகும். சமூகத்தில் குடும்பம் என்ற அமைப்பை ஏற்படுத்திப் பெண்கள் எல்லா நிலைகளிலும் ஒடுக்கப்பட்டனர் என்பது சமதர்மப் பெண்ணியவாதிகளின் கருத்தாகும்.

---

**25.** தேவதத்தா, பெண்ணியம் ஒரு வரலாற்றுப் பார்வை, ப. 6.
**26.** ச.முத்துச்சிதம்பரம், பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும், ப. 89.

குடும்பத்தில் பெண்கள் நாள் முழுவதும் உழைத்தாலும் அவர்கள் செய்யும் வேலைக்கு எவ்வித அங்கீகாரமும் கிடையாது. கூலி பெறவும் வாய்ப்பில்லை. வெளியில் செய்யும் வேலைக்கும் ஆண்களை விடக் குறைந்த கூலியே பெற முடிந்தது. இத்தகைய நிலைக்கு முதலாளித்துவ அமைப்பே காரணம் என்பது சமதர்மப் பெண்ணியவாதிகளின் தீர்க்கமான கருத்தாக அமைகின்றது.

### 1.10.4.பொருள் முதல் பெண்ணியம் *(Meterialist Feminism)*

சமதர்மப் பெண்ணியத்தின் வளர்ச்சி பெற்ற போக்காக இதனைக் கருத முடிகிறது. பொருள் முதல் பெண்ணியமானது பெண்கள் எவ்வாறு பால் மற்றும் பண்பாட்டுக் கருத்தியலுக்குள் அடிமைப்படுத்தப்பட்டனர் என்பதற்கான விளக்கம் மார்க்சியத்தில் இல்லாதிருப்பதை எடுத்துக்காட்டியது. பெண்கள் பால் அடிப்படையில் ஆண்களால் ஒடுக்கப்படுபவர்களாகவும், வகுப்பு, இன அடிப்படையில் பிறரை ஒடுக்குகின்றவர்களாகவும், ஒடுக்குவதற்குத் துணை போகின்றவர்களாகவும், செயல்படுகிறார்கள். வெள்ளை இனப் பெண்ணும், முதலாளியப் பெண்ணும், மேற்கத்திய பெண்ணும் முறையே கறுப்பின, தொழிலாளிய, கீழைப்பண்பாட்டைச் சேர்ந்த பெண்களையும், ஆண்களையும் ஒடுக்குகிறார்கள் என்பதைப் பொருள் முதல் பெண்ணியம் வெளிப்படுத்தியுள்ளது.[27]

### 1.10.5.மார்க்சியப் பெண்ணியம் *(Marxist Feminism)*

பெண்கள் ஆண்களைப் போலவே அதிக சலுகைகளும் வாய்ப்புகளும் பெற்றுத் திகழ முயல்வது மார்க்சியப் பெண்ணியத் தத்துவமாகும். மார்க்சியக் கருத்துப்படி உண்மையான சமுதாய சமத்துவம் என்பது ஆண், பெண் இருபாலரும் சட்டப்படி சம உரிமையை அனுபவிப்பதன் மூலமே செயல்பட முடியும்.

> **"*இயந்திரமயமாக்கப்பட்ட சமூகத்தில் பெண்களும், வெளியே சென்று உழைத்துப் பொருளீட்டும் கட்டத்தில் அவர்கள் ஆண்களிடமிருந்து விடுதலை பெறுகின்றனர். அதனால் தொழிலாளி மக்களிடையே தான்***

---

**27.** க.பரிமளம், இந்துப் பெண்ணியம், பக். 7-8.

**உண்மையான அன்பின் அடிப்படையிலான திருமணங்களும், பெண்களின் சுதந்திரமும் காணப்படுகின்றன என்று ஏஞ்சல்ஸ் விளக்குகிறார்."**[28]

இவ்வாறு மார்க்சியம் உலகளாவிய விடுதலை நோக்கை வளர்க்க முனைகிறது. எனவே, மார்க்சியம் எடுத்துள்ள பல முக்கிய இலட்சியங்களில் ஒன்றாகப் பெண் விடுதலையும் அடங்கும்.

### 1.10.6.ஆன்மிகப் பெண்ணியம் *(Spiritual Feminism)*

சமயம் பற்றிய வெளிப்படையான கருத்து வளர்ச்சியை மற்றும் விழிப்புணர்வைப் பெண்களுக்குள் உருவாக்குவதே ஆன்மிகப் பெண்ணியமாகும். இப்பெண்ணியவாதிகள் சமயத்திலும், பெண்கள் ஒடுக்குமுறைக்கு உள்ளாவதை அறிந்தும், அது பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்தி, பெண்களுக்குரிய உரிமையை நிலைநாட்ட விரும்பினர். இதற்காக,

**"1976இல் பாஸ்டனில் முதல் ஆன்மிகப் பெண்ணியக் கருத்தரங்கு நடத்தப்பட்டது. பெண்ணியத்தின் ஒரு கூறாக ஆன்மிகமும் இணைக்கப்பட வேண்டும் என்ற கருத்து இக்கருத்தரங்கில் எடுத்துரைக்கப்பட்டது"**[29]

என்று ஆன்மிகப் பெண்ணியம் குறித்துப் பெண்ணியவாதிகளிடம் இருவேறு கருத்துக்கள் நிலவுகின்றன. சமயத்தில் பெண்களின் இருப்பு, பங்கு பற்றி எடுத்துரைக்கும் இத்தகைய பெண்ணியம் குறிப்பிடத்தக்க ஒன்று என ஒரு சாராரும், ஆன்மிகப் பெண்ணியத்தின் வளர்ச்சி, பெண் விடுதலை இயக்கத்தைப் பிற்படுத்திவிடும் என ஒருசாராரும் கருதுகின்றனர்.

### 1.10.7.கிறித்துவப் பெண்ணியம் (*Christian Feminism*)

கிறித்துவ மடாலயங்களில் பெண் அடக்குமுறை அதிகம் காணப்படுவதைக் கண்டித்து இவ்வகைப் பெண்ணியம் தோற்றம் பெற்றது. இதனை,

---

**28.** ச.முத்துச்சிதம்பரம், மு.நூ., ப. 83.
**29.** இரா.பிரேமா, பெண்ணியம், ப. 93.

**"கிறித்துவ மதத்தில் சீர்திருத்தம் வேண்டும்' என்று கூறும் இவ்வகைப் பெண்ணியவாதிகள், கிறித்துவ கருத்துக்களில் பெண்ணிய நோக்கை இணைத்து, மதத்தில் பெண்ணடிமை கூடாது என்று எடுத்துரைத்தனர். மேரி டாலி (*Mary Daly*) இவ்வகைப் பெண்ணியவாதி ஆவார்"**[30]

என்று கிறித்துவப் பெண்ணியம் உணர்த்துகின்றது. இவர் வெளிப்படையாக மடாலயங்களின் போக்கை எதிர்த்தார். கிறித்துவப் பெண்ணியவாதிகள் மடாலயங்களின் தலைமைப் பொறுப்புக்குப் பெண்கள் வருவதற்கான முயற்சிகளை மேற்கொண்டு வருகின்றனர்.

### 1.10.8.மனைப் பெண்ணியம் *(Domestic Feminism)*

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் இவ்வகைப் பெண்ணியம் பேசப்பட்டிருக்கிறது. பெண்கள் உடலியல் அடிப்படையில் இல்லம் சார்ந்தவர்கள் என்று இவர்கள் நம்பினர். எனவே,

**"பெண்கள் தங்கள் மதிப்பையும், பெருமையையும் உயர்த்திக்கொள்ள வேண்டுமென்றால் மரபார்ந்த தாய், இல்லத் தலைவி என்ற பங்கு நிலைகளை இன்னும் முன்னேற்றிக் கொள்ள வேண்டும்"**[31]

என்று இவர்கள் கருதினர்.

காலப்போக்கில் ஏற்பட்ட புதிய பெண்ணியக் கருத்து வளர்ச்சியினால் இத்தகைய பெண்ணியம் இல்லாமல் போயிற்று. இதற்கு மாறாகத் தீவிரப் பெண்ணியச் சிந்தனைகள் வளர்ந்து ஆண், பெண்ணுக்கென்று தனித்தனி உலகங்கள் இல்லை, இருபாலரும் இணைந்தே செயலாற்ற முடியும் என்ற எண்ணம் பரவத் தொடங்கியது.

### 1.10.9.தூய பெண்ணியம் *(Pure Feminism)*

**"தூய பெண்ணியவாதிகள் பெண்ணடிமைத்தனத்திற்குக் காரணமாக இருப்பது தனிச் சொத்துடைமையின் தோற்றமே என்ற மார்க்சியக் கருத்தை ஏற்றுக்கொள்ளாமல் கருத்தரித்தல், குழந்தை பெறுதல் போன்ற**

**30.** இரா.பிரேமா, பெண்ணியம், ப. 93.
**31.** மேலது, ப. 95.

**உடலியல் சம்பந்தப்பட்ட காரணிகளே பெண்ணடிமைத் தனத்திற்கான அடிப்படைகள் என்று கூறுகின்றனர்.”**[32]

எனவே, பரிசோதனைக் குழாய்க் குழந்தை போன்ற தொழில்நுட்ப வளர்ச்சியினால் ஏற்படும் மாற்றங்களையே இவ்வகைப் பிரச்சினைக்கானத் தீர்வாகத் தூய பெண்ணியவாதிகள் முன் வைக்கின்றனர்.

### 1.10.10.கருப்புப் பெண்ணியம் *(Black Feminism)*

கருப்புப் பெண்ணியம் என்பது கருப்புப் பெண்களின் பண்பாட்டுத் தளத்தின் ஆழத்தில் இருந்து தோற்றம் பெற்றது என்பதை,

**“எண்பதுகளில் ‘கருப்பு மகளிரியல் கல்வி’ (*Black Women’s Studies*) தோற்றம் பெற்று வளர்ந்தது. பொதுவாக மகளிரியல் என்பது பெண்களின் பொதுப் பிரச்சினை, வரலாறு, பண்பாடு, கலை, அரசியல், தொழில் பற்றிப் பேசும். கருப்பு மகளிரியல் என்பது கருப்புப் பெண்களின் பிரச்சினைகளை மட்டும் பேசுவதாகும். ‘பார்பரா ஸ்மித்’ *(Barbara Smith)* என்பவர் கருப்புப் பெண்ணியத்தை வளர்த்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர் ஆவார்.”**[33]

கருப்புப் பெண்ணியவாதிகள் அடிமைக்கு அடிமையாக இருக்கின்றனர். அதாவது, அடிமைப்பட்ட கருப்பு ஆணுக்கு அடிமையாக இருக்கிறார்கள். இப்பெண்ணியவாதிகள் “கருப்பு அழகானது” என்ற தொடரை முன்னிறுத்துகின்றனர். இஃது நிறத்தை ஒட்டி எழுந்ததன்று, இனம் மற்றும் வரலாற்றை அடியொற்றியதாகும். இப்பெண்ணியவாதிகள் மனித உரிமை சார்ந்த சமத்துவத்திற்காகவும், சுரண்டலுக்கு எதிராகவும் குரல் கொடுத்து வருகின்றனர்.

### 1.10.11.சூழல் பெண்ணியம் *(Eco – Feminism)*

**“எழுபதுகளின் கடைசியிலும், எண்பதுகளின் தொடக்கத்திலும் தோற்றம் பெற்றது இவ்வகைப் பெண்ணியம். சூழல் பெண்ணியம் என்ற சொல்**

---

**32.** அபர்ணா மகந்தா, மார்க்சியமும் பெண்நிலைவாதமும், ப. 5.
**33.** இரா.பிரேமா, பெண்ணியம், பக். 98-99.

முதன் முதலில் 'ப்ரான்சிஸ் டி எபோன்' (*Franchise D Eboune*) என்பவரால் எடுத்தாளப்பட்டது. அமெரிக்காவில் மெல்டவுன் (*Meltdown*) என்ற மிகச் சிறிய தீவில் முதல் சூழல் பெண்ணிய மாநாடு நடைபெற்றது. 'இப்புவியில் பெண்களும் வாழ்வும்' (*Woman and life on Earth*) என்பது அம்மாநாட்டின் மையப் பொருளாகும்."[34]

இவ்வகைப் பெண்ணியவாதிகள் போர், வன்முறைகள் மற்றும் பாலியல் வன்முறைகளுக்கு எதிராகக் குரல் கொடுத்து வருகின்றனர். இவர்கள் அணு ஆயுதத்தைப் போருக்காகப் பயன்படுத்துவதைக் கடுமையாக எதிர்த்துப் போராடுகிறார்கள். ஆண்களின் வன்முறைகளில் ஒரு வகைப் போக்குதான் அணு ஆயுதத் தொழில்நுட்பம் என்று இப்பெண்ணியவாதிகள் கூறுகின்றனர். நுகர்வுப் போக்கு வாழ்க்கை, உயிர்த் தொழில் நுட்பம், மரபணு பொறியியல், மறு உற்பத்தித் தொழில் நுட்பம் ஆகியவை இயற்கைக்கு எதிரானவை என்று சூழல் பெண்ணியவாதிகள் கருதுகின்றனர்.

### 1.10.12.மரபுநிலைப் பெண்ணியம் (*Conservative Feminism*)

பெண்ணியத் தீவிரவாதிகள் மிதமானப் போக்குடைய பெண்ணியவாதிகளை மரபுநிலைப் பெண்ணியவாதிகள் என்று குறிப்பிடுகின்றனர். இவ்வகைப் பெண்ணியவாதிகள் மார்க்சியப் பெண்ணியக் கோட்பாடுகளைப் பயன்படுத்தினாலும், அதனை முழுமையாக ஏற்க மறுத்தனர். புரட்சியை விரும்பாத இவர்கள் ஆண்களோடு இணைந்து செயல்படவே விரும்பினர்.

### 1.10.13.நடுத்தர வகுப்புப் பெண்ணியம் (*Bourgeois Feminism*)

"மரபுநிலைப் பெண்ணியமும், நடுத்தர வகுப்புப் பெண்ணியமும் தாராளவாதப் போக்கினையே கொண்டதாகும். நடுத்தர வகுப்புப் பெண்ணியம் என்ற இச்சொல் மார்க்சிய மற்றும் சமதர்மப் பெண்ணியவாதிகளால் உருவாக்கப்பட்டது. முதலாளித்துவ நாடுகளின் அரசியல், பொருளாதார அமைப்புகளில் எவ்வித மாற்றமும் இன்றியே

34. இரா.பிரேமா, பெண்ணியம், ப. 99.

**மகளிர் சமவுரிமை பெற முடியும் என்பதே இப்பெண்ணியத்தின் கருத்தாகும்”**[35]

என்று பெண்ணியக் கலைச்சொல் விளக்கக் கையேடு நடுத்தர வகுப்புப் பெண்ணியத்திற்கு விளக்கம் தருகிறது.

### 1.10.14.கூட்டுச் சேராப் பெண்ணியம் *(Non Aligned Feminism)*

**“அடக்குமுறைத் தளைகளிலிருந்து பெண்கள் விடுதலை பெற வேண்டும், சமவுரிமை வேண்டும், மகளிர் வாழ்வின் அரசியல், பண்பாட்டுப் பொருளாதார, ஆன்மிகப் பரிமாணங்களையும் ஆராய வேண்டும். தனித்துவத்தை இழக்காமல் எதனுடனும் கூட்டுச் சேராமல் மகளிர் வாழ்வுடன் தொடர்புடைய அனைத்தையும் ஆராய்ந்து உண்மையை அறிவதே இதன் இலக்கு”**[36]

என்று சார்லட் பஞ்ச் என்பவர் இப்பெண்ணியத்திற்கு வரையறை தந்துள்ளார்.

### 1.10.15.ஓரினக்கலவிப் பெண்ணியம் (*Lesbian Feminism)*

ஓரினக்கலவியில் ஈடுபடும் பெண்களே இயற்கையான பெண்ணியவாதிகள் ஆவர். ஏனென்றால், அவர்களே ஆண்களை நிராகரித்து விலக்கி வாழ்கின்றனர். ஆண் - பெண் இடையே ஏற்படும் உடலுறவு பெண் அடக்கு முறைக்கு வித்திடுவதால், அதை நிராகரிப்பதன் மூலம் அடக்கு முறையினின்றும் மீள முடியும் என்று இவ்வகைப் பெண்ணியம் கருதுகிறது.

ரீட்டா மாவோ பிரௌன், சார்லட் பன்ச், டிகிரேஸ், அட்கின்சன், ஜில் ஜான்ஸ்டன் ஆகியோர் ஓரினக்கலவிப் பெண்ணியவாதிகள் ஆவர்.[37]

### 1.10.16.தலைமைத்துவம் வேண்டாப் பெண்ணியம் *(Anarcha Feminism)*

**“கிரேக்கச் சொல்லான ‘அனார்கஸ்’** (*Anarchaos*) என்பதற்கு **‘ஆட்சியாளர் இல்லாத’ அல்லது ‘தலைமை இல்லாத’ என்பது பொருளாகும்.”**[38]

---

**35.** தேவதத்தா, கமலி, பெண்ணியக் கலைச்சொல் விளக்கக் கையேடு, ப. 11.
**36.** மேலது, ப. 68.
**37.** மேலது, 47-48.
**38.** இரா.பிரேமா, பெண்ணியம், ப. 96.

பெண்களின் இந்த நிலைக்குக் காரணமாக அமைவது புறக்கணிக்கப்பட்ட பாலியல் மற்றும் குடும்ப முறைகேடுகளே என்று குறிப்பிடும் இவ்வகைப் பெண்ணியவாதிகள், பெண்களுக்குப் பொருளாதாரம் மற்றும் உளவியல் சார்ந்த விடுதலை தேவை என்பதை எடுத்துரைத்தனர். எம்மா கோல்டு மேன் என்ற புகழ்பெற்ற பெண்ணியவாதி இவ்வகைப் பெண்ணியத்தைச் சார்ந்தவர் ஆவார்.

### 1.10.17.மகளிர் முன்னேற்றப் பெண்ணியம் (*Carear Feminism*)

இவ்வகைப் பெண்ணியத்தின் நோக்கம், சுய இலக்குகளை அடைதல், மகளிர் கூட்டமைப்புகளை ஏற்படுத்துதல், திறம்படச் செயல்படுதல், சமூகத்தில் எந்தப் பணியையும் ஏற்றுச் செயல்படும் உரிமை வேண்டுதல் என்ற கோட்பாட்டினை மையமாகக் கொண்டது. மேலும் இச்சொல்லானது,

> **"மைரா மார்க்ஸ் பெர்ரீ மற்றும் பெத்ஃபி ஹெஸ் ஆகியோர் எழுதிய 'எதிர்ப்பும் ஒற்றுமையும் ~ புதிய பெண் இயக்கம்' என்ற நூலில் இச்சொல் (மகளிர் முன்னேற்றப் பெண்ணியம்) பயன்படுத்தப்பட்டுள்ளது"**[39]

என்பதை அறியமுடிகின்றது.

### 1.10.18.மனித இன மேம்பாட்டுப் பெண்ணியம் (*Eugenic Feminism)*

> **"பிரிட்டனில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் இச்சொல் பயன்படுத்தப்பட்டது. பெண் விடுதலை என்பது பெண்ணின் தாய்மைப் பண்பைச் சிதைத்து விடும் என்பது இவ்வியக்கத்தின் அசையாத நம்பிக்கையாகும். உண்மையில் பெண்ணியத்திற்கு இவ்வியக்கம் எதிரானதாகும்"**[40]

என்று பெண்ணியக் கலைச்சொல் விளக்கக் கையேடு தெரிவிக்கிறது.

---

**39.** தேவதத்தா, கமலி, மு.நூ., ப.13.

**40.** மேலது, ப. 25.

### 1.10.19.உளப்பகுப்பாய்வுப் பெண்ணியம் *(Psychoanalytic Feminism)*

ஃபிராய்டின் கோட்பாடுகளான பெண்ணின் இயல்பு, இடிபஸ் சிக்கல், எலெக்ட்ரா சிக்கல், காயடிப்புப்பயம் ஆகியவை பெண்ணிய நோக்கில் இன்று மறுபரிசீலனை செய்யப்பட்டு வருகின்றன. ஃபிராய்டின் உளப் பகுப்பாய்வுக் கோட்பாடு ஆண்வயச் சிந்தனையின் விளைவே என்றும், பெண் நோக்கிலிருந்து அவை பார்க்கப்பட்டவை அல்ல என்றும் உளப்பகுப்பாய்வுப் பெண்ணியம் விளக்குகிறது.

### 1.10.20.இருத்தலியல் பெண்ணியம் (*Exitentialist Feminism*)

இருத்தலியல் வாதத்தைப் பெண்ணிய நோக்கில் பயன்படுத்துகிறது இருத்தலியல் பெண்ணியம். பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே இருத்தலியல் வாதம் தோற்றம் பெற்றாலும், இரண்டாம் உலகப்போருக்குப் பின்னர் ஏற்பட்ட விளைவுகளால் அதன் முக்கியத்துவம் அதிகரித்தது. கபீரியல் மார்சல் (1889-1973), ஜான் பால் சார்த்தர் (1905-1985), மோரிஸ் மெர்லோ போன்றி (1908-1961) ஆகியோர் பிரான்சு நாட்டில் இருத்தலியல் வாதத்தை வளர்த்தனர். ஜான் பால் சார்த்தரின் மனைவி சிமொன் தெ பௌவார், இருத்தலியல் பெண்ணியவாதிகளுள் முதன்மை வாய்ந்தவராகக் கருதப்படுகிறார். இதனை,

> **"இருத்தலியம் புறவயமானவற்றையும், அகவயமானவற்றையும் இணைப்பது. நிரந்தரமானவற்றையும், வரலாற்று ரீதியானவற்றையும் இணைப்பது. சாராம்சத்தை அது இருத்தலிலேயே கைப்பற்ற விழைகிறது. தத்துவம் இயல்பிலேயே அத்தகைய சாராம்சத்தை நோக்கியதெனில், இலக்கியம் இருத்தலின் பிரவாகத்தைத் தனித்த பிரத்தியட்ச உண்மையாகக் காண்பது"**[41]

இருத்தலியல் பெண்ணியம் என்கிறார் சிமொன் தெ பௌவார். மேலும், பௌவார் தனது 'இரண்டாம் பால்' (*The Second Sex - 1949)* என்ற நூலில், தன்மை, மற்றமை *(Self, Other*) என்ற கருத்தாக்கத்தைப் பெண்ணிய நோக்கில் விளக்குகிறார்.

---

**41.** ந.முத்துமோகன், ஐரோப்பியத் தத்துவங்கள், ப. 170.

### 1.10.21.அதிநவீனப்பெண்ணியம்(அ)பின்நவீனப்பெண்ணியம் *(Post Modern Feminism)*

> **"அதிநவீனப் பெண்ணியம் பெண் மொழி, ஆண் மொழி, ஆண் சமுதாயம் என்ற இரண்டையும் மறுக்கிறது. அதிநவீனப் பெண்ணியலார் மொழி, தத்துவக் கருத்து ஆகியவை சுதந்திரமாகப் பயன்படுத்த வேண்டும் என்பர். பெண்ணுக்குரிய பாலியல் வெளிப்படையாகப் பேச வேண்டும் என்கின்றனர். பெண்கள் எதிர்கால வாழ்வில் எப்படி இருக்க வேண்டும் என்றும், பெண்ணைப் போகப் பொருளாகச் சுட்டுவதாக எந்தப் படைப்புகளும் இருக்கக் கூடாது"**[42]

என்றும் இவ்வகைப் பெண்ணியம் வலியுறுத்துகிறது.

### 1.10.22.மானுட நேயப் பெண்ணியம் (*Humanist Feminism)*

மானுட நேயப் பெண்ணியம் என்ற சொல்லானது, ஐரிஷ்யங்(1985), என்ற வெளிநாட்டு அறிஞரால் முதன் முதலாகப் பயன்படுத்தப்பட்டது. இவர்,

> **"ஆடவரது சுயவளர்ச்சியை அனுமதிக்கும் சமூகத்தில் பெண் அடக்குமுறை என்பது பெண்ணின் ஆற்றலைச் சிதைக்கக் கூடியது. எனவே, பெண் விடுதலை வேண்டும்"**[43]

என்று வலியுறுத்துகிறார்.

### 1.10.23.தனிமனிதப் பெண்ணியம் *(Individual Feminism)*

தனிமனித மேம்பாடு என்பது பெண் விடுதலையில்தான் உள்ளது. இருப்பினும், பெண் விடுதலையானது பெண்ணின் தாய்மைப் பண்பைச் சிதைத்து விடக்கூடாது, என இருபதாம் நூற்றாண்டு பெண்ணியவாதிகளின் நோக்கும், போக்கும் புதுவகையான கண்ணோட்டம் பெற்றது.

> **"தனது ஆற்றலைப் பயன்படுத்துவதன் மூலம் தன்னுடைய எதிர்காலத்தைத் தானே வடிவமைத்துக் கொள்வதற்குரிய உரிமையும்,**

---

**42.** கி.மாரியம்மாள், நவீனத் தமிழ் ஆங்கிலப் புதினங்களில் பெண்ணியம், முனைவர் பட்ட ஆய்வேடு, ப. 27.

**43.** தேவதத்தா, கமலி, மு.நூ., ப. 39.

**பெண் – ஆண் யாராக இருப்பினும் தனிநபர் ஒவ்வொருவருக்கும் சுதந்திரம் தேவை என்றும் இப்பெண்ணியம் கூறுகிறது."[44]**

### 1.10.24.ஏகாதிபத்தியப் பெண்ணியம் (*Imperial Feminism)*

பிரிட்டன், அமெரிக்கா போன்ற நாடுகளில் தோன்றிய பெண்ணிய மூல நீரோடை ஏனைய மூன்றாவது உலக நாடுகளைச் சேர்ந்த பெண்களை அடக்கியாள முற்படுகிறது என்று பிரதீபா பார்மர், வலேரி அமோஸ் ஆகியோர் ஏகாதிபத்தியப் பெண்ணியத்தின் வாயிலாக அந்நாடுகளில் உருவான பெண்ணியத்தைக் குறிப்பிட்டனர்.[45]

### 1.10.25.பண்பாட்டுப் பெண்ணியம் (*Cultural Feminism)*

1973இல் தொடங்கப்பட்ட இவ்வகைப் பெண்ணியம், மரபு கலாச்சாரத்திற்கு மாற்றாக புதிய கலாச்சாரத்தை உருவாக்க முற்பட்டது. பெண்கள் தங்களைச் சக்தி உள்ளவர்களாக உருவாக்கிக் கொள்ளவும், தங்கள் திறமைகளை இனம் காட்டவும் முற்பட்டதன் விளைவே பண்பாட்டுப் பெண்ணியம் ஆகும்.

இவ்வகைப் பெண்ணியவாதிகள் கவிதை, இசை, கலை, திரைப்படங்கள், மதம், விஞ்ஞானம், மருத்துவம் இவை அனைத்தும் பெண்ணை மையப்படுத்தியதாக, பெண்ணை நோக்கியதாக உருவாக்க முற்பட்டனர்.[46]

ஆண்களது ஆண்மைத்துவத்தால் ஏற்படும் ஆக்கிரமிப்பு, வன்முறை, பலம், அகங்காரம் என்பவற்றுக்கு எதிராகப் பெண்மையைப் போற்றுகின்ற ஒரு கருத்தாக்கமே பண்பாட்டுப் பெண்ணியமாகும்.[47]

---

**44.** தேவதத்தா, கமலி, மு.நூ., ப. 41.
**45.** மேலது.
**46.** இரா.பிரேமா, பெண்ணியம், ப. 94.
**47.** செல்வி திருச்சந்திரன், தமிழ் வரலாற்றுப் படிமங்கள் சிலவற்றில ஒரு பெண்நிலை நோக்கு, பக். 104-105.

### 1.10.26.கல்வி நெறிப் பெண்ணியம் (*Academic Feminism*)

ஆணாதிக்கம் நிறைந்தும், அதிகாரத்துவம் மற்றும் நடுத்தர வர்க்கக் குணமும், நிறைந்து இருக்கிற உயர்நிலைக் கல்வி நிறுவனங்களான கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் இப்பெண்ணிய வாதம் பெரிதும் பேசப்படுகின்றது. இக்கல்வி நிறுவனங்களில் வேலை பார்க்கும் பெண் கல்வியாளர்கள் இப்பெண்ணியத்தை வளர்த்தெடுக்கின்றனர்.[48]

### 1.10.27.புரட்சிகரப் பெண்ணியம் (*Revloutionary Feminism*)

புரட்சிப் பெண்ணியமானது பாலியல் உரிமை, கட்டற்ற அல்லது கட்டுப்பாடற்ற பாலியல் உறவு, பெண் - ஓரினச் சேர்க்கை, குழந்தை பெறுவதை மறுத்தல் ஆகியவற்றை வலியுறுத்துகிறது.

> **"பெண்ணடக்கு முறைக்கு எதிர்ப்பாலியத் திருமண முறையே, அடிப்படைக் காரணமாகும். எனவே, அதை நீக்கிவிட்டுப் பிரிவினை வழியைப் பின்பற்ற வேண்டும் என்னும் தீவிர முழக்கங்கள் 1977இல் ஏற்பட்டன. இதனைப் புரட்சிகரப் பெண்ணியம் என்பர்."**[49]

### 1.10.28.ஆண் பெண்ணியம் (*Male Feminism)*

பெண்கள் சார்பாக ஆண்கள் எழுதுகிற எழுத்தை "ஆண் பெண்ணியம்" என்று அழைப்பர். பெண்ணியத்தின் பேசுபொருளாகவும், பெண்ணியத்தின் தோற்றம், இருப்பு ஆகியவற்றுக்கு மூலகாரணமாக விளங்குகிற ஆண் பேசுகின்ற பெண்ணியத்தை முழுவதுமாக நம்பிவிடக் கூடாதெனப் பெண்ணியவாதிகள் எச்சரிக்கை செய்கின்றனர்.

> **"பெண்ணியல் சிந்தனைகளை மிகவும் தீவிரமாக ஆண் பேசலாம், ஆனால் பெண்ணை நோக்க, இவன் அதைப் பேசப் பொருத்தமானவன் அல்லன்; மேலும் பெண்கள், ஆண்கள் பேசுகின்ற பெண்ணியத்தை வரவேற்கக் கூடாது என்பதில்லை; ஆனால் அவர்களின் சொல்லாடலும்,**

---

48. ரே.இந்திரா, பெண்ணிய நோக்கில் பிரபஞ்சன் புதினங்கள், முனைவர் பட்ட ஆய்வேடு, ப. 12.
49. தேவதத்தா, கமலி, மு.நூ., பக். 81-82.

**நோக்கத்திலும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். அப்படி வரவேற்பதால் ஏற்படும் விளைவுகளைப் பற்றியும் ஆழமாக எண்ணிப் பார்க்க வேண்டும்”**[50]

என்று ஸ்டீபன் ஹீத் என்ற அறிஞர் கூறுகிறார்.

### 1.10.29.இந்தியப் பெண்ணியம் *(Indian Feminism)*

மேலைநாடுகளில் பெண்ணியம் பதினெட்டாம் நூற்றாண்டிலேயே தொடங்கிவிட்டது. மேலை நாட்டுப் பெண்ணியம் தனியுரிமை, சமத்துவம், அரசியல், விடுதலை மற்றும் தன்னாட்சி ஆகியவற்றை அடிப்படைக் கொள்கையாகக் கொண்டது. இந்திய நாட்டில் பெண்ணியம் சமூகச் சீர்திருத்தங்களின் அடிப்படையில் தோன்றியது எனலாம்.

இந்தியாவைப் பொறுத்தவரை பெண்ணுக்குத் "தனியுரிமை" என்பது ஒரு புதிய கருத்து ஆகும். இந்திய ஆணும் பெண்ணும் தொன்றுதொட்டு இன்றுவரை அதிகாரப் படிநிலை அமைப்பின்கீழ் வாழ்ந்து வருகின்றனர். இந்தியப் பெண்கள் தங்கள் விடுதலையை விட்டுக் கொடுக்கவும், தங்கள் தேவைகளை அடக்கிக் கொள்ளவும், தங்கள் உணர்வுகளை மறைத்துக் கொள்ளவும், எல்லாவற்றிலும் தங்களை அர்ப்பணித்துக் கொள்ளவும் பழகியவர்கள் ஆவார்கள்.

**"சிறு வயதில் தந்தையும், பருவத்தில் கணவனும், விதவைக்கு மக்களும் காவல் ஆவர். எப்பருவத்தினராயினும் பெண் தன்னிச்சையாய் இயங்கக் கூடாது. தந்தை, கணவன், மக்கள் வேண்டாமென்று பெண்ணானவள் தனித்திருக்க விரும்பவே கூடாது”**[51]

என்று மனுதர்மம் வலியுறுத்துகிறது.

---

**50.** க.பஞ்சாங்கம், பெண்-மொழி-புனைவு, ப. 125.

**51.** தமிழ்நாடன், மனுதர்மம், ப. 97.

இந்தியப் பெண்கள் தங்களுக்குத் தனியுரிமை தேவையில்லை என்று ஒரு தவறான தத்துவத்தின்கீழ் வாழ்ந்து வந்துள்ளனர் என்பதை,

> **"தனிமனித விடுதலை, தனித்தன்மை மற்றும் தன்னாட்சி என்பவைகளை ஆங்கில ஆட்சியின் மூலமே இவர்கள் விழிப்புணர்வைப் பெற்றுள்ளனர்"**[52]

என்று உணர்த்துகிறது.

> **"இந்தியப் பெண்ணியம் என்பது இந்தியப் பண்பாட்டின் அடித்தளமான குடும்ப அமைப்பைச் சிதைக்கவில்லை என்றாலும் பெண்கள், குடும்பம் பேணுதலுக்கே உரியவர்கள் என்ற மரபான போக்கு மாற்றம் பெற வேண்டும் என்பதையும் பெண்களின் ஆளுமை முக்கியத்துவம் பெற வேண்டும் என்பதையும் வற்புறுத்தி வருகிறது"**[53]

என்று இவ்வகைப் பெண்ணியம் குறிப்பிடுகிறது.

## 1.10.30.தலித் பெண்ணியம் (Dalith Feminism)

தலித் பெண்களால்தான் தலித் பெண்ணியத்தை உருவாக்க முடியும். அவர்களின் அனுபவங்கள் நிச்சயமாக அவர்களுக்கே உரியதாகும். ஆதிக்க சாதி வெறியர்களாக இல்லாவிட்டாலும், தலித் ஆண்கள் பாலின வெறியர்களாய் இல்லாவிட்டாலும், தலித் பெண்ணியம் என்பது மிகவும் தேவையான ஒன்றாகும்.

> **"சாதி அடிப்படையில் மட்டுமின்றி, தங்களுக்குள்ளேயே ஆண், பெண் என்ற பால் வகையின் அடிப்படையிலும் தலித் பெண்கள் அடிமைப்பட்டுள்ளனர். தலித் பெண்களின் காயங்களும், சோகங்களும், வெப்பங்களும், பெருமூச்சுகளும் தலித் இலக்கியத்தின் உள்ளுறையாக அமைகின்றன. இவற்றை ஆராய்வதே தலித் பெண்ணியமாகும்"**[54]

என்று பிரேமா இவ்வகைப் பெண்ணியத்திற்கு விளக்கம் தருகிறார்.

சமுதாயத்தின் அடிமட்ட நிலையில் இருக்கும் தலித் பெண்களைப் பற்றியும், அவளைவிட அதிகமாகச் சுரண்டலுக்கு உள்ளாகும் தலித் பெண் குழந்தைகளின் அவலநிலையையும்,

---

52. இரா. பிரேமா, பெண்ணியம், ப. 97.
53. இரா. பிரேமா, பெண்ணிய அணுகுமுறைகள், ப. 23.
54. மேலது, ப. 15.

**"நகரத்து ஆலைகளில் தொழிலாளி சுரண்டப்படுகிறான். அந்தத் தொழிலாளியை நோக்க, கிராமத்தில் பண்ணைக் கூலிகளிலும் தாழ்த்தப்பட்ட பண்ணைக் கூலி இன்னும் அதிகமாக சுரண்டப்படுகிறான். அந்த தாழ்த்தப்பட்ட சாதியைச் சார்ந்த பண்ணைக் கூலியைவிட, அவன் மனைவி அதிகமாக சுரண்டப்படுகிறாள். அவன் மனைவியைவிட, அவன் வீட்டுப் பெண் குழந்தை அதிகமாகச் சுரண்டப்படுகிறது"**[55]

என்று பஞ்சாங்கம் எடுத்துக்காட்டியுள்ளார்.

தலித் பெண் படைப்பாளர்களான பாமா, சிவகாமி ஆகியோரின் படைப்புகளைத் தலித் பெண்ணிய நோக்கில் ஆராயும் போக்கு இன்று பல்கலைக்கழக ஆய்வு மட்டத்தில் வளர்ந்து வருகிறது.

இவ்வாறு பெண்ணிய வகைப்பாடுகள் சாதி, இனம், நாடு என்ற அடிப்படையாலும், பிற காரணிகளாலும் பல வகைப்பட்டதாய் வளர்ந்து வருகிறது எனக் குறிப்பிடலாம்.

## 1.11.தமிழ்நாட்டில் பெண்ணியம்

மேலை நாடுகளில் பதினெட்டாம் நூற்றாண்டில் பெண்ணியம் தோன்றி வளர்ந்தாலும், தமிழகத்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டில்தான் பெண்ணியம் தோன்றியது. இக்காலக் கட்டத்தில் பெண்களின் உரிமைக்காகவும், அவர்களின் முன்னேற்றத்திற்காகவும் சிலர் குரல் கொடுக்கத் தொடங்கினர். இதனைத் தொடர்ந்து தமிழ்நாட்டில் பெண்ணியம் தோன்றலாயின.

தமிழ்நாட்டில் மகாகவி பாரதியார், தந்தை பெரியார், பாரதிதாசன், திரு.வி.க போன்றோர் பெண்களின் முன்னேற்றத்திற்குக் குரல் கொடுத்துள்ளனர். வேதநாயகம், மாதவையா, வ.ராமசாமி போன்றோர் நவீன இலக்கியங்கள் வாயிலாக இப்பணியைச் செய்துள்ளனர்.

---

**55.** க. பஞ்சாங்கம், மு.நூ., ப.133.

சுகிர்தராணி, தமிழச்சி தங்கபாண்டியன், சல்மா, ஆண்டாள் பிரியதர்ஷினி, வெண்ணிலா, தாமரை, கனிமொழி, குட்டி ரேவதி போன்ற இன்னும் பிற பெண் கவிஞர்களும், மு.மேத்தா, தமிழன்பன், மீரா, அறிவுமதி, நா.காமராசன், கவிஞர் சிற்பி, வைரமுத்து போன்ற பிற ஆண் கவிஞர்களும், தமிழ்ப் புதுக்கவிதையின் வழியாகப் பெண்களின் முன்னேற்றத்திற்குக் குரல் கொடுத்துள்ளனர். இந்தியாவிலும், தமிழ்நாட்டிலும் சமூகச் சீர்திருத்தத்தின் விளைவாகப் பெண்ணியம் தோன்றி வளர்ந்தது என்பதை அறியலாம்.

### 1.11.1.பெரியார்

தமிழ்நாட்டில் முதன் முதலில் பெண் விடுதலைக்கு வித்திட்டவர் தந்தை ஈ.வெ.ரா. பெரியார் ஆவார். இவர் 1920இல் "சுயமரியாதை இயக்கம்" என்ற அமைப்பைத் தொடங்கி வைத்து, அதன் மூலம் பெண் விடுதலைக்குக் குரல் எழுப்பினார். பெரியார் தான் கலந்து கொள்ளும் அனைத்துக் கூட்டங்களிலும், குறிப்பாகத் திருமணக் கூட்டங்களில், பேசும் போது,

> ***"பெண்களை மரபுவழி அடிமைப் படுத்தும் பழக்க வழக்கங்களைக் கண்டித்துப் பேசியுள்ளார். "கற்பு" என்பது பெண்ணடிமைக்கு வித்திடக் கூடிய ஆயுதம்"***[56]

என்பதை வலியுறுத்தி வந்துள்ளார்.

பெரியார், விதவை மறுமணத்தை ஆதரித்துப் பேசினார். தம் குடும்பத்திலேயே விதவை மறுமணத்தை முன்மாதிரியாகச் செய்தும் காட்டினார். பெண்கள் "தாலி" அணிவது அடிமைப்போக்கிற்கு வித்திடுகிறது என்பதை எடுத்துக்காட்டினார். சாதிமறுப்புத் திருமணங்களை வரவேற்றார். அவர் பலருக்குத் தம் முன்னிலையிலேயே அத்தகைய திருமணங்களை நடத்தி வைத்தார். பெரியார் பெண்களின் விடுதலைக்காக ஆற்றியப் பணி இந்தியப் பெண்ணிய வரலாற்றில் தனி இடத்தைப் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

---

56. பெரியார், பெரியார் அகராதி, ப. 17.

நம் நாட்டின் பழமையான திருமண முறை பெண்களை ஏமாற்றுவதாகவும், வஞ்சிப்பதாகவும் உள்ளது என்று திருமணச் சடங்கு முறைகளைச் சாடிய பெரியார்,

**"நமது கல்யாணத் தத்துவம் எல்லாம் சுருக்கமாய்ப் பார்த்தால் பெண்களை, ஆண்கள் அடிமையாகக் கொள்வது என்பதைத் தவிர வேறு ஒன்றுமே அதில் இல்லை. அவ்வடிமைத் தனத்தை மறைத்துப் பெண்களை ஏமாற்றுவதற்கே சடங்கு முதலியவைகள் செய்யப்படுவதோடு அவ்விதக் கல்யாணத்திற்குத் தெய்வீகக் கல்யாணம் என்பதாக ஒரு அர்த்தமற்ற போலிப் பெயரையும் கொடுத்துப் பெண்களை வஞ்சிக்கிறோம்"**[57]

என்று குறிப்பிடுகிறார்.

பொருளாதாரத்தில் அடிமைப்பட்டுக்கிடந்த பெண்களின் நிலையைக் கண்டுப் பெரியார் வருந்தியதைப் பின்வரும் பகுதியால் அறியலாம்.

**"பெண்ணுக்கு ஒரு தடவை கல்யாணம் ஆகிவிட்டால் சாகும் வரை அவனிடமே தான் இருக்க வேண்டும். புருசன் கொடுமை சகிக்காமல் பெண் தாய்வீட்டுக்குப் போய்விட்டால், புருசன் கோர்ட்டில் தாவா செய்து, டிகிரி பெற்று பெண்ணை சுவாதீனம் செய்து கொள்ளலாம். ஆனால், பெண்ணுக்குப் புருசனிடமிருந்து ஜீவனாம்சம் பெறத்தான் பாத்தியமுண்டு. அதுவும் விபச்சாரி என்று புருசன் ருசிப்படுத்திவிட்டால் அந்த ஜீவனாம்சமும் இல்லை. பெண்ணுக்குத் தகப்பன் சொத்தில் சிறிதும் பங்கு கிடையாது."**[58]

## 1.11.2.பாரதியார்

தாய்வழிச் சமுதாயத்தில் தலைமையேற்றப் பெண்ணினத்தின் ஆற்றலை, அறிவை, வலிமையை, ஆணினம் நிராகரித்தது. அதற்குப் பதிலாக அச்சத்தையும், மடமையையும், மென்மையையும் அணியச் செய்து முடக்கினர். இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் எட்டயபுரக் கவிஞன் பாரதி, பெண் விடுதலைக்கான புதிய குரலை எழுப்பினார். இதனை,

---

57. பெரியார், பெண் ஏன் அடிமையானாள், ப. 34.
58. பெரியார், மதமும் மங்கையரும், ப. 14.

"கண்கள் இரண்டினில் ஒன்றைக் ~ குத்திக்
காட்சி கெடுத்திட லாமோ?
பெண்களறிவை வளர்த்தால் ~ வையம்
பேதமை யற்றிடுங் காணீர்"[59]

என்றும்,

"ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்
அறிவி லோங்கி இவ்வையகம் தழைக்குமாம்"[60]

என்றும், பெண்கள் அறிவு பெற்று ஆண்களுக்கு சரிநிகர் சமமாய் வாழும் போதுதான் நம் நாட்டின் அடிமைத்தனம் நீங்கி வாழ முடியும் என்பதைத் தன் கவிதையின் வழி காட்சிப்படுத்தியுள்ளார்.

### 1.11.3.பாரதிதாசன்

பாரதிதாசன் "பெண்ணுலகு" என்ற பகுதியில் பல கவிதைகளைத் தந்துள்ளார். பெண்களின் மூடத்திருமணம், கைம்மைத் துன்பம், குழந்தை மணம் முதலியவற்றைச் சாடியுள்ளார். பெண்களின் விடுதலைக்கான வழிகளையும் அதில் கூறியுள்ளார். பெண்களின் இளமைத் திருமணம் பற்றிக் கூறும்போது,

"கூவத் தெரியாதக் குயிலின் குஞ்சு
தாவாச் சிறுமான், மோவா அரும்பு!
தாலிய றுத்துத் தந்தையின் வீட்டில்
இந்தச் சிறுமி யிருந்திடு கின்றாள்
இவளது தந்தையும் மனைவியை யிழந்து
மறுதார மாய்ஓர் மங்கையை மணந்தான்"[61]

என்ற கவிதையின் மூலம் சமுதாயத்திலுள்ள பெண்களுக்கெதிரான அநீதியைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

---

59. பாரதியார், பாரதியார் பாடல்கள், ப. 177.
60. மேலது, ப. 180.
61. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப. 110.

### 1.11.4.மாயூரம் வேதநாயகம்

பெண்ணினத்தின் விடுதலைக்காகப் பாடுபட்டவர்களுள் இவரும் ஒருவராவார். பெண்கல்வி, பெண்மானம், பெண்மதிமாலை என்று பெண்களின் முன்னேற்றத்திற்காகவே மூன்று நூல்கள் எழுதியுள்ளார். இந்திய நாட்டின் பெண்கள், கல்வியில்லாமையால் அறியாமை என்னும் இருளில் மூழ்கித் தங்கள் வாழ்வை வீணாக்கிக் கொள்ளுகிறார்கள். அவர்களுக்குக் கல்வி கொடுத்தால் சுயமாகச் சிந்தித்து விடுதலை பெற்று வாழ்வார்கள் எனக் கருதிய மாயூரம் வேதநாயகம்,

**"பெண்களுடைய மனமும், ஆண்களுடைய மனமும் ஒரே தன்மையாய் இருப்பதால், பெண்களுக்கு மட்டும் கல்வியைப் போதிக்காவிட்டால் அவர்களுடைய எண்ணம் எப்படி நல்வழியிலே நிலை கொள்ளும்? 'காசுக்கொரு குதிரையும் வேண்டும், காற்றைப் போல பறக்கவும் வேண்டும்' என்பது போலவும், 'புல்லுண்ணாத பசுவும் வேண்டும், பூரணமாகக் கறக்கவும் வேண்டும்' என்பது போலவும் 'பெண்கள் படிக்காதவர்களாய் இருக்கவும் வேண்டும், நல்லவர்களாய் நடக்கவும் வேண்டும்' என்றால் எப்படி நம்முடைய மனப்போக்கு நிறைவேறும்? மாவுக்கும் ஆசை, பணியாரத்துக்கும் ஆசையா?"**[62]

எனப் பெண்ணுக்குக் கல்வி அளிக்காமல் அவளைப் பழைய மரபுகளிலேயே வைத்துப் பார்க்கும் ஆணினத்தைச் சாடுகின்றார்.

இந்த நாட்டில் பெண்களை அடிமைகளைப் போலவும், விலங்குகளைப் போலவும் நடத்துவது மிகவும் வருத்தமுடையது. பெண்களை விலைக்கு வாங்குவதைப் போல வாங்கிக் கொடுமைப்படுத்துகிறார்கள். அவர்களுக்குச் சுதந்திரம் இல்லை, எதிர்த்துப் பேசவும் துணிவில்லை என்பதை,

**"இந்த நாட்டில் பெண்களை அடிமைகளைப் போலவும், விலங்குகளைப் போலவும் நடத்துவது மிகவும் வருந்தத்தக்கச் செய்தியாயிருக்கின்றது. மாதர்களை விலைக்கு வாங்குவது போல் வாங்கிக் கொடுமையாக நடத்துகிறார்கள். நாயே, பேயே, கழுதையே, மாடே என்கிற பேச்சைத்**

---

62. மாயூரம் வேதநாயகம் பிள்ளை, பெண் கல்வி, ப. 3.

**தவிர, வேறே ஒரு பேச்சும் மாதர்களிடத்தில் ஆண்கள் பேசுகிறதில்லை. உதைக் கொடையைத் தவிர வேறு கொடையில்லை”**[63]

என வருந்தி இத்தகையத் துன்பங்களிலிருந்து பெண்களை மீட்பதற்கான வழியையும், ஆணாதிக்கக் கட்டுப்பாட்டில் உள்ள பெண்கள் தங்களின் உரிமைகளைப் பெறுவதற்கான உத்தியையும் கூறியுள்ளார். இவ்வாறு பெண்களின் முன்னேற்றத்திற்காக மாயூரம் வேதநாயகத்தின் பங்கு மிகவும் குறிப்பிடத்தக்கது.

### 1.11.5.தமிழ்த்தென்றல் திரு.வி.க

தமிழ்த்தென்றல் எனப் போற்றப்படும் திரு.வி.கல்யாணசுந்தரனார் பெண் விடுதலைக்காகப் பாடுபட்டவர். இவர் “பெண்ணின் பெருமை” என்ற நூலை எழுதியுள்ளார். இவர் பெண்மையை உயர்வாகப் போற்றியுள்ள திறத்தைப் பற்றி வேதாசலம்,

**“பெண்மை என்பது ஒரு நுண்மை. அந்த நுண்மைப் பெண்மைதான் அழகு ~ பாட்டு ~ தெய்வம். பெண்மையின் நுண்மை உணர்வோர்க்கு மாதர் தெய்வம் போல் தோன்றினர். பெண்களை வெறுத்துக் கூறும் ஆண்மகன் எங்கிருந்து தோன்றினான் என்பதை எண்ணுவானாக”**[64]

என்னும் அறிவுரையை உலகுக்குத் தந்துள்ளமையை உணரமுடிகின்றது என்று பாராட்டியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

### 1.11.6.இராஜம் கிருஷ்ணன்

**“ஓர் ஆரோக்கியமான சமுதாய வளர்ச்சிக்கும், மனிதகுல மேன்மைக்கும் ‘பெண்’ பற்றிய ஆய்வுகளும், சிந்தனைகளும் இன்றியமையாதவையே”**[65]

எனத் தம் நூலின் முன்னுரையில் இராஜம் கிருஷ்ணன் கூறியுள்ளார். இதுபோன்ற படைப்புகளால் பெண்ணியத்தின் வளர்ச்சி நிலை வேரூன்றி நிற்கிறது.

---

63. மாயூரம் வேதநாயகம்பிள்ளை, பெண்கல்வி, ப. 119.
64. ஆ.வேதாசலம், திரு.வி.க. மணிமொழிகள், பக். 60-61.
65. இராஜம்கிருஷ்ணன், காலந்தோறும் பெண், ப.2.

### 1.11.7.அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகம்

பெண்களுக்கென நிறுவப்பட்ட இப்பல்கலைக்கழகம் பல ஆராய்ச்சிகளை நிகழ்த்தி, பெண்களுக்கு ஏற்படும் சிக்கல்களுக்குச் சிறந்த முறையில் தீர்வு கண்டுள்ளது. இப்பல்கலைக்கழகத்தின் முன்னாள் துணைவேந்தர் தேவதத்தா பெண்களின் முன்னேற்றத்திற்காக அரும்பாடுபட்டு, பேராசிரியர்களின் கூட்டு முயற்சியால் "சிறுகதைகளில் பெண்ணியம்" என்ற நூலை வெளியிட்டு, பெண்களின் சிக்கல்களைத் தெளிவுபடுத்தி, அவற்றிற்கானத் தீர்வுகளையும் அந்நூலில் தெளிவுபடுத்தியுள்ளார். இவ்வாறு பெண்களின் முன்னேற்றத்திற்காகப் பல ஆராய்ச்சிகளை இப்பல்கலைக்கழகம், மேற்கொண்டு வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

## 1.12.தமிழகத்தில் பெண்கள் படைப்பாக்கத் துறையில் ஈடுபட்டதற்கான பின்புலம்

தமிழகத்தில் பெண்ணியம் ஓர் இயக்கமாகத் தோற்றம் பெற்ற பிறகு பெண்கள் தமக்கான உரிமையை, பிரச்சினையை, விடுதலையை முன்னெடுத்துச் செல்லும் கருவியாக நவீன இலக்கியங்களைக் கையில் எடுத்துக் கொண்டனர். பெண்கள் தமது உணர்வுகளை, அனுபவங்களைத் தமது மொழியில், நடையில் வெளிப்படுத்தக் கூடிய இலக்கிய வடிவமாய்ப் படைப்பாக்கத் துறையைத் தேர்வு செய்தனர். ஆகவே, பெண்கள் தம்மை எழுதுவதன் மூலம் தமக்கான வரலாற்றைக் கட்டமைக்க முற்பட்டுள்ளனர்.

பெண்கள் பற்றிய பிரச்சினைகளை ஆண்கள் தெரிவிப்பதைக் காட்டிலும், பெண்கள் சற்று ஆழமாகவும், நுணுக்கமாகவும் தெரிவிக்கக் கூடும் என்பதால்தான் பெண்கள் படைப்பாக்கத் துறையில் ஈடுபட்டதற்கான காரணமாக இருக்கலாம். உலகெங்கும் உள்ள பெண்களின் பிரச்சினைகளையும் அவர்களின் மனக் குமுறல்களையும், சமுதாயத்தின் தாக்கங்களையும் பால் பாகுபாடுகளையும் தகர்க்க இயம்பும் ஆயுதமாகவும் சமுதாயத்தில் பெண்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்தும் நோக்குடனும் படைப்பாக்கத் துறையைத் தேர்வு செய்தனர்.

நம்முடைய சமகால வாழ்க்கை நிகழ்வுகளை, நம்மைச் சுற்றியுள்ள சமூகம் தொடர்பான செய்திகளைப் பதிவு செய்யும் ஆவணங்களாக இலக்கியங்கள் அமைகின்றன. காலப் போக்கில் இலக்கியங்களின் வடிவங்களில் மட்டுமல்லாது பொருளிலும் மாற்றங்கள் நிகழ்வது இயல்பு எனலாம்.

தந்தை வழிச் சமூகம் தோற்றம் பெற்ற பிறகு பெண்கள் இரண்டாம் நிலைக்குத் தள்ளப் பெற்றனர். கல்வியும் பொருளாதாரமும் ஆண்கள் கையிலேயே இருந்து வந்தன. எனவே, பெண்களும், ஆண்களைச் சார்ந்து வாழ்ந்து வந்துள்ளனர். இன்றைய நிலையில் கல்வியிலும் பொருளாதாரத்திலும் பெண்கள் தன்னிறைவு பெற்று வருகின்றனர். இதன் காரணமாகத் தங்கள்மீது கற்பிக்கப் பெற்று வந்தவைகளைக் கேள்வி கேட்கத் தொடங்கி விட்டனர். ஏறக்குறைய தொண்ணூறுகளுக்குப் பிறகு, இலக்கியத் துறையில், குறிப்பாகக் கவிதைத் துறையில் பெண்ணியம் பற்றிய பதிவுகளைத் தடம் பதிக்கத் தொடங்கினர்.

### 1.12.1.காரணங்கள்

பல ஆண்டுகளாக அடிமைப்பட்டுக் கிடந்த பெண்கள் விழிப்புணர்வு பெற்றுத் தங்களுக்கான மொழியாகக் கவிதையைக் கட்டமைத்து வந்தனர். இம்மொழி வழியே கவிதையினுள் செயல்படுகையில் தங்களுடைய எல்லை விரிவடைவதாக உணர்கின்றனர். தங்கள் வலிகளை, வேதனைகளை, அறைகூவல்களை, ஏக்கங்களைப் பதிவு செய்யும் ஊடகமாகக் கவிதையைக் கையாளத் தொடங்கினர்.

இக்கவிதைகள் வழியே பெண்கள் நிலை குறித்தும், அவர்தம் வாழ்வியல் சார்ந்த உரிமைகள் குறித்தும், இன்றையச் சமுதாயம் ஆர்வமாகச் சிந்தித்துச் செயல்பட வேண்டும் என்ற தம் வேட்கையை வெளிப்படுத்திவருகின்றனர். பெண்கள் முன்னேற்றத்திற்குத் தடைக்கல்லாக இருப்பனவற்றைச் சுட்டிக்காட்டவும், சமுதாயத்தில் பெண்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்தும் நோக்குடனும் கவிஞர்கள் கவிதைப் படைப்பாக்கத் துறையில் ஈடுபட்டனர்.

## 1.13.மரபுவழிச்சிந்தனையும் பெண்ணுரிமையும்

ஆணாதிக்கச் சமூகத்தால் உருவாக்கப்பெற்ற அனைத்தையும், ஏற்றுக் கொண்டு விட்டால் பெண்ணுரிமை என்று பேசுவதற்கு இடமில்லாமல் போய்விடும். இருபதாம் நூற்றாண்டின் இறுதிக்காலத்தில் பெண்கள் படைப்பாக்கத்துறையில் ஈடுபட்டதுகூட ஒரு வகையில் பெண்ணுரிமைக்கான முதல் படி என்று கொள்ளலாம்.

பெண்ணுரிமையை மீட்டெடுப்பதில் தங்கள் மீதான கற்பிதங்களைக் கேள்வி கேட்பதும் ஒரு வகையான மீட்சி நடவடிக்கைதான். அந்த வகையில் தங்கள் மீதான கற்பிதங்களுக்கு மாற்று கற்பிக்கப்பட வேண்டும் என்றில்லாமல், இருப்பதன்மீது வினாக்களைப் பதிவு செய்வதையும், கவிஞர்களின் படைப்புகளில் காணலாம்.

பெண்ணுரிமை என்பது மரபின் தொடர்ச்சியைப் பாதிப்பதாக அமைந்து விடக் கூடியது என்கிற சிந்தனையோடு படைக்கப்பட்ட கவிதைகளும், மாறாக மரபின் பாதையை மடைமாற்றுவதன் மூலம் பெண்ணுரிமையைத் தோற்றுவிக்க முடியும் என்ற நோக்கிலான கவிதைகளும் தமிழ்க் கவிஞர்களால் படைக்கப்பட்டுள்ளன.

பெண்ணுரிமையைத் தவறாகப் பொருள் புரிந்து கொண்டு விடுகிற ஒரு நிலையும் பெண்களிடையே ஏற்பட வாய்ப்பிருக்கிறது. எனவே, அவ்வாறு பெண்ணுரிமையைத் தங்கள் போக்கில் புரிந்து கொள்ளும் சிலர் கவர்ச்சி உடை உடுத்தி, பொழுது போக்கு மன்றங்களுக்குச் செல்வது போன்ற செயல்களில் ஈடுபடுவதைக் காணமுடிகின்றது. குடும்பப் பொறுப்பு உள்ளிட்ட சமுதாயப் பொறுப்பைப் புறக்கணித்து மனம் போன போக்கில் வாழும் உரிமையைக் கோருவதல்ல பெண்ணுரிமை. இத்தகைய உரிமை ஆணுக்கும் பெண்ணுக்கும் கூடாது என்பதே ஏற்கத்தக்க கோட்பாடாகும்.

இருப்பினும் பெண்களுக்கு என்று தனியறங்கள் வகுக்கப்பட்டும், சுமத்தப்பட்டும் வந்ததை உணர்ந்தும், ஆண்கள் கண்டும் காணாமல் இருந்ததைக் கணக்கில் எடுத்துக் கொண்டு பெண்கள் போராட வேண்டிய சூழலைக் கவிஞர்கள் வெளிப்படுத்தியுள்ளனர்.

## 1.14.தொன்மங்களும் பெண்ணியமும்

தொன்மம் (*Mith*) என்பது பழங்கதை வடிவம். நீண்ட வரலாற்றின் சில நிகழ்வுகளையும் உணர்வுகளையும் சாராம்சமான கதை வடிவத்தில் ஆக்கித் தருவது தொன்மமாகும். சங்க இலக்கியத்தில் தொன்மம் பற்றிய செய்திகள் காணக்கிடக்கின்றன. பெண்ணியத் திறனாய்வின் மூலம் இச்செய்திகளை வெளிக்கொணர முடியும். சமுதாயவியல் அடிப்படையில் பெண் ஏன் அடிமையானாள்? என்பதை ஆராய முடியும். களவு - கற்பு ஆகிய உறவுகளில் பெண்ணுக்கு வரையறைகளும் ஒழுக்கக் கட்டுப்பாடுகளும், அச்சம், மடம், நாணம் போன்ற உணர்வுகளும் வலியுறுத்தப்படுகின்றன. இத்தகைய ஆராய்ச்சியின் மூலம் தொன்மங்களைப் பற்றியும், பெண்ணியத்தைப் பற்றியும் நன்கு அறிந்து கொள்ள முடியும்.

## 1.15.பெண் மொழியும் பெண் உடலும்

பெண்மையின் இயல்பான, உள்ளார்ந்த கூறுகளைப் பிரதிபலிக்கும் ஊடகமாக மொழி விளங்குகிறது. மரபு வழியில் அங்கீகரிக்கப்பட்ட எழுத்து மொழி, ஆண் ஆதிக்கத்தைச் சார்ந்தது என்று பெண்ணியச் சிந்தனையாளர்கள் கருதுகின்றனர். குடும்ப உறவுகளிலும், சமூக உறவுகளிலும் பணிந்து போகிறதாகப் பெண்ணின் மொழி வெளிப்படுகிறது. பெண்ணுரிமை, பெண் விடுதலை ஆகிய சூழல்களில் பெண்ணின் மொழி கூர்மையடைந்து, புதிய ஆளுமையைப் பிரதிபலிப்பதாகப் பெண்ணியத் திறனாய்வு கருதுகிறது.

ஆண்டாண்டு காலமாகப் பெண்களின் உடலை "அழகு" என்ற பெயரில் போகப் பொருளாகவேக் கருதி வருணித்து வருகிறார்கள் என்று பெண்ணியம் கூறுகிறது. ஆனால், பெண் தன் உடல் உறுப்புகளின் வலிமையையும் மேன்மையையும் முதலில் அறிந்து கொள்ள வேண்டும் என்று பெண்ணியம் சொல்லுகிறது.

## 1.16.சமுதாயத்தில் பெண்களின் இடம்

மனிதனது உற்பத்தியில் ஏற்பட்ட மாற்றங்கள் வாழ்க்கை முறைகளையும் வெகுவாகப் பாதித்தன. எனவே, ஆண், பெண் உறவு நிலைகளிலும் மாற்றங்கள் தோன்றலாயின. சொத்துக்கள் அதிகமாக அதிகமாகக் குடும்பத்தில் ஆணின் அந்தஸ்து மென்மேலும் உயரலாயிற்று. பெண்ணின் ஆளுமைக்குட்பட்ட மறு உற்பத்தியும்கூட ஆணின் வசமாக்கப்பட்டதால் ஆண் தனது சொத்துக்களுக்கான வாரிசைத் தேர்வு செய்வதில் தனது கவனத்தைத் திருப்பினான். வாரிசு உரிமையை முற்றிலுமாகத் தனதாக்கிக் கொள்ள ஆண் தன் முயற்சியை மேற்கொண்டான். பெண் வழியில் அமைந்திருந்த பரம்பரை முறையானது, ஆண் வழியொற்றியதாக மாறியது. வாரிசு உரிமையும் ஆணின் வசப்பட்டுப் போனமையால் பெண்ணின் சமூக அந்தஸ்து பெரிதும் குறைந்து போனது. சொத்துக்கள் யாவும் ஆண் பிள்ளைகளுக்கே உரிமைப்பட்டுப் போயின.

வாரிசு உரிமையை நிலைப்படுத்திக் கொள்வதற்காகப் பெண் மீது கடுமையான கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. அடக்கமும், பணிவும், கற்பும், பெண்ணுக்கு இலக்கணமாக வரையறுக்கப்பட்டன. இதனடிப்படையில் கலை, இலக்கியம், மதம் போன்ற அனைத்துத் துறைகளிலும் பெண் மீதான அடக்கு முறைகள் நியாயப்படுத்தப்பட்டன. ஆண் வர்க்கத்தால் வடிவமைக்கப்பட்டச் சமுதாயம் பெண்களுக்கென்று தனிக் கட்டுப்பாடுகளையும், ஆண்களுக்கென்று சில, பல சலுகைகளையும் பாரபட்சமாக வரையறை செய்தது.

ஆண்களுக்கு வீரம், தலைமை தாங்கும் பண்பு முதலியவற்றையும், பெண்களுக்கு அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்பன போன்ற குணங்களையும் கூறிப் பெண்கள் இவற்றைச் சிரமேற்கொண்டு செயலாற்றி வாழ்வதே அவர்களுக்கு அழகு என்றும் வலியுறுத்தப்பட்டது. சமூகத்தில் ஆண், பெண் ஆகிய இருபாலருக்கிடையேயும் ஏற்றத் தாழ்வுகள் உருக்கொண்டு நிலைத்துப் போயின. காப்பியக் காலத்தில்

பெண்களுக்குக் கற்பு பற்றிப் போதிக்கப்பட்டது. பெண்கள் கற்பைத் தங்கள் தனிப் பெருங்குணமாகப் போற்றிக் கடைபிடிக்க வேண்டியதன் அவசியமும் வலியுறுத்தப்பட்டது. ஆனால், ஆண்களுக்கு அவ்வாறு அது வலியுறுத்தப்படவில்லை. அதற்கு மாறாக, ஆண்கள் எத்தனை பெண்களோடு வேண்டுமானாலும் உறவு கொள்ளலாம். அவ்வாறு ஆண்கள் நடந்து கொள்வது அவர்களுக்குத் தனிப்பட்ட உரிமை போலவும், அதற்கும் மேலாக அது அவர்களுக்குப் பெருமையளிக்கும் செயலாகவும் கருதப்பட்டது.

கால மாற்றங்களின் போக்கிற்கிணங்க பெண்களின் வாழ்க்கை நிலையும், சமூகத்தரமும் பெரிதும் வீழ்ச்சியுற்று அவர்கள் பல்வேறு கொடுமைகளுக்கும் ஆளாகி வருந்தும் நிலை ஏற்பட்டது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிவரை, நிலவி வந்த இந்தியப் பெண்களின் வாழ்க்கைச் சூழல், ஏற்றத்தாழ்வுகள் நிறைந்ததாக விளங்கி வந்தது எனலாம். ஆணுக்கொரு நீதி, பெண்ணுக்கொரு நீதி என்ற மாறுபட்ட சமூக நீதி முறையும், ஆண் உயர்ந்தவன், பெண் தாழ்ந்தவள் என்கிற கருத்தும் சங்ககாலம் தொட்டே சமுதாயத்தில் படிந்து போய் காணப்படுகிறது.

பெண்கள் வலிமையற்றவர்கள், பாதுகாக்கப்பட வேண்டியவர்கள் என்னும் கருத்துக்கு உரம் சேர்க்கும் வகையில் திருமணமே ஒரு பெண்ணின் வாழ்க்கைக் குறிக்கோளாக எல்லை கண்டது. பெண் குழந்தை பிறப்பு முதல் இறப்பு வரை அடிமையாகவே நடத்தப்பட்டமையின் விளைவாகப் பெண்களுக்கு வெளியுலகத் தொடர்பே அறுந்து போனது; கல்வி மறுக்கப்பட்டது; பெரும்பாலான மனித உரிமைகள் பெண்களுக்கு மறுக்கப்பட்டன.

கி.பி. பத்தொன்பது - இருபதாம் நூற்றாண்டுகளில் இந்தியப் பெண்கள் சமூக அளவிலும், குடும்ப அளவிலும் பல்வேறுபட்ட கொடுமைகளுக்கு ஆளாகினர். பெண் சிசுக்கொலை, இளவயது திருமணம், பெண்களைத் தனிமைப்படுத்துதல், பெண்களுக்கு கல்வி மறுக்கப்பட்டமை, பலதார மணம், தேவதாசி முறை, கைம்மை நிலை,

**உடன்கட்டை ஏறுதல் போன்ற கொடுமைகள் பெண்களுக்கு இழைக்கப்பட்டன. ஐரோப்பியர்களின் வருகைக்குப் பின்னர் பெண்கள் விழிப்புணர்வு பெறத் தொடங்கினர். பல்வேறு சமூகச் சீர்திருத்த இயக்கங்கள் தோன்றிப் பெண் விடுதலைக்குக் குரல் கொடுத்தனர்.**

**இருண்ட பரிமாணங்களைத் தாங்கித் தங்களைச் சிறைப்படுத்திக் கொண்ட பெண்கள் மெல்ல மெல்ல வெளியுலகைக் காணத் தலைப்பட்டனர். சமுதாயத்தின் சரிபாதியாக விளங்கும் பெண்களது உரிமைகள் மறுக்கப்பட்டு இருளுக்குள் தள்ளப்பட்டதால், அவ்விருளிலிருந்து மீள்வதற்கு அவளுள் எழுந்த ஆவேச உணர்வின் பிரதிபலிப்பே பெண்ணியம் என்ற குரல் ஒலிப்பதற்குக் காரணங்களாக அமைகின்றன.**

## 1.17.பெண்ணியத் திறனாய்வும் மொழியும்

**பெண்மையின் இயல்பான, உள்ளார்ந்த கூறுகளைப் பிரதிபலிக்கும் ஊடகமாக மொழி விளங்குகிறதா? இல்லையா? என்ற விவாதம் பெண்ணியத் திறனாய்வில் நீண்ட காலம் எழுப்பப்பட்டு வருகிறதைப் பார்க்க முடிகின்றது. வெர்ஜினா வுல்.:ப் தனது நூலில் *(A Room Of One's Own)* மொழியானது பால் வேறுபாட்டைத் தன்னகத்தே கொண்டு விளங்குவதை வெளிக்கொணர்ந்தார். ஒரு பெண் எழுத்தாளர் தன் படைப்பைத் தொடங்கும் போது, அவர் பயன்படுத்துவதற்கான பொதுவான வாக்கிய அமைப்பு இல்லாததைக் காண்கின்றனர் பிரபலமான ஆண் எழுத்தாளர்கள்.**

> **"ஓர் இயல்பான உரைநடை என்பது வேகமானதாகவும் அதே சமயத்தில் ஒழுங்குடையதாகவும், பொருள் பொதிந்த அதே சமயத்தில் செயற்கைத் தன்மை இல்லாததாகவும், தனிப்பட்ட கலைக் கூறினைக் கொண்டிருந்தாலும், அது பொதுத் தன்மையை ஊறுபடுத்தாத வகையில் இருப்பதாகவும் விளங்க வேண்டும்"**[66]

**என்று கூறினார். வெர்ஜினா வுல்.:ப் இந்த மேற்கோளைச் சுட்டிக்காட்டி "இது ஆண்களின் வாக்கியமாக" இருப்பதை எடுத்துக் கூறுகிறார். இதுபோன்ற**

---

**66.** *Peter Barry, Beginning Theory an Introduction to Literary and Cultural Theory, Pp. 126-127.*

வாக்கியங்கள், தொடரமைப்புகள் பெண்களின் உபயோகத்திற்குப் பொருத்தமற்றதாய் விளங்குவதை அவர் சுட்டிக்காட்டுகிறார். இவ்வாறு பெண்களைப் பற்றிய திறனாய்வில் ஆணின் மொழி பயன்படுத்தப்படுகின்றது.

## 1.18.பெண் சுயத்தை இழத்தல்

பெண்ணை முதன்மைப் படுத்திய தாய்வழிச் சமூக அமைப்பு சிதைக்கப்பட்டு, தந்தைவழிச் சமூகம் தோற்றம் பெற்றபோது பெண் ஆணுக்குக் கீழானவளாய், இரண்டாம் நிலைக்குத் தள்ளப்பட்டாள். சொத்துரிமையும், வாரிசு உருவாக்கமுமே இதற்கு அடிப்படைக் காரணங்களாயின. இங்கு “பெண் உடல்” ஆணின் உடைமையாக்கப்பட்டது. கற்புக் கோட்பாடுகள் உருவாக்கப்பட்டன. இது பெண்ணின் பாலியல் உரிமை மீதான ஒடுக்கு முறைக்கு அடித்தளமிட்டது. தாய்மை புனிதமானதாகக் கற்பிக்கப்பட்டது. இவை அனைத்தும் திருமணம் மூலமே நிறைவேற்றப்பட்டன. இதனால் பெண் ஆணின் ஆசைகளைப் பூர்த்தி செய்பவளாகவும், வாரிசுகளைச் சுமப்பவளாகவும் ஆக்கப்பட்டாள். புதிய கட்டுப்பாடுகளும், சட்டதிட்டங்களும் பெண்கள்மீது திணிக்கப்பட்டன. ஆண் விரும்பியவாறு உருவாக்கப்பட்ட படிமமாகவே பெண் இருந்தமையை,

**“எமக்கு என்று**
**சொற்கள் இல்லை**
**மொழி எம்மை**
**இணைத்துக்கொள்வது இல்லை**
**உமது கவிதைகளில்**
**யாம் இல்லை**
**எனக்கென்று சரித்திரமில்லை**
**நீங்கள் கற்றுத்தந்ததே நான்**
**நான் வார்த்துத் தந்ததே நிஜம்”**[67]

என்ற கனிமொழியின் கவிதை வரிகளில், மரபுவழி சுய அடையாளத்தை இழந்த ஒரு பெண்ணின் குரல் ஒலிப்பதாக உள்ளது. ஆணாதிக்கச் சமூகம் உருவாக்கிய

---

**67.** கனிமொழி, கருவறை வாசனை, ப. 25.

புனைவாகவே பெண் உள்ளதையும், பெண் தொடர்பான அனைத்தும் சமூகத்தால் தீர்மானிக்கப்பட்டதையும், கவிஞர் மிக நுட்பமாகப் பதிவு செய்துள்ளார்.

> ***"இந்தச் சமூக அமைப்பில் எந்த ஒரு பெண்ணும் வளர்க்கப்படுவதில்லை. அவளுக்கென்றே தயாரிக்கப்பட்ட பிரத்யேகமான அச்சில் வார்க்கப்படுகிறாள்"***[68]

என்ற பாரதியின் கூற்றும் பொருத்தமாய் அமைகின்றது.

## 1.19.தாலி - மரபுக்குறியீடு

பெண்ணடிமைத் தனத்தின் ஒட்டுமொத்த இருப்பாக குடும்ப நிறுவனம் உள்ளது. இக்குடும்ப நிறுவனம் திருமண உறவுகளால் ஏற்படுத்தப்படுகிறது. இதில் பெண், எளிதில் விடுபட இயலாத வகையில் பிணைக்கப்படுகிறாள். திருமணத்திற்கு முன் தந்தையின் கட்டுப்பாட்டுக்குள்ளும், திருமணத்திற்குப் பின் கணவனுக்கு அடிபணிந்தும், வயது முதிர்ந்ததும், மகனுக்கு அடங்கியும் வாழ வேண்டிய வகையில் ஆண் அதிகார மையம் கட்டமைக்கப்பட்டுள்ளது என்பதை,

> ***"மனித சமூகம் தன் பால் உந்துதலை ஒரு நிறுவன அமைப்பிற்குள் நிறைவு செய்து கொள்ள ஏற்படுத்திய முறையே திருமணமாகும்"***[69]

என்று திருமண மரபுக் குறியீட்டு முறையைக் குறிப்பிட்டுள்ளார்.

நம் சமூக அமைப்பில் திருமண உறவு தவிர்க்கவியலாதது ஆகும். பெண்ணுக்கு ஆணின் துணையிலான திருமண வாழ்வே சமூக மதிப்பைப் பெற்றுத் தருவதாகக் கருத்தியல்கள் உருவாக்கப்பட்டுள்ளன. ஆகவே, பெண்ணுக்குத் திருமணம் என்பது அவளது விருப்பு, வெறுப்புகளுக்கு அப்பாற்பட்டது. கட்டுப்பாடுகளோடு வளர்க்கப்பட்ட பெண்ணுக்குத் திருமணம் ஓரளவு சுதந்திரத்தைத் தரும் என்ற எதிர்பார்ப்பு இயல்பாகவே அமைந்துவிடுகிறது. ஆனால், ஆண் அதிகார மையமாக மாற்றம் பெறுவதே "திருமண" உறவுகளில்தான் தொடங்குகிறது. இதனை,

---

68. பாரதி, பெண் வார்ப்பும் வளர்ப்பும், ப. 8.
69. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானுடவியல், ப. 368.

"சட்டாம் பிள்ளையாய்
அம்மா
சிறைக் காவலராய்
அப்பா
அறிவுச் சலவைக்குப்
படிப்பு
கைகொட்டி சிரித்து அடக்கி வைக்க
சுற்றம்
சிலுவையின் ஆணி தகர்த்து இறங்கி வந்தால்
கையில் தாலிக் கயிற்றோடு
கணவன்
உன் கருவறைக்குள் மற்றுமொரு
அடிமை"[70]

என்ற கனிமொழியின் கவிதை, பெண்ணடிமைத் தனத்தின் கருவியாக, குறியீடாக தாலிக்கயிறு உள்ளதை இக்கவிதை உணர்த்துகின்றது. பிறந்த வீட்டில் சிலுவைப் பாடாகவும், புகுந்த வீட்டில் தாலிக் கயிறாகவும் பெண்ணடிமைத் தனத்தின் வடிவம் மாற்றம் பெற்றிருப்பதை மிக நுட்பமாக உணர்த்துகிறார்.

## 1.20.திருமண அடையாளங்கள்

சமுதாயத்தில் திருமணங்கள் வாயிலாக அணிவிக்கப்படும் "அடையாளங்களை" ஏற்பதில்லை என்பதில் உறுதியாய் உள்ள பெண்கள் அதற்கு ஆட்பட வேண்டியிருக்கும் நிலையை,

"உறுதியாகத்தானிருந்தேன்
சடங்குகளை அணிவதில்லை என்று,
அப்பா அம்மாக்கள்
அக்கம் பக்கம் என்பதோடு
சுற்றிமேயும் கண்களுக்கும்
அங்கீகாரம் பெற்ற அடையாளம் காட்ட
கொடி போன்ற சங்கிலி
அணிவிக்கப்பட்டது.
நெரிசல்களில், பயணங்களில்

70. கனிமொழி, கருவறை வாசனை, ப. 25.

உரசப்படாமல் இருக்க
சங்கிலியை உள்போட்டும்
உச்சியில் பொட்டிட்டும்
குறைந்த பட்சம்
காலுக்கு மோதிரம் போட்டாவது
பிடித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது.
சடங்குகளை
பிணைக்கயிற்றை நெரந்தென்ன
காலம் சுமந்த கனத்தோடு
அழுத்துகின்ற நுகத்தடிகள்"[71]

என்னும் வெண்ணிலாவின் கவிதை வரிகள் உணர்த்துகின்றன. பெற்றோருக்காகவும், சமூகத்தில் திருமணம் ஆன பெண் என்னும் அடையாளம் காட்டுவதற்காகவும், தாலிக்கயிறு அணிவிக்கப்படுகின்றன என்பதை உணர்த்துகின்றார். இதனையே,

"மாட்டுக் கழியும்
கன்னிமாருக்குக் கயிறும்
எப்போதும் பாரம்தான்
என்ற பிடாரிக்கோ
கழுத்தோ இல்லா எக்களிப்பு"[72]

என்ற தமிழச்சி தங்கபாண்டியனின் கவிதை வரிகள், மாட்டிற்குக் கழியும், பெண்களுக்குத் தாலிக் கயிறும் பாரமாக இருப்பதாகக் கூறுகிறார்.

## 1.21.கணவனுக்காகக் காத்திருத்தல்

திருமணம் செய்து கொண்ட பெண் கணவனுக்கும், வீட்டிலுள்ள மற்றோருக்கும் பொருட்களைப் பார்த்துப் பார்த்து வாங்கி, விதவிதமாய் சமைத்து, பரிமாறி, தட்டுகழுவி வைக்கும் பெண் பசித்தபடியே காத்திருக்கிறாள். வீட்டில் கணவனுடன் சேர்ந்து சாப்பிட இயலாத அவள், உறவினர் வீடுகளுக்குப் புறப்படுகையில் எதிர்பார்ப்புடன் செல்கிறாள். என்பதை,

"பார்த்து பார்த்து வாங்கினோம்
விதவிமாய் சமைத்தோம்

---

**71.** அ.வெண்ணிலா, நீரிலலையும் முகம், ப. 14.
**72.** தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப. 77.

பணிவாய் பரிமாறினோம்
கை கழுவிய தட்டைக் கழுவினோம்
வாய் துடைக்க கூட
முந்தானை கொடுத்தோம்
எல்லாம் செய்துவிட்டு ஏனோ
பசித்திருக்கிறோம்
என்றோ ஒரு நாள்
அருகருகே அமர்ந்து
அவசரமில்லாமல் சாப்பிட்டு வர
விருந்துக்கு வந்தால்
ஆண்பந்தி முந்தி என்று
அங்கேயும்
அடுக்களையுள் காத்திருக்கச் சொல்கிறீர்கள்"[73]

என்ற வரிகள் உணர்த்துகின்றன. கணவன் உண்ட பின்புதான் மனைவி உண்ண வேண்டும் என்பது காலங்காலமாகச் சமுதாயத்தினரால் வகுக்கப்பட்ட மரபாக இருந்து வருகின்றது என்பதைச் சுட்டிக்காட்டுவதோடு, பெண்களின் ஏக்கம் மொத்தத்தையும் இக்கவிதையின்வழி உணர்த்தியுள்ளார்.

## 1.22.பெண்கள் தங்களை ஒப்படைத்தல்

பெண் என்பவள் என்றென்றும் ஆணுக்காகக் காத்திருப்பவளாக இருக்கின்றாள். தன் உடலைப் பேணிப் பாதுகாத்து ஆணிடம் ஒப்படைக்க வேண்டும் என்பதாக மரபு வழியாக அவளுக்குக் கற்பிக்கப்பட்டு வந்துள்ளமையை,

"உடல் தொட்டிலாகவும், மார்பாகவும் இருந்து
உயிரும் உணவும் அளித்து
அரவணைத்துப் பாதுகாக்கப்படும்
ஆண்பந்தங்கள்"[74]

என்னும் மாலதி மைத்ரியின் கவிதையின் வாயிலாக அறியமுடிகின்றது.

"ஒரே ஆணுக்காய் உடலைக் காத்து வைப்பதும்
பலருக்காய் உடலை இரகம் மாற்றி

---

**73.** அ.வெண்ணிலா, மு.நூ., ப. 19.
**74.** மாலதி மைத்ரி, நீரின்றி அமையாது உலகு, ப. 33.

**அவர்களுக்கு உற்சாகமூட்ட விருந்து வைப்பதும்,**
**பெண்களுக்கு மிரட்சியூட்டும் உடலாய்**
**மாறி நிற்பதுமெனச்**
**சொட்டிக் கொண்டேயிருக்கும் நீரைப்போல**
**மதமேறுகிறது பாறையிலும் துளையேறுகிறது"**[75]

என்ற குட்டி ரேவதியின் கவிதையும், பெண்ணின் உடல் ஒரு ஆணுக்காகப் பாதுகாக்கப்பட்டு ஒப்படைக்கப்படுவதை உணர்த்தி நிற்கின்றது.

## 1.23.பெண்களின் பொறுமைக்குணம்

பெண்கள் பொறுமையுடனும், சகிப்புத் தன்மையுடனும் இருக்கவே பயிற்றுவிக்கப்படுகிறார்கள். "கல்லானாலும் கணவன் புல்லானாலும் புருஷன்" என்பது தமிழ்ப் பெண்களின் மரபாகும். இதன் விளைவாகக் கணவன் வேலைக்குச் செல்லாமலும், மனைவியை அடித்துத் துன்புறுத்துகிறவனாக இருந்தாலும், அவன் உழைத்த பணத்தில் குடித்துவிட்டு வந்து அணைத்தாலும் மனைவியானவள் அனைத்தையும் தாங்கிக் கொண்டுதான் குடும்பம் நடத்த வேண்டும். என்று இச்சமுதாயம் எதிர்பார்க்கிறது என்பதை,

> **"பெண் என்பவளையும், பெண் என்பதையும் வரலாறும், மரபு ரீதியான சமூகம் எனப்படும் ஆணாதிக்கச் சமூகங்களும் வரையறுத்துக் கொண்டு வந்துள்ளன. பெண்ணை ஆணுக்கானவளாகவும், ஆணின் தலைமுறையை சந்ததியைச் சுமந்து, வளர்த்தெடுப்பவளாகவும் வரையறுத்ததோடு, அவளுக்கான தேவைகள், வளர்ச்சிகள், ஒழுக்கமைவுகள், கற்பு நெறிகள், மொழி - என அனைத்தையும் முடிவு செய்பவையாக வளர்ந்தன"**[76]

என்ற வரிகள் பெண்களின் பொறுமைக் குணங்களைச் சுட்டுவதாய் அமைந்துள்ளது. இதனை மீறிச் செயல்படும் பெண்களின் ஒழுக்கம் விமர்சனத்திற்கு உள்ளாகிறது. இது பெண்ணை அடக்கியாள ஆண்கள் கையாளும் வழிகளுள் ஒன்று என்பதை

---

**75.** குட்டி ரேவதி, உடலின் கதவு, ப. 54.
**76.** ஆர்.சிவக்குமார், அவ்வை மண்ணில் பெண் எழுத்தாளர்கள், ப. 52.

விளக்குகின்றது. இவ்வாறு எல்லா வகையிலும் பெண்கள் பொறுமையாகவே இருக்கின்றனர் என்பதை,

> "*அவன் உழைத்த காசில்*
> *தினம் குடித்துவிட்டு வந்து*
> *அவளை அணைக்கும் கணவனை*
> *பத்தினிமார் வரிசையில் இடமின்றிப்*
> *போகுமா என நிதம்*
> *பொறுத்துக்கொள்வாள்*"[77]

என்ற கனிமொழியின் கவிதை, சமூக மதிப்பீடுகளுக்கு அஞ்சி வேறு வழியின்றி வாழவேண்டிய நிர்பந்தம் பெண்ணுக்கு ஏற்பட்டிருப்பதை மிக நுட்பமாக உணர்த்துகிறது.

## 1.24.பெண்களின் மீதான தீண்டாமை

> "*தீட்டு, தீண்டாமை என்ற கருத்தைப் பெண் மீது திணித்ததில் சமயங்கள் முக்கியப் பங்கு வகிக்கின்றன. சாதி, மதம், இனம் இவற்றின் அடிப்படையில் எழும் சமூகக் கட்டமைப்புகள் பெண்ணின் உடலை மையமாக வைத்து இயங்குகின்றன.*
> *சாதித்தூய்மை, மதத்தூய்மை, இனத்தூய்மை இவற்றை மையமாக வைத்து இயங்கும் சமூக அமைப்புகள் பெண்ணின் தூய்மை என்பதை வன்முறையுடன் வலியுறுத்துகின்றன*"[78]

என்ற மாலதி மைத்ரியின் வரிகள், சமூகத்தால் ஏற்படும் பெண்களின் மீதான தீட்டு மற்றும் தீண்டாமை, சாதி, மதம், இனம் இவற்றால் ஏற்படும் சமூக வன்முறைகள் போன்றவற்றைச் சுட்டுவதாய் அமைந்துள்ளன.

ஓர் உயிரை உற்பத்தி செய்யக்கூடிய உயிரணுக்களை மாதாந்திர சுழற்சியாகப் பெற்றிருப்பது பெண்ணின் பலமே. இத்தகைய பலத்தைப் பலவீனமாக எண்ண வைத்து தீட்டு, தீண்டாமை என்ற கருத்தாக்கத்தைப் பெண் மரபு ரீதியான கட்டுப்பாடுகளைக் காலந்தோறும் தமக்குச் சாதகமாக உருவாக்கிக் கொண்டே வந்துள்ளது.

---

**77.** கனிமொழி, கருவறை வாசனை, ப. 28.
**78.** மாலதி மைத்ரி, காலச்சுவடு, நவம்பர், 2005, ப. 17.

இவ்உருவாக்கத்தின் ஊடே பெண் மீது கடுமையான கட்டுப்பாடுகளை விதித்துக் கொண்டும் வந்துள்ளனர். இது ஒருதலைபட்சமான செயல்பாடாக அமைந்துள்ளது.

***"எந்நாடு போனாலும்***
***தென்னாடு உடைய சிவனுக்கு***
***மாதவிலக்குள்ள பெண்கள்***
***மட்டுமே ஆவதே இல்லை"***[79]

என்ற கனிமொழியின் கவிதை பெண்கள் மீதான தீட்டினை வெளிப்படுத்துவதாய் உள்ளது என்றும், தனக்குச் சாதகமாகக் கட்டுப்பாடுகளைத் தளர்த்திக் கொண்டே வரும் ஆதிக்கச் சமூகம், தனக்குக் கீழாய் எப்பொழுதும் பெண்ணை அடக்கி வைக்கவே விரும்புகின்றது.

இவ்வாறு ஒரு காலத்தில் மரபாக ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்று பிரிதொரு காலத்தில் மாற்றம் பெறுகிறது. இதனையே "ஏற்பும் மறுப்பும் மரபின் அம்சங்கள்" என்கிறார் தி.சு. நடராசன். "பழையன கழிதலும், புதியன புகுதலும்" வரவேற்கக் கூடியதே. ஆனால், இது பெண் மீது உணர்த்துவதோடு ஆணுக்குள் அடங்கிப்போகும் பெண்ணடிமைக் கருத்தையே வலியுறுத்துகிறது எனப் புதிய பொருளைத் தருகிறார் கவிஞர் கனிமொழி.

### 1.25.பெண்ணின் கற்பு

கற்பு என்பது பெண்ணோடு மட்டுமே தொடர்புபடுத்திப் பார்க்கப்படும் மரபுக் கோட்பாடாகும். ஆணைவிடப் பெண் தாழ்ந்தவள் என்ற கருத்துப் புனைவின் தாக்கமாகும். இதனை,

> ***"கற்பு என்பது ஓர் உணர்வு, அவரவர் மனத்திற்கு எது சரியென்று பட்டதோ அதுவே கற்பு என்று கொள்ளும் கருத்து வளர்ச்சியும் இன்றைய இலக்கியங்களில் காணக்கிடைக்கிறது"***[80]

என்பதைப் பிரேமா அவர்கள் உணர்த்துகின்றார். இது பெண்களை வீட்டை விட்டு வெளியே செல்லாமல் அடைத்து வைப்பதற்குப் பயன்படுத்திய உத்திகளுள் ஒன்றாகும்.

---

79. கனிமொழி, அகத்திணை, ப. 48.
80. இரா. பிரேமா, கற்பு-கலாச்சாரம், ப. 83.

"மாலை மசிவதற்குள்
கூட்டடையாவிட்டால்
கற்புக்குக் களங்கம்'
வாசல் தாண்டுவதைக்
குறைத்துக் கொண்டேன்"[81]

என்ற கனிமொழியின் கவிதை, பெண்களின் கற்புப் பற்றிக் குறிப்பிடுவதை அறியமுடிகின்றது.

## 1.26.பெண்ணை வருணித்தல்

பெண்ணை அழகானவள், பூவிலும் மென்மையானவள், வலிமையற்றவள் என்று சொல்லிச் சொல்லிப் பல நூறு ஆண்டுகளாய் வருணித்து வருவது இந்தச் சமுதாயத்தின் நோக்கமாக இருந்து வருகிறது. பெண்ணானவள் வீட்டிற்கு குத்துவிளக்காக விளங்குபவள் என்று சொல்லி அவர்களை மூலையில் வைத்துவிட்டு அதிகாரம் செய்வதற்கும், அடக்கி ஆள்வதற்கும், சொற்படி கேட்டு நடக்கும் கைப்பாவைகளாக வைத்திருக்கின்றனர் என்பதை,

"குத்து விளக்கென்று
பெண்ணை சொல்வார்
ஆங்கே மூலையிலே
மோனத்துவம் செய்வதற்கும்
எடுப்பர் கையிலெல்லாம்
அடங்கி இருப்பதற்கும்"[82]

என்ற வரிகள் புலப்படுத்துவதாய் அமைகின்றன.

## 1.27.பெண்கள் மீதான கட்டுப்பாடுகள்

பெண்ணானவள் தன் சுய விடுதலையுணர்வைப் பறிகொடுத்த ஓர் அபலையானவள். தன் அவலக்குரலையும் அடிமைத் தளைகளில் அகப்பட்டுத் துன்புறும் கொடுமையினையும், தன் காரணமாக ஆழ்மனதில் எழும் ஆவேசத்தையும் வெளிப்படுத்துகிறாள். விடுதலைக் காடாகக் காட்சி தரும் கிராமத்தைத் தொலைத்த

81. கனிமொழி, சிகரங்களில் உறைகிறது காலம், ப. 26.
82. வைகைச் செல்வி, அம்மி, ப. 71.

தவிப்பினையும், தனக்குள்ளாகத் தணித்துக் கொண்டு, தன் குல தெய்வமாகக் காட்சியளிக்கும் கூர்க்காவைக் கண்டு ஆசுவாசப்பட்டுக் கொள்கிறாள்.

"இறுக்கிக் கட்டின இடுப்புத்
தடத்தினைத் தடவியவாறு
சாப்பாட்டு மேசையில் அமரக்கூடாது
கறுத்த கெண்டைக்காலினை ஆட்டக்கூடாது
அடுத்தவரோடு பேச வேண்டும் என
ஏகப்பட்ட முஸ்தீபுகளுடன் நான்
அழைத்துச் சென்ற வீட்டின் முன்
திண்ணையேயில்லை
வெற்றிலை எச்சிலை
எப்படித் துப்ப என்ற
பிலாக்கணத்துடன் திரும்புகையில்
வாசல் கூர்க்கா மட்டுமே
பிடித்திருந்ததாகச் சொன்னான்
பீடிக்காகவும் காவலுக்காகவும்"[83]

என்று தமிழச்சி தங்கபாண்டியன் பெண்ணின் ஆவேசத்தை எடுத்துரைக்கிறார். தன் உணர்வு கொள்ளபடாது எப்பொழுதும் ஏதேனும் ஓர் ஆளுமையினால் ஒடுக்கி ஆளப்படும் ஆழ்மனம் தக்க தருணத்தில் எவ்வாறாயினும் பீறிட்டு வெளிப்படவே செய்யும் என்று உணர்த்துகிறார்.

பெண்கள் எதிர்த்துப் பேசக் கூடாது, உரத்துப் பேசக் கூடாது, குத்த வைத்து உட்கார வேண்டும். அபத்தம் நிறைந்த சொற்களைப் பேசக் கூடாது என்பதும் மரபு வழியாகப் பெண்ணுக்குள் திணிக்கப்பட்ட கருத்துக்கள் ஆகும்.

"உரத்துப் பேசுவதற்கு ஆசிர்வதிக்கப்பட வில்லை நாங்கள்
வியர்வை அல்லது உதிரம் போல்
இயல்பாய் பெருகும் ஒரு சொல்லைத்
தம் போக்கில் உதிர்ப்பதற்கு
ஆயிரம் தடைகளுண்டு எம் வாழ்முறையில்
நன் நடத்தையின் பெயரால் இன்றும்

83. தமிழச்சி தங்கபாண்டியன், வணப்பேச்சி, ப. 49.

**குத்துக் காலிட்டே அமர்கின்றோம்.**
**அடுத்தவருக்கான பூச்சற்ற அதிருப்தியை**
**அபத்தம் களைந்த நேர்சொல் ஒன்றை**
**உச்சரிக்க வெட்ட வெளிக் கழிவறைகள் மட்டுமே எமக்கு"**[84]

என்று தமிழச்சி தங்கபாண்டியன், பெண்ணின் தன்னுணர்வினைக் காட்டுவதோடு, பெண் மீதான கட்டுப்பாடுகளையும் சுட்டிக்காட்டுகிறார். மேலும் இதனையே,

"**அதிகாரம் எப்பொழுதுமே, தான் அதிகாரம் செலுத்துகின்ற பொருளின் மொழியைப் பிடுங்கிக் கொள்ளுகிறது அல்லது அடக்கி வைத்து விடுகிறது**"[85]

என்னும் கருத்தும் மேற்காணும் கருத்திற்கு அரண் செய்வதாய் அமைகின்றது. இவ்வாறு காலங்காலமாகப் பெண்களின்மீது கட்டுப்பாடுகள் விதிக்கப்படுவதை மேற்காணும் கவிதையின் வழி அறியமுடிகின்றது.

## 1.28.ஆணுக்கொரு நீதி, பெண்ணுக்கொரு நீதி

இன்றைய சமூகத்தில ஒருத்திக்கு ஒருவன் என்னும் கோட்பாடு வேரோடியுள்ள அளவுக்கு "ஒருவனுக்கு ஒருத்தி" என்ற கோட்பாடு பதியம் போடவே இல்லை. இந்த மரபுத் தாக்கத்தின் அடிப்படையில் பெண்கள் மறுமணத்தைப் பற்றி நினைப்பதே மரபு மீறலாகக் கருதப்படுகிறது. ஆனால், ஆண்கள் பலதாரமணம் செய்வது என்பது சமூகத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒன்றாகும் என்பதைக் கீழ்வரும் கவிதை உணர்த்துகின்றது.

"**அவளைப் பிடித்ததும்**
**அக்கினி முன்னால்**
**நிமிர முடியாமல்**
**சுமையுடன் குனியும்**
**இன்றைய அவளின் அவனோ**
**வேற்றோர் ஊரில்**
**மாற்றான் பெண்ணை**
**அக்கினி சாட்சியாய் மறுமுறை**
**தொட்டு...**

---

84. தமிழச்சி தங்கபாண்டியன், அருகன், ப. 89.
85. க.பஞ்சாங்கம், மு.நூ., ப. 67.

**எல்லாமே வெள்ளை நிழல்கள்**
**வெளிச்சத்தின் இருட்டுகள்”**[86]

என்ற கவிதையின்வழி தாமரை, ஒருத்திக்கு ஒருவன் என்னும் கோட்பாட்டினை முன்வைக்கிறார். மேலும்,

**“திருமணம் என்பது பெண்ணின் வாழ்க்கையில் ஒரு தடவை மட்டுமே நிகழக் கூடியதாய் இருப்பதும் ஆணின் வாழ்க்கையில் ஒன்றுக்கு மேற்பட்ட தடவைகள் நிகழ வாய்ப்பிருப்பதுமான நடுநிலையற்ற சமுதாயப் போக்கு”**[87]

என்ற வரிகள், ஆணுக்கு ஒரு நீதி, பெண்ணுக்கு ஒரு நீதி என்ற கோட்பாடு காலங்காலமாகக் கடைப்பிடிக்கப்பட்டு வருவதை உணர்த்துகின்றன.

## 1.29.பிள்ளைபெறும் இயந்திரம்

சமூக மரபுக் கூறுகளும், ஒழுக்கங்களும் ஆண் - பெண் இருபாலருக்கும் உரியது. ஆனால், மரபுகளையும், ஒழுக்கங்களையும் மீறி நடக்கும் ஆணைச் சமூகம் கண்டு கொள்வது கிடையாது. கணவனானவன் மித மிஞ்சிய ஒழுக்கக் குறைபாடு உள்ளவனாக இருந்தாலும், மனைவியானவள் எல்லாவற்றையும் தாங்கிக் கொண்டுதான் குடும்பம் நடத்த வேண்டும் என்று இச்சமுதாயம் எதிர்பார்க்கிறது. இதனை,

**“மது தீர்த்த புட்டிகளை**
**உடைத்துக் கொண்டாடுகிறான்**
**கூலிக்கு புணர அழைத்தவளை**
**பணம் கொடுக்காமல் ஏமாற்றியோ**
**அந்நியப் பெண்களின் அறைக்குள்**
**அத்துமீறி நுழைந்த சாகசத்துடனே**
**அன்றைய கலக நாளை**
**தன் வீரகாவியத்தின் பக்கத்திற்குள்**
**தைத்து விடுகிறான்**
**பின் சாமத்தில்**

---

**86.** இரா.மீனாட்சி, மீனாட்சி கவிதைகள், ப. 121.
**87.** சேதுமணிமணியன், தமிழ் நாவல்களில் மதிப்புகள், ப. 95.

தன் ராஜ்ஜியத்தின்
கோட்டைக்குள் நுழைபவன்
பேழைத் திறந்து
தனது சாம்ராஜ்ஜியத்தின்
வாரிசை உருவாக்கும்படி
கட்டளை இடுகிறான்
அவனும் அவனுடைய
சவத்துக்குச் கொல்லி வைக்கும்
புத்திரர்களை
ஈனத் தயாராகிக் கொண்டிருக்கிறாள்"[88]

என்று மாலதி மைத்ரி தமது கவிதையின்வழிச் சுட்டிக்காட்டுகிறார். தீய செயல்களின் உறைவிடமாக விளங்கும் கணவனுடன் வாழ்கின்ற மனைவி, அவன் செய்கின்ற தவறுகளை எல்லாம் பொறுத்துக் கொண்டு வாழ்கிறாள் என்பதை உணர்த்துகின்றது.

## 1.30.பெண்ணிய ஊன்றுகோல்

ஆணும் பெண்ணும் இணைந்தே இருக்கும் இச்சமூகத்தில் இருபாலருக்கும் இருவேறு மதிப்பீடுகள் நிலவி வருவதைக் காண முடிகின்றது. ஆண் குழந்தையைப் பற்றிப் பெருமிதம் கொள்ளும் மனம் பெண் குழந்தையை ஒரு சுமையாகக் கருதுகிறது. பெண் திருமணம் முடிந்து புகுந்த வீட்டிற்குச் சென்று விடுவதால், பெற்றோருக்கு ஊன்றுகோலாக ஆண் மகன் இருக்கின்றான் என்ற காரணத்தால் மரபு வழியாகவே ஆண் குழந்தை வரவேற்பிற்கு உரியதாகக் கருதப்படுகிறது என்பதை,

"அன்னை வயிற்றில் பிறந்த எனக்கு
நெஞ்சில் பிறந்த பிள்ளை
நீ! நெஞ்சில் பிறந்த பிள்ளை
திசுப்பைக்குள் சிசுவாய்
கருக்கொண்டு உருக்கொண்டு
வளர்ந்தவன் நான்
கண்ணுக்குள் வளர்வது நீ!
கருத்துக்குள் ஒளிர்வது நீ! நீ! நீ!
சொல்வது 'பைத்தியம்'

88. மாலதி மைத்ரி, நீலி, ப. 56.

சொல்லாமல் கொல்வது நித்தியம்
இருந்தும்
சத்தியம்
உனக்கு நான் கால்
எனக்கு நீ கோல்"[89]

என்று மீனாட்சி தன் கவிதையின் மூலம் சித்தரித்துக் காட்டுகிறார்.

பெண்களின் உரிமைகள் தழைக்கவும், பெண் விடுதலை நிறைவேறவும் பெண்களின் சமூக மதிப்பு உயரவும், ஆண்களின் ஆதரவு அவசியம். ஒவ்வோர் ஆணும், பெண்ணின் வாழ்க்கைப் பாதையில் துணையாகப் பயணம் செய்தால் பெண்ணியம் வெற்றி பெறும் என்பதைக் கீழ்வரும் கவிதை எடுத்துரைக்கின்றது.

"வாழ்க்கைச் சதுரங்கத்தில்
உன்னை வெட்டியபடி
முன்னேறியவர்கள் நாம்
நாமே நீ இட்ட பிச்சைதான்
ஆனால் உன்னை
எங்கள் வாசலில் கையேந்தும்
பிச்சைக்காரி ஆக்கினோம்.
தாய்மைக்காகச் சமைபவளே!
உன் சதையைத் தின்று
பசியாறும் கழுகுகள் நாம்
இலக்கணங்கள் உனக்கு வற்புறுத்தினோம்
நாம் வழுஅமைதிகளாக இருந்தோம்
நீ உன்னை விற்றால் அது விபச்சாரம்
நாம் எங்களை விற்றால்
அது திருமணம் என்றோம்"[90]

என்ற வரிகளைப் பெண்ணியத்திற்குத் துணையாக "ஆலாபனை" என்னும் கவிதையில் அப்துல் ரகுமான் புலப்படுத்தியுள்ளார். பெண்களை அழவைக்காமல், ஆளவைக்கும்

89. இரா.மீனாட்சி, மு.நூ., ப. 47.
90. அப்துல் ரகுமான், ஆலாபனை, ப. 9.

ஆண்கள் கூட்டம் உதயமாக வேண்டும். அப்போதுதான் பெண்ணியம் விடியும் என்பதை இக்கவிதை உணர்த்துகின்றது.

## 1.31.முடிவுரை

- ❖ ஆண்டாண்டு காலமாகப் பெண்கள் அடிமைப்பட்டிருந்த நிலை, பதினெட்டாம் நூற்றாண்டில் தோன்றிய பிரெஞ்சுப் புரட்சி, அமெரிக்கப் புரட்சி, தொழிற் புரட்சி ஆகியவற்றால் மாற்றம் பெறத் தொடங்கியது.

- ❖ உலகத் தோற்றத்தின் உயிர் வளர்ச்சிக்குப் பெண்கள் இன்றியமையாதவர்கள். பெண்கள் பிறரை வாழ்விக்கப் பிறந்தவர்கள். அன்பின் வடிவம், பொறுமையின் இருப்பிடம், தியாகத்தின் சிகரம் என்று போற்றப்பட்டாலும் அவர்களுக்கான உரிமைகள் இச்சமூகத்தில் மறுக்கப்படுகின்றன. மனித இனத்தின் சரிபாதியான பெண்ணினம், ஆணாதிக்கத்தால் அவர்களுக்கு ஏற்பட்ட இன்னல்களை அறியமுடிகின்றது.

- ❖ வரலாற்று முறையில் பார்த்தால் தாய்வழிச் சமூக அமைப்பு, தந்தை வழிச் சமூகமாய் மாற்றம் பெற்ற பொழுதே பெண்ணை அடிமைப்படுத்தும் கருத்தியல்கள் உருவாக்கப்பட்டு அவை மரபாக மாற்றம் பெற்றதை உணரமுடிகின்றது.

- ❖ பாலினப் பாகுபாட்டால் ஏற்படும் நிகழ்வுகள், குறிப்பாகப் பெண்களுக்கு எதிரான ஒடுக்குமுறைகள், சுரண்டல்கள் ஆகியனவற்றை அறிந்துகொள்ளவும் பெண்ணியம் தெளிவான வரையறையை முன்வைக்கின்றது.

- ❖ பெண்களுக்கு எதிராகக் குடும்பத்தில், சமூகத்தில் நிலவிவரும் ஆணின் அதிகாரத்தை, ஆளுமையை எதிர்த்துச் செயல்படும் நிலையைப் பெண்ணியம் என்று வரையறை செய்துகொள்ளலாம்.

- தாராளவாதப் பெண்ணியம், தீவிரவாதப் பெண்ணியம், சமதர்மப் பெண்ணியம் ஆகியவற்றின் அடிப்படையில் பல்வேறு பெண்ணிய வகைகள் தோன்றி வளர்ந்து வருகின்றன. சாதி, இனம், பண்பாடு, பொருளாதாரம் ஆகிய பல்வேறு தளங்களிலும், புதிதாகத் தோன்றுகிற அறிவியல், கலை, இலக்கியத் துறைகளிலும் இப்பெண்ணிய வகைகள் தங்களுக்குள் வேறுபட்டு நிற்கின்றன.

- மேலைநாடுகளைப் போலவே இந்தியாவிலும், தமிழ்நாட்டிலும் பெண்ணிய அமைப்புகள் ஏற்படுத்தப்பட்டு அவர்களின் உரிமைகள் பாதுகாக்கப்படுவதை, பல்வேறு பெண்கள் அமைப்பு மற்றும் மாநாடுகளின் வழி அறியமுடிகின்றது.

- பழங்கால மக்களின் தொன்மங்களையும், பெண் மொழி மற்றும் பெண் உடல் பற்றிய வருணனைகளையும் அறியமுடிகின்றது.

- இலக்கியங்களில் காணப்படும் ஆணாதிக்கத்தைப் பெண்ணியத் திறனாய்வு வெளிக்கொணர்கிறது. பால், மொழி, சமூக அடிப்படையில் ஆணாதிக்கத்தை ஆராய்ந்து, அவற்றை வெளிப்படுத்தி நிற்கின்றது.

- பெண்ணியம் குறித்துப் பல்வேறு அறிஞர்களும், கவிஞர்களும் பலவிதமான கருத்துக்களைக் கூறியிருந்தாலும், பெண் ஒடுக்கு முறைக்கான காரணங்களை ஆராய்ந்து, அவற்றை நீக்கி ஆண் - பெண் சமத்துவத்தை நிலை நாட்டும் வழிமுறையே பெண்ணியமாக அமைகின்றது.



# இயல் - 2

# பணிக்குச்செல்லும் பெண்கள் எதிர்கொள்ளும் சிக்கல்கள்

## 2.0. முன்னுரை

பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாக அடிமைப்படுத்தப்பட்டே வளர்க்கப்பட்டு வரும் பெண் இனம் விடுதலையை நோக்கிப் பயணிக்கும் அதேவேளையில், அதற்காகக் கொடுக்க வேண்டிய விலை மிக அதிகமானதாகவே உள்ளது. கல்வியினாலும் பொருளாதாரத்தினாலும் பெண் விடுதலை சாத்தியம் என நம்பப்பட்டது. ஆனால், இன்று கல்வியிலும் பொருளாதாரத்திலும் ஆண்களுக்கு நிகராக அல்லது ஆண்களைக் காட்டிலும் ஒரு படி மேலாக பெண்கள் உயர்ந்த நிலைக்குச் சென்று விட்டனர் என்றாலும், பெண்களுக்கான உரிமையும் விடுதலையும் இன்னும் சாத்தியப்படவில்லை.

கல்வி கற்பதற்காகவும், பொருளாதாரத்தில் உயர்நிலையை அடைவதற்காகவும் வீட்டை விட்டு வெளியில் வந்த பெண்கள், வீட்டில் இருந்த இன்னல்களைக் காட்டிலும், வெளி உலகிற்கு வந்த பிறகு, அதிகமான இன்னல்களையும் இடர்ப்பாடுகளையும் எதிர்கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. பெண்கள் மனரீதியாகவும், உடல் ரீதியாகவும் பல இன்னல்களுக்கு ஆளாக்கப்படுகின்றனர். இந்தச் சூழ்நிலையில் பெண்கள் வீட்டுலகத்தைத் தாண்டி வெளியுலகில் குறிப்பாகப் பணி செய்யும் இடத்தில் எவ்வகையிலான பிரச்சினைகளுக்கு உள்ளாக்கப்படுகிறார்கள் என்பதைப் பற்றி இவ்வியல் ஆய்வுக்கு உட்படுத்தப்படுகிறது.

## 2.1.வேலைவாய்ப்பில் பெண்கள்

குடும்பத்திற்காகப் பொருளீட்டுவது, குடும்பத் தலைவனாக இருப்பது மட்டுமே ஆண்களின் பொறுப்பு என்றும், பிற குடும்பப் பொறுப்புக்களான குழந்தைகளைப் பராமரித்தல், வீட்டைத் தூய்மைப்படுத்துதல், உணவு சமைத்தல், வயதானவர்களைக் கவனித்துக் கொள்ளுதல் போன்றவை பெண்களுக்குரியது என்றும் ஆணாதிக்கத்தின் வீச்சு 1970ஆம் ஆண்டு வரை மேலோங்கியிருந்தது. தந்தை பெரியாரின் சமத்துவப் புரட்சி, சாதிய ஏற்றத்தாழ்வுகளைக் களைந்ததோடு மட்டுமல்லாமல், பாலின வேற்றுமைகளையும் களைந்து ஆண் பெண்ணைச் சமத்துவமாக்கியது. இதனால் நாடு முழுக்கப் பெண்கள் கல்வி கற்கத் தொடங்கினர். பெண்களுக்கான கல்வி நிறுவனங்களை அரசு அதிக அளவில் ஏற்படுத்திக் கொடுத்ததுடன் ஆண்களுக்கான கல்வி நிறுவனங்களாக செயல்பட்டவற்றிலும் குறிப்பிட்ட விழுக்காடு இட ஒதுக்கீடும் செய்யப்பட்டது. இதனால் பெண் கல்வி உயர் நிலையை அடைந்ததோடு அவர்களுக்கான வேலைவாய்ப்புக்களும் பெருகின.

1970களுக்குப் பிறகு பிடித்த பெண்களைவிடப் படித்த பெண்களையே ஆண்கள் விரும்பித் திருமணம் செய்து கொண்டனர். குறிப்பாக, வேலைக்குச் செல்லும் பெண்களாக இருந்தால் இரட்டிப்பு மகிழ்ச்சியோடு திருமணம் செய்து கொண்டனர். வேலைக்குச் செல்லும் பெண்களுக்குப் பிறந்த வீட்டிலும் திருமணமான வீட்டிலும் சொந்தக் காலில் நிற்பதற்கு அதிக வாய்ப்புக் கிடைத்தது.

தொடக்கத்தில் பெண்கள் தங்களுக்குரிய பணியாக ஆசிரியை, செவிலியர், தட்டச்சர் போன்ற பணிகளையே தேர்ந்தெடுத்தனர். காலப் போக்கில் இராணுவம், பொறியியல், மருத்துவம், காவல்துறை, விண்வெளி ஆய்வுகள் என்று தொடங்கி அனைத்துத் துறைகளிலும் பெண்கள் கால்பதித்துள்ளனர்.

1966ஆம் ஆண்டு தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடி பிரிவு மாணவர்களுக்குச் சிவில் சர்வீஸ் பயிற்சியளித்திட அரசு பயிற்சி நிறுவனத்தைத் தொடங்கியது. இதனை விரிவாக்கி 1977ஆம் ஆண்டு அனைத்துப் பிரிவு மாணவர்களுக்கான பயிற்சி மையங்களை அரசு ஏற்படுத்தியது. இப்பயிற்சி மையங்களில் பயிற்சி மேற்கொண்டவர்கள் இன்றைக்குக் காவல்துறையின் உயர் பதவிகளிலும், மாவட்ட ஆட்சித் தலைவர் உள்ளிட்ட பதவிகளிலும் சிறப்பாகப் பணிபுரிந்து வருகின்றனர்.

தமிழகப் பொருளாதார குற்றப்பிரிவின் தலைமைப் பொறுப்பில் ஐ.பி.எஸ். அதிகாரி திலகவதி சிறப்பாகப் பணியாற்றினார். மேலும், மாநில காவல்துறைத் தலைமைப் பொறுப்புக்களில் எல்லாம் பெண்கள் பணிபுரிகின்றனர். கிரண் பேடி, இலத்திகா சரண் போன்ற பெண்மணிகளின் பணி பாராட்டுக்குரியதாக அமைந்துள்ளது. 2002ஆம் ஆண்டு நடைபெற்ற ஆட்சிப் பணித் தேர்வில் தமிழ்நாட்டைச் சார்ந்த நான்கு பெண்கள் தேர்ச்சி பெற்றுச் சிறப்பாகப் பணிபுரிகின்றனர்.

### 2.1.1.ஆசிரியப்பணியில் பெண்கள்

அதிகப் பணியாளர்களை உடைய துறைகளில் கல்வித் துறையும் ஒன்று. இவற்றில் ஐந்தாம் வகுப்பு வரை உள்ள ஆரம்பப்பள்ளிகளில் இன்றைக்குப் பெண்களையே ஆசிரியர்களாக அரசு பணியில் அமர்த்துகிறது. இதனால் இலட்சக்கணக்கான பெண்கள் வேலைவாய்ப்புப் பெற்றுச் சுயசார்புடன் இயங்குகின்றனர். உயர்நிலைப் பள்ளி மற்றும் மேல் நிலைப் பள்ளிகளில் மகளிர்க்கான பள்ளிகளில் பெண்களே ஆசிரியைகளாகப் பணியாற்றுகின்றனர். பெண்கள் தலைமையாசிரியர்களாக வேலைபார்க்கக் கூடிய இடங்களில் எவ்வித சிக்கல்களும் இல்லாமல் அமைதியான முறையில் நடைபெறுவதாகப் புள்ளி விவரங்கள் கூறுகின்றன.

### 2.1.2காவல்துறையில் பெண்கள்

இந்தியாவில் சட்டம் ஒழுங்கை நிலைநாட்டக் கூடிய பொறுப்பில் காவல் துறையினர் பணியாற்றுகின்றனர். தமிழகக் காவல்துறையைப் பொறுத்தவரை அத்துறையில் ஓர் இலட்சத்து முப்பதாயிரத்திற்கு மேற்பட்டோர் பெண்களாவர். தமிழ்நாடு சிறப்புக் காவல் படை, சிறப்பு அதிரடிப் படை, அனைத்து மகளிர் காவல் நிலையங்கள், சட்டம் ஒழுங்குப் பிரிவு ஆகியவற்றில் உதவி ஆய்வாளர், ஆய்வாளர் போன்ற பணிகளிலும் பெண்கள் சிறப்பாகப் பணிபுரிகின்றனர். இவ்வாறு சிறப்பாகப் பணியாற்றிய போதிலும், இவர்களின் மேலதிகாரிகள் ஆண்களாக இருப்பின் பெண்ணதிகாரிகள் பாலியல் சார்ந்த துன்புறுத்தல்களைச் சந்திக்க நேரிடுவதாக அவ்வப்பொழுது செய்தித்தாள்களில் செய்திகள் வெளிவருகின்றன. இத்தகு பாலின விரோதப் போக்கு சமத்துவம் மிக்க சமூகத்திற்கு இழிவானதாகும். இது களையப்பட வேண்டும் என்றால் அனைத்துத் துறைகளிலும் பெண்கள் உயர்ந்த பதவியை அடைய வேண்டும்.

## 2.2. பல்வேறு பணிநிலையில் பெண்கள்

ஆண், பெண் சமத்துவத்தை நோக்கிய சிந்தனையானது, கருத்தளவிலேனும் ஒப்புக் கொள்ளப்பட்டுவிட்ட இன்றைய சூழ்நிலையில், அதைப் பற்றிய விவாதங்கள் பெருகியுள்ளன. ஏராளமான கருத்தரங்குகளிலும், ஆய்வுகளிலும் இதைக் குறித்துச் சிந்திப்பது, விவாதம் செய்வது இன்றைய நடைமுறையில் உள்ளது. இத்தகைய ஆய்வுகளில் பெண்களின் தற்சார்பை மேம்படுத்துவதில் பெண் விடுதலைக்கான வழி முறைகளில் ஒன்றாகக் கருதப்படுகிறது. ஆணுலகப் புனைவுகளில் சிக்கித் தவிக்கும் பெண்களை மீட்டெடுப்பதில் முனைப்புக் காட்டும் இயக்கங்கள், பெண்கள் தனித்தியங்கும் ஆற்றலைப் பெறுவதே பெண் விடுதலைக்கான முதன்மையானவழி என்பதைக் கண்டறிந்தன.

ஆணாதிக்கச் சமூகமானது பெண்களுக்கு என்று சில இயல்புகளைச் செயற்கையாக உருவாக்கியது. அதை அவர்களுக்குப் போதிக்கவும், திணிக்கவும் செய்தது. இதன் மூலம் பெண் சமுதாயத்தை ஒரு வட்டத்துக்குள் கட்டிப்போட முயல்கிறது ஆணாதிக்கம்.

> **"பெண்ணியல்பு என்று கூறும் பண்புகள் முழுக்க முழுக்கச் செயற்கையானவை. அப்படிப்பட்ட இயல்புகள் ஆண்களால் பெண்ணைத் தனக்கு அடிமைப்படுத்த உருவாக்கப்பட்டவை என அறிகிறோம் என்பர்."**[1]

இத்தகைய மாயையான பிம்பம் ஒன்றைப் பெண்ணின் மீது திணித்து, முடக்கி விட்ட நிலையில், அதிலிருந்து விடுபடத் துடிக்கும் பெண்களுக்குத் தற்சார்பே தக்க சார்பாக இருக்க முடியும் என்று பெண்ணியலாளர்கள் கருதுகின்றனர். பெண்ணை வெளி வேலைக்குச் சென்று ஊதியம் தேட அனுமதிக்காத நிலையே பெண்ணடிமைக்கு வித்திட்ட நிலை எனக் கருதலாம். இதனை,

> **"பெண்ணை வெளியே சென்று உழைக்க விடாமல் வீட்டு வேலைகளைச் செய்யுமாறு அமைத்துக் கொண்ட முறையானது பெண்ணைப் பொருளாதார ரீதியாக ஆணையே சார்ந்து வாழும்படியாக நிர்பந்தித்தது."**[2]

என்று க.பஞ்சாங்கம் கருத்துத் தெரிவித்துள்ளார். இதன்மூலம் தினைப்புனங்காவல் காத்து, உழவுத் தொழிலில் உறுதுணை புரிந்து, கால்நடைகளைப் பேணி, உணவுப் பொருட்களைப் பதப்படுத்திப் பாதுகாத்து வந்த பெண், ஒரு நிலையில் ஒரு வட்டத்துக்குள் ஒடுக்கப்பட்டாள் என்பதை அறியமுடிகின்றது.

சங்க காலப் பெண்கள் குடும்பத்தை ஒட்டிய பணிகளில் ஈடுபடவும், உறுதுணை செய்யவும் அனுமதிக்கப்பட்டுள்ளனர். ஆனால், போருக்குச் செல்லுதல், கல்விக்காகப் பிரிதல், பொருள் ஈட்டுவதற்காகப் பிரிதல் போன்ற பல வெளிவேலைகள்

---

1. சு.வேங்கடராமன், எண்பதுகளில் தமிழ்ப் புனைகதைகளில் பெண்ணியம், ப. 99.
2. க.பஞ்சாங்கம், பெண்-மொழி-புனைவு, ப. 112.

ஆண்களுக்குரியது எனக் கருதப்பட்டது. கடல் கடந்து பொருளீட்டச் செல்லும் உரிமையும் பெண்களுக்கு மறுக்கப்பட்டதை,

"*முந்நீர் வழக்கம் மகடூஉ வோடு இல்லை*"[3]

என்பதைத் தொல்காப்பியம் வழி அறியமுடிகின்றது.

கால வளர்ச்சியில் நேர்ந்த, கருத்தின் விளைவாக இல்லம் சார்ந்த பணிகள் பெண்களுக்கென்றும், வெளி வேலைகள் ஆண்களுக்கென்றும் பணிப் பங்கீடு வரையறை செய்யப்பட்டது. இதன் விளைவாகவே ஆண்களுக்கு வெளி உலகம் வீடாக மாறியது. பெண்களுக்கு வீடு வெளி உலகமானது. சிறகடித்துப் பறந்து கொண்டிருந்த பெண்கள் "பாதுகாப்பு" என்னும் போர்வையில் வீட்டிற்குள்ளேயே முடங்கிக் கிடந்தனர். இதனைத் தனக்கான பாதுகாப்பு என்று கருதி பெண்ணுலகம் இன்றளவும் ஏற்றுக் கொண்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

## 2.3.அலுவல் பெண்களின்நிலை

அலுவலகம் சென்று வேலை செய்யக் கூடிய பெண்களின் வாழ்க்கையானது பல சிக்கல்களை உள்ளடக்கியதாகவே இருக்கின்றது. தொடக்ககாலத்தில் பெண்கள் வீட்டைவிட்டு வெளியேறாமல் வீட்டிற்குள்ளேயே வாழும் வாழ்க்கையை நடத்தி வந்தனர். சமுதாயமானது பெண்களைச் சமுதாய உழைப்பிலிருந்து ஒதுக்கி, குழந்தை பெற்றுத்தரக்கூடிய இயந்திரமாகவும், ஆணின் பாலியல் தேவையை நிறைவேற்றும் இயந்திரப் பொம்மையாகவும், ஆண்களுக்கு சேவை செய்யும் அடிமையாகவும் நடத்தி வந்தனர்.

இவ்வாறு பெண்கள் தொடக்கத்தில் நேரடியாக ஆண்களின் அடிமையாக இருந்த நிலைமாறி, இன்று சுதந்திரம் பெற்ற நவீன அடிமைகளாக இருக்கின்றனர். பெண்கள் அலுவலகத்திற்கு வேலைக்குச் சென்றாலும், அங்கிருக்கும் ஆண்களால் பல சிக்கல்களுக்கு ஆளாகின்றனர். இதனை மு.மேத்தா,

---

3. தொல். பொருள். நூ. 980.

"**இல்லறச் சதுரங்கத்தில்**

**இராணி ஆனாலும்**

**அலுவலகத் துச்சனிடம்**

**ஆடுபுலி ஆட்டம்**"[4]

என்று கவிதையில் வெளிப்படுத்தியுள்ளார். அலுவலகத்திற்குச் செல்லும் பெண்களின் வாழ்க்கை இயந்திர வாழ்க்கையாக மாறி விடுகின்றது. சமூகத்தில் பல்வேறு இடையூறுகளைக் கடந்து அலுவலகம் சென்றாலும், அங்கும் பல இன்னல்களைச் சந்திக்க வேண்டியிருக்கின்றது.

"**மின்விசிறி சுழல**

**வீற்றிருக்கும்**

**மேலதிகாரியின்**

**கண் விசிறி சுழல**

..... ..............

**உத்தமக் கொக்குகளே**

**வாடியிருக்கும்**

**விரல்களையாவது**

**உரசி விடுவதற்கு**"[5]

என்ற வரிகள், அலுவலகப் பணிக்குச் செல்லும் பெண்களின் மீது அலுவலக மேலதிகாரியின் பார்வை, சில மேலதிகாரிகளின் விரல்கள் கோப்புகளைத் தொடுவது போல் தொடுதல் எனப் பல இன்னல்களுக்கு ஆளாவதைச் சுட்டிக்காட்டுகின்றார்.

கல்வியிலும் பொருளாதாரத்திலும் சுதந்திரத்தைப் பெற்ற பெண்கள் வீட்டின் எல்லையைக் கடந்து அலுவலகம் சென்றாலும், அங்கு தங்களின் சுதந்திரத்தைப் பயன்படுத்த முடியாமல் தவிக்கின்றார்கள். ஆணாதிக்கமும் வக்கிர குணமும் கொண்ட

---

4. மு.மேத்தா, நந்தவன நாட்கள், ப.24.
5. மு.மேத்தா, காத்திருந்த காற்று, பக். 43-44.

ஆடவர்கள், பெண்களைப் பல்வேறு சிக்கல்களுக்கு ஆளாக்குவது அவர்களின் மனப்பக்குவமின்மையை வெளிப்படுத்துகின்றது. இவ்வாறு பெண்கள் மன ரீதியாகவும், உடல் ரீதியாகவும் பல்வேறு சிக்கல்களுக்கு ஆளாகிக் கொண்டிருக்கிறார்கள் என்பதை,

"வேலை தேடிப்போன
ஒவ்வொரு மாளிகையும்
விதம் விதமான
காமவெறிக் கானகமாய்'
ஒவ்வொரு கடையும்
வித்யாசமான மனிதரின்
விழிமேய்ச்சல் பூமியாய்"[6]

என்று கவிஞர் சிற்பி தனது கவிதையின் வழி எடுத்துரைத்துள்ளார்.

ஆண்கள், பெண்கள் வேலை செய்யும் அலுவலகத்தில் காமப் பார்வையுடன் பார்க்கப்படுவதை தனது கவிதையில்,

"ஒவ்வொரு அலுவலகமும்
அங்குலம் அங்குலமாய்ப் பெண்ணை
அளவிடும் விஷய ஆய்வுச் சாலையாய்
...... ....... ........
கையைத் தொடவும்
மெய்யை வருடவும்
இருண்ட படிக்கட்டுகளில்
ஏகாந்த லிப்ஃட்டுகளில்
எட்டி முத்தமிடவும்

6. சிற்பி, சிற்பி கவிதைகள், தொகுதி-1, ப. 477.

எத்தனை முயற்சிகளை

...... ........... ........

பெண்களுக்கு இது

ஆண் வேடதாரிகளின்

நித்திய காம

நகர்த்தன பூமி"[7]

என்று வெளிப்படுத்தியுள்ளார் சிற்பி. பெண்களுக்கு ஏற்படக் கூடிய சிக்கல்களையும், ஆபத்தான ஆண் சமூகச் சூழலில் பெண்கள் துணிச்சலோடு பணியாற்றுவதையும் இதன் மூலம் உணரமுடிகின்றது.

இன்றையப் பொருளாதார நெருக்கடியால் ஆணும் பெண்ணும் சேர்ந்து உழைத்தால்தான் தங்களின் அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்ய இயலும் என்பதால், பகல், இரவு என மாறி மாறி வேலைக்குச் செல்லக்கூடிய பெண்களை இச்சமுதாயத்தில் காண முடிகின்றது. அவ்வகையில் இரவு நேரத்தில் ஒரு தையல் நிறுவனத்தில் வேலை செய்யும் பெண்ணிற்கு அங்கு வேலை செய்யும் சக ஆண்களின்மூலம் ஏற்படும் பாலியல் சிக்கலைக் கவிஞர் நா.முத்துக்குமார் பின்வருமாறு பதிவு செய்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

"வயது முற்றிய

கொலுசுக் கால்களின்

உஷ்ண உரசலை

அதற்கும் மீறிய

அந்தரங்க வலிகளை

சக ஆணின்

சபலப் பார்வையால்

7. மேலது, பக். 477-478.

**வேகமாய்ச் சுற்றிய**

**விரல்களின் கோபத்தை**

**.....................**

**பனிகொட்டும் இரவில்**

**எல்லாம் யோசித்தபடி**

**விழித்துக் கொண்டிருந்தது**

**ஏற்றுமதி நிறுவனத்தின்**

**தையல் இயந்திரம்."[8]**

## 2.3.1.அலுவலகம் செல்லும் பெண்மீதான பார்வை

வீட்டை விட்டு வெளியேறி அலுவலகம் செல்லும் பெண், மீண்டும் வீடு வந்து சேரும் வரை அவள் மீது செலுத்தும் ஆண்களின் பல்வேறு விதமான பார்வையினை,

**"களைத்துச் சலித்து**

**உள் நுழைகிறேன்**

**ஆடை மாற்றுகையில்**

**கழன்று விழுகின்றன**

**உடல் முழுவதும் பதிந்திருந்த**

**பார்வைகள்**

**தீண்டல்கள்**

**தொடுதல்கள்**

**உரசல்கள்**

**உதறி எடுத்து**

**வேற்றாடை மாற்றித்**

**திரும்புகையில்**

**அத்தனையும்**

---

8. நா.முத்துக்குமார் கவிதைகள், ப. 22.

**இரவு தன்**

**கைகளில்**

**சேகரித்துக் கொண்டிருந்தது"**[9]

என்னும் வெண்ணிலாவின் கவிதையின் வழி அறியமுடிகின்றது. ஆண்களில் பல பேர் பார்வையின் மூலமே பாலியல் வன்முறையைச் செலுத்துவதையும் அதன் காரணமாகப் பெண்கள் படும் துன்பத்தையும் இக்கவிதை விளக்கி நிற்கின்றது.

## 2.3.2.பணிக்குச்செல்லும் பெண்களின் இரட்டைச்சுமை

அலுவலகப் பணிக்குச் செல்லும் பெண்கள் இரண்டு வகையான உழைப்புச் சுரண்டலுக்கு ஆளாகிறார்கள். குடும்பத்திலும், வேலை செய்யுமிடத்திலும் அவர்களின் இரத்தமும் வியர்வையும் உறிஞ்சப்படுகின்றன. குழந்தை வளர்ப்பைப் புனிதமாகக் கருதும் தாய்மையுணர்வு கொண்ட பெண்கள், வேலை செய்யுமிடத்தில் மனம் மற்றும் உடல் ரீதியான பாதிப்புகளால் துன்புறுகிறார்கள் என்பதை,

***"மல்லிகைச் சங்கிலியை மீறிப்***

***பாறாங்கல்லின்***

***அமிர்தம் ஊறுகிறது***

***தளதளவெனப் பொங்கி***

***புளவுலை நனைத்து***

***புடவையில் வழிந்து***

***வயிற்றில் இறங்குகிறது"***[10]

என்று ஆண்டாள் பிரியதர்ஷினியின் கவிதை ஆதங்கத்தோடு வெளிப்படுத்துகின்றது.

பணிக்குச் செல்லும் பெண்களுக்கு ஏற்படக் கூடிய சிக்கல்களைக் கூற வந்த கவிஞர் வெண்ணிலா,

9. அ.வெண்ணிலா, ஆதியில் சொற்கள் இருந்தன. ப. 41.
10. ஆண்டாள் பிரியதர்ஷினி, தோகையெல்லாம் துப்பாக்கிகள், ப. 57.

**"தாயின் வாசம் சொட்டுச் சொட்டாய்**

**கோப்புகளில் இறங்குகிறது**

**அவசரமாய்**

**அலுவலகக் கழிப்பறையில் நுழைந்து**

**பீச்சி விடப்படும் பாலில் தெறிக்கிறது**

**பசியைத் தின்று அலறும்**

**குழந்தையின் அழுகுரல்"**[11]

என்று பணிப்பெண்கள் அடையும் சிக்கல்களை வேதனையோடு வெளிப்படுத்தியுள்ளார்.

குடும்பத்தின் பொருளாதாரத் தேவையை நிறைவு செய்வதற்காகப் பணிக்குச் செல்லும் மனைவிமார்கள் தங்கள் குழந்தைகளைப் பேணுவதற்கு இயலாமல் போனதற்கான வருத்த மிகுதியை,

**"உன் வாயை**

**மார்பில் பொருந்தவும்**

**நேரமில்லாமல்**

**உத்தியோக வேகம்**

**முதலாம் நாளே**

**தாய்ப்பால் மறுத்தேன்**

**முப்பதாம் நாளே**

**உன் அருகாமையைத் தொலைத்தேன்"**[12]

என்று ஆண்டாள் பிரியதர்ஷினி தன் தாயின் ஏக்கத்தை வெளிப்படுத்தி இருக்கிறார். இவ்வாறு பொருட்செல்வத்திற்காகவும், குழந்தைச் செல்வத்திற்காகவும் ஏங்கித்

---

11. அ.வெண்ணிலா, நீரிலலையும் முகம், ப. 47.
12. ஆண்டாள் பிரியதர்ஷினி, முத்தங்கள் தீர்ந்துவிட்டன, ப. 33.

துன்புறும் பணிக்குச் செல்லும் பெண்களின் சிக்கலை இக்கவிதை வரிகள் படம் பிடித்துக் காட்டுகின்றன.

இவ்வாறு அடிமை நிலையில் இருந்த பெண் இனத்தின் ஒரு பகுதியினர் கல்வி கற்று வேலை வாய்ப்புகளைப் பெறுகின்றனர். வீட்டு எல்லையைத் தாண்டி வேலை செய்யும் இடத்திற்குச் செல்லும் இப்பெண்கள் பொருளாதாரச் சுதந்திரத்தைப் பெற்றிருந்தபோதிலும், குடும்ப வன்முறைக்கு ஆளாகி வருகின்ற அவலத்தை,

"பொறுக்க முடியாத தருணத்தில்
என் நியாயத்தை
உரத்துச் சொல்வது
வேலைக்குப் போகிற திமிராகும் போது
நீ அடிப்பது
உதைப்பது மட்டும்
எப்படி அத்தான்
ஆபீஸ் டென்ஷனாகிறது"[13]

என்று கவிஞர் இளம்பிறை கவிதைப்படுத்தியுள்ளார். இவ்வாறு சுய சம்பாத்தியத்தின் மூலம் தனித்தன்மையும், சமூக மதிப்பும் பெண்ணிற்குக் கிடைப்பதால் ஆணுக்குள் ஏற்படும் தாழ்வு மனப்பான்மை, பொறாமையாக மாறிவிடுகின்றது. பெண்களின் வளர்ச்சிநிலையை ஆண்களால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை என்ற உளவியல் சிக்கல் இங்கு நிரூபனமானதை அறியமுடிகின்றது.

13. இளம்பிறை, நிசப்தம், ப. 47.

பெண்கள் அலுவலக வேலைக்குச் சென்று தன் சொந்தக் காலில் நிற்கும்போது, அதனைப் பொறுத்துக்கொள்ளாது, அவளும் ஓர் உயிரிதானே, அவளுக்கும் உள்ளம் மற்றும் உடல் தொடர்பான சோர்வு இருக்கும் என்பதை உணராத ஆண்கள், வேலை முடிந்து பெண்கள் வீட்டிற்கு வந்தவுடன் வீட்டு வேலைகளைக் கொடுத்து துன்புறுத்துகின்றனர். இதனை,

**"வேலைக்குப்போய் வீடு வந்தால்**
**கைலிய எடு ன்னா**
**கை இல்லியா**
**தண்ணி ன்னா**
**சமயலறையில**
**சோறு போடு ன்னா**
**............ ........"**[14]

என்ற கவிதைவழி எடுத்துரைத்துள்ளார் கவிஞர் பழமலய். மனைவிமார்கள் வேலைக்குச் செல்வதைப் பொறுத்துக்கொள்ள முடியாத ஆண்களின் குரலாக இக்கவிதை வெளிப்படுவதை அறியமுடிகின்றது.

## 2.4.ஊடகங்களில் பெண்களின் நிலை

கலை, இலக்கியம், திரைப்படம், இதழ்கள், விளம்பரங்கள் போன்ற பல ஊடகங்களும் பெண்களைக் கொச்சைப்படுத்தி, சிறுமைப்படுத்தி வருவதற்கு ஊடகங்கள் அனைத்தும் ஆணின் கட்டுப்பாட்டில் இருப்பதே காரணமாகும். ஆணினத்தின் பெருமைகளைப் பறைசாற்றும் பிரச்சாரத் தன்மை கொண்டவைகளாக ஊடகங்கள் விளங்குவதோடு, ஆணாதிக்கப் போக்கைத் தீவிரப்படுத்தவும், பெண்ணடிமைத் தனத்தைப் பேணவும் ஊடகங்கள் துணைபோகின்றன என்றே கூறலாம்.

---

14. சு.சண்முகசுந்தரம்(தொகு.ஆ.), பழமலய் கவிதைகள், ப. 512.

பெரும்பான்மையான இலக்கியங்களும் ஊடகங்களும் பெண்மையைப் போற்றுவதற்குப் பதிலாகத் தூற்றியிருப்பதோடு, பெண்ணை ஆபாசப் பொருளாகவே பிரதிபலித்துள்ளன. நல்ல சிந்தனைகளை விதைக்க வேண்டிய இலக்கியங்களும் ஊடகங்களும் பெண்மையை ஒரு போகப் பொருளாகவே சித்தரித்துக் காட்டுகின்றன.

பெண்களைக் காமப் பொருளாகக் காட்சிப்படுத்தி வருகின்ற வக்கிர எண்ணங்களை ஏற்படுத்திய இலக்கியங்களைக் கவிஞர் சிற்பி,

**"பருவக் குமரிகளின்**

**பார்வைபட்டு வேர்வைபட்ட**

**நிர்வாண வருணனைகள்**

**சுகத்தை வடித்தெடுக்கும்**

**சோம்பேறி இலக்கியங்கள்"**[15]

என்று சாடுகிறார். பெண்மையின் புனிதமும் இலக்கியத்தின் கற்பும் காப்பாற்றப்பட வேண்டுமென்றும், பெண்மை என்பது இலக்கியத்திற்கான சரக்காக விளங்கக் கூடாது என்று கவிஞர் சாடுவதிலிருந்து பெண்களின் நிலையை அறிந்து கொள்ள முடிகிறது.

### 2.4.1.ஆணாதிக்க ஊடகத்தில் பெண்

இன்றையச் சமூகத்தில் ஊடகங்கள் அனைத்தும் ஆண்களின் முழுக்கட்டுப்பாட்டில் இருக்கின்றன. தற்போதுதான் பெண்கள் கொஞ்சம் கொஞ்சமாக இத்துறையில் அங்கம் வகித்து வருகிறார்கள். இதில் அழகியல் சார்ந்த போகப் பொருளாகப் பெண்கள் காட்சிப்படுத்தப்பட்டிருக்கிறார்கள் என்பதை,

15. சிற்பி, சிற்பி கவிதைகள், தொகுதி-1, பக். 223-224.

"*சீதையைப் பற்றிச்*

*சிலேடையில் சொன்னால்தான்*

*கம்பனுக்குச் சினிமாகக்*

*கம்பெனியில் இடமுண்டு*"[16]

என்று வைரமுத்து தன் கவிதையில் குறிப்பிட்டுள்ளார். ஆணாதிக்கக் கட்டுப்பாட்டில் இருக்கும் ஊடகங்களில் பெண்கள், அழகியல் பொருளாகக் காட்சிப்படுத்தப்படுவதோடு, ஆண்களின் பாலுணர்வுத் தேவையைப் பூர்த்தி செய்தால்தான் திரைப்படத்துறையில் இடம் கிடைக்கும் என்ற நிலை இருப்பதைத் தம் கவிதைவழிப் பதிவுசெய்துள்ளார்.

பெண்களின் அழகு வருணிக்கப்படுவதால் ஏற்படும் உள்ள மகிழ்ச்சியே அடிமைத்தனத்திற்குக் காரணமாக அமைகின்றது என்பதை,

"*எங்கள், புது*

*புரட்சிக் கவிஞர்கள் சிலர்*

*மன்மதவனத்தில்*

*முந்தி ஓடி*

*மயில் புறா மான் என்ற*

*சொற்களைத் தேடி*

*முதுகு வளையச்*

*சுமந்து வருகின்றனர்*"[17]

என்ற தமிழன்பனின் கவிதைவழி உணர முடிகின்றது. பெண்களின் எதார்த்தத்தை மறைக்கும் ஆண் கவிஞர்களின் இலக்கியச் சூழ்ச்சியை,

---

16. வைரமுத்து, வைரமுத்து கவிதைகள், ப. 233.
17. ஈரோடு தமிழன்பன், ஈரோடு தமிழன்பன் கவிதைகள், தொகுதி-3, ப. 262.

"பிரபுக்களின்

கட்டில் சத்தத்திற்கும்

பாலுக்கழும் பிள்ளையின்

தொட்டில் சத்தத்திற்கும்

சிலேடை பாடிய

சிருங்காரக் கவிதை"[18]

என்ற வைரமுத்துவின் கவிதையிலிருந்து உணரமுடிகின்றது. தமிழரின் நீண்ட கவிதைப் பரம்பரையைப் பார்க்கும்போது அந்தரங்கமும், ஆபாசமும் நிறைந்த அழகியல் கவிதைகளே விஞ்சி நிற்கின்றன.

சமுதாயத்திற்குத் தேவையான பொறுப்புணர்ச்சி மிகுந்த படைப்புகளைப் படைக்கத் தொடக்ககாலக் கவிஞர்கள் தவறியிருக்கிறார்கள். எனவேதான், இன்றைய சமுதாயச் சீர்திருத்த ஆயுதமாக விளங்க வேண்டிய கவிதைகள் சிருங்காரக் கவிதையாகத் தரம் தாழ்ந்து காணப்படுகின்றது என்பதை அறியமுடிகின்றது.

## 2.5.திரைப்படங்களில் பெண்களின் நிலை

இலக்கியத்தைத் தொடர்ந்து அடுத்த நிலையில் சக்தி வாய்ந்த ஊடகமாகத் திகழ்வது திரைப்படமாகும். நல்ல கலைஞர்களின் கையில் இருந்த இந்த ஊடகம் இன்று வியாபாரிகளின் கையில் உள்ளது. இந்த ஊடகத் துறையில் பணத்திற்காகவும் புகழுக்காகவும் பெண்கள் தங்களின் கவுரவத்தை இழந்து கொண்டிருக்கிறார்கள். பெண்மையைத் தவறான அடையாளங்களால் பிரதிபலிக்கும் திரைப்படத்துறையை,

"ஒரு காமுகனின்

வெப்ப மூச்சைப்

பகிர்ந்து கொள்ளும்

---

18. வைரமுத்து, திருத்தி எழுதிய தீர்ப்புகள், ப. 48.

*பிச்சைக்காரி*

*இந்த*

*சினிமா குசாப்புக்*

*கடையைக் காட்டிலும்*

*நாகரீகமானவள்"*[19]

என்ற கவிதையின் வாயிலாகக் கவிஞர் சிற்பி வெளிக்காட்டுகிறார்.

திரைப்படச் செய்திகளையும் படங்களையும் சுமந்து வரும் சுவரொட்டிகள் விளம்பரத்திற்காகத் தெருவெங்கும் ஒட்டப்படுகின்றன. இவ்வாறு ஒட்டப்படும் விளம்பரங்கள் பெண்மையைக் கொச்சைப்படுத்தும் விதமாக அமைகின்றன. விளம்பரங்களில் ஆடை குறைவான பெண்களைக் காட்டித் திரைப்படமானது பணம் சம்பாதிக்கிறது. இவ்வாறு செய்யும் இச்செயலானது காமுகனோடு தன்னைப் பகிர்ந்து கொள்ளும் பிச்சைக்காரியின் நடத்தையைவிட மிகவும் இழிவானது என்கிறார் கவிஞர் சிற்பி.

ஊடகங்கள் ஆணின் கட்டுப்பாட்டிற்குள் இருக்கும் வரை பெண்கள் பாலியல் ரீதியாக அதிகம் சுரண்டப்படுவதோடு, தங்களது சுயமரியாதையையும் இழந்து நிற்கும்நிலை தொடர்ந்து கொண்டேதான் இருக்கும்.

*"பணக்கார வீட்டுப் பெண்களைப் போல*

*நாளுக்கொரு புடவை கட்டும்*

*நகரத்துச் சுவர்கள்*

*அந்தச் சுவரொட்டிகளில்*

*கசாப்புக் கடையில் தொங்கும்*

*உரிக்கப்பட்ட ஆடுகளாய்*

---

19. சிற்பி, சிற்பி கவிதைகள், தொகுதி-1, பக்.552-553.

***உல்லாச நடிகைகள்***"[20]

என்ற வைரமுத்துவின் கவிதை ஊடகத்தில் உள்ள பெண்களின் நிலைப்பாட்டினைப் பரிதாபத்துடன் வெளிப்படுத்துகிறது. இவ்வாறு ஊடகங்களில் பெண்கள், சுயமதிப்பை இழந்து ஆணின் கலை வர்த்தகத்தைப் பெருக்கும் கருவிகளாக இருக்கும் அவலநிலைக்கு ஆணாதிக்கப் போக்கே காரணம் என்று தெளிய முடிகின்றது.

ஊடகங்களில் பணமும் புகழும் கிடைக்கும் என்பதற்காகச் சுய மரியாதையை அடகு வைக்கின்ற பெண்களின் நிலையைக் கவிஞர் வெளிப்படுத்தியுள்ளார்.

"***சவரக்கத்தி கூட***

***உன்***

***சரும அழகில் சருக்கி விளையாடியே***

***ஆண்களின்***

***கன்னங்களை***

***மழமழப்பாக்கப் பழகிக் கொள்ளும்***"[21]

என்ற தமிழன்பனின் கவிதை, முற்றிலும் தொடர்பே இல்லாத முகச்சவர விளம்பரங்களில் பெண்களை வைத்து விளம்பரம் செய்யும் கேலிக் கூத்தான நிலையைக் கவிஞர் நையாண்டி செய்கிறார்.

## 2.6.விளம்பரங்களில் பெண்களின்நிலை

திரைப்படங்களைப் போலவே விளம்பரங்களும் பெண்ணை மையமிட்டதாகவே தயாரிக்கப்படுகின்றன. இவற்றில் பெண்ணுக்குத் தொடர்பில்லாத நுகர்வுப் பொருள் விளம்பரங்களிலும் பெண்கள் தோன்றி ஆண் வர்க்கத்தின் வியாபார உத்திக்குப் பலியாகி வருகிறாள். இவ்வாறு ஆண் வர்க்கத்தின் ஊடக உலகில் உருக்குலைந்து கொண்டிருக்கும் பெண்களின் அவல நிலையை,

---

20. வைரமுத்து, வைரமுத்து கவிதைகள், ப. 232.
21. ஈரோடு தமிழன்பன், மு.நூ., ப. 334.

"உன் சகோதரி

ஒரு சோப்பு விளம்பரத்திற்குச்

சுந்தரப் புன்னகையைப்

பிரசவித்து விட்டு

வாழ்க்கை அழுக்கில்

வழுக்கி விழுந்தாள்"[22]

என்று கவிஞர் தமிழன்பன் எடுத்துரைக்கிறார்.

இவ்வாறு, விளம்பரங்களில் நடித்துத் தன் மதிப்பை இழந்த பெண்ணின் வாழ்க்கையைக் கூற வந்த கவிஞர் ஈரோடு தமிழன்பன்,

"மின்னும் காஞ்சிப்பட்டுக்கு

மாதிரியாகி அதன்

விலையை ஏற்றிவிட்டு

கந்தலாகிப் போன

சொந்த வாழ்க்கையை

இருட்டுக்கு

மலிவுவிலையில் விற்றது நினைவில்லையா"[23]

என்று கேள்வி எழுப்புகிறார். ஆடை விளம்பரங்களில் தோன்றி அவமான அனுபவங்களால் மலிவாக்கப்பட்ட பெண்களின் நிலையை இக்கவிதை விளக்கி நிற்கின்றது.

இவ்வாறு விளம்பரத்தின் மூலம் வியாபாரத்தைப் பெருக்கும் உந்து சக்தியாகப் பெண்ணை, இச்சமூகம் பயன்படுத்தி வருவதை,

---

22. ஈரோடு தமிழன்பன், மு.நூ., ப.334.
23. ஈரோடு தமிழன்பன், மு.நூ., ப. 334.

**"உன் சகோதரிகள்**

**அஞ்சல்வழிக் கல்வி போலப்**

**பத்திரிகை வழிப்**

**பரத்தமைக்கு**

**ஆட்படுகின்றனர்"**[24]

என்று ஈரோடு தமிழன்பன் வினவுகிறார். இதன்மூலம் பணத்திற்காகவும், புகழுக்காகவும் தங்களின் சுயமரியாதையையும், சுயக்கட்டுப்பாட்டையும் அடகுவைக்கும் பெண்களின் போக்கினை அறியமுடிகின்றது.

இவ்வாறு கலை, இலக்கியம், ஊடகம் போன்றவைகள், சமூக அக்கறையை இழந்து, பணம் சம்பாதிக்கும் வியாபார உத்தியாக மாறியுள்ளன. இக்கட்டமைப்பானது பெண்ணிடத்திலிருந்து பாலியல் சுரண்டலைத் தொடர்ந்து செய்து கொண்டிருக்கிறது என்பதை,

**"முதலாளித்துவ**

**கலை இலக்கிய**

**வியாபாரத்தில்**

**சதை**

**இயந்திரங்களாகச்**

**சிதைந்து கொண்டிருக்கிறார்கள்**

**சகோதரிகள்"**[25]

என்று கவிதைப்படுத்தியுள்ளார் கவிஞர் அறிவுமதி. முதலாளித்துவ உலகில் பணம், புகழ், பெயர் எனச் சமூகத்தில் ஆடம்பர வாழ்க்கை வாழலாம் என்று பெண்களிடம்

24. மேலது, ப. 335.
25. அறிவுமதி, அறிவுமதி கவிதைகள், ப. 307.

ஆசையைக் காட்டி அவர்களின் திறனையும், உழைப்பையும் உறிஞ்சிக் கொழுக்கும் கலை இலக்கிய முதலாளித்துவத்தைச் சாடுகிறார் கவிஞர் அறிவுமதி. இவ்வாறு ஊடகங்கள் பெண்ணடிமைத் தனத்திற்கு வழிவகுப்பதை இக்கவிதைகள் வழி அறியமுடிகின்றது.

## 2.7.வீட்டுவேலை செய்யும் பெண்களின்நிலை

வீட்டு வேலை செய்யும் பெண்கள் மிகவும் ஏழ்மை நிலையில் உள்ளவர்களாக இருப்பர். ஓரளவு கூடப் படிப்பறிவு இல்லாதவர்களாகவும் இருப்பர். வேலை செய்யும் வீட்டில் தன் எஜமானியின் வசைச் சொற்களைக் கேட்டுக் கொண்டு, தனது பொருளாதாரச் சூழ்நிலையின் காரணமாக ஓய்வின்றி உழைப்பதை,

*"குப்பைகளை*
*தினமும் அள்ளி வீசியெறியும்*
*காலைப் பொழுதுகளுடன்*
*திறக்கின்றன*
*கதவுகள்*
*தினமும் துடைத்துவிட்டாலும்*
*எங்காவது பதிந்திருக்குமோ கால் அச்சு?*
*என்ற ஐயத்துடன் பார்வை ஓட*
*ஒவ்வொரு மூலையிலும்*
*ஏதோ ஒன்று சுருண்டு கொண்டும்*
*ஒளிந்து கொண்டும்,*
*வீட்டு எஜமானியின்*
*மூளைக்குள்*
*எரிச்சலைக் கிளப்பிக் "கொட்டும் வார்த்தைகள்"*

மனதில் விழுந்த போதே

தரையிலும் சிதறியிருக்கும்

கறைகளை துடைத்தபடி

முணுமுணுக்கும் உதடுகள்”[26]

என்று கவிதைப்படுத்தியுள்ளார் மஞ்சுளா. உதடுகளால் முணு முணுத்துக் கொண்டே தன்னுடைய குடும்ப வறுமையைப் போக்குவதற்காக பணிப்பெண் வீட்டு எஜமானியின் ஆதிக்க சக்திக்குப் பயந்து வீட்டை சுத்தம் செய்கிறாள். அந்த எஜமானியின் வீட்டுக் குழந்தைகள் அமர்ந்து சாப்பிடும் மேசையின்மீது சிதறிக் கிடக்கும் உணவுகளையும், அந்தக் குழந்தை உடைத்த பொருள்களையும் எடுத்து சுத்தம் செய்வதற்கே பொழுது சரியாக உள்ளது. பிறகு எப்படி பணிப்பெண்கள் ஓய்வெடுக்க முடியும் என்பதையும் தம் கவிதைவழி எடுத்துக்காட்டியுள்ளார்.

“சிறுவர்கள் கொரித்து

மீந்த அலட்சியத்தில்

சிதறிக் கிடக்கும்

அடையாளங்களைச் சுமந்த

சாப்பாட்டு மேசை,

துடைத்து துடைத்து

அழுக்கேறிப் போன

துணிகளுடன் காயும்

கொல்லை புறத்துக் கொடி

ஏதாவது ஒரு குழந்தை

பிரித்தும் உடைத்தும்

26. ஜி.மஞ்சுளா, தீ மிதி, ப. 60.

போடுகிற சாமான்களால்

எப்போதும் சலித்துக் கொள்ளும் மனம்

தீராத வேலைகளுக்கும்

அலுப்புகளுக்கும் நடுவே

ஓய்வெடுக்கிறது

குப்பைகளும் வசவுகளுமற்ற

வேலைக்காரியின் நடுச்சாமம்"[27]

என்று காலை எழுந்தது முதல் இரவு வரை ஓய்வின்றி உழைக்கும் பணிப்பெண்களின் நிலையைப் படம்பிடித்துக் காட்டியுள்ளார் மஞ்சுளா.

## 2.8.வேலைக்காரப் பெண்களின்நிலை

வீடுகளில் வேலை செய்யும் பொருளாதாரத்தில் பின் தங்கியுள்ள பெண்களின் நிலை சமூகத்தில் பல கோணங்களில் பார்க்கப்படுகின்றது. அந்தந்த வீட்டு ஆண்களின் பார்வை, பிற ஆண்களின் பார்வை எனப் பல்வேறு சிக்கல்களுக்கு நடுவில் வேலைக்காரப் பெண்கள் தங்கள் காலத்தைக் கடத்திக் கொண்டிருக்கின்றனர் என்பதை,

"கடுமையான வசவுடன்

கால் பொசுக்க

வாசல் கூட்டும் பொம்மாக்காவைப் போல்

கால் சுற்றும் பூனையாய்க்

கொஞ்சுகிறது இந்த வெயில்"[28]

என்ற கவிதையின் மூலம் தமிழச்சி தங்கபாண்டியன் வேலைக்காரப் பெண்களுக்கு ஏற்படும் சிக்கலை வெளிப்படுத்தி இருக்கிறார்.

---

27. மேலது.
28. தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப. 132.

இவ்வாறு வீட்டு வேலை செய்யும் பெண்களின் மீது, ஆண்கள் செலுத்தும் தவறான பார்வையினை,

"ம்'பார்த்து அடி'
மேலே விழுகிறதாம்
மாமனாரின் முணுமுணுப்பு
ஆனால் அசைய மாட்டார்
அங்கிருந்து'
நாளிதழ் பின்னிருந்து
நாசூக்காய்ப்
பார்வை போகும் இடம்
பாத்திரம் தேய்க்கும்
பவுனுவின்
நைந்த புடவை
நகர்ந்த மேலாடை"[29]

என்னும் கவிதை எடுத்துக்காட்டுவதாய் அமைந்துள்ளது. இது போன்று ஆண்களின் பார்வையில் சிக்கும் பெண்கள் ஆண்களின் பாலியல் துன்புறுத்தலுக்கும் ஆளாகின்றனர் என்பதை அறியமுடிகின்றது.

## 2.9.உழைக்கும் பெண்களின்நிலை

முதலாளித்துவ வர்க்கமானது ஆண் கூலிகளைவிடப் பெண்கூலிகளிடம் அதிக உழைப்பைப் பெற்றுக் குறைந்த கூலியை வழங்குகிறது. இருபால் உழைப்பாளிகளும் சமமான உடலுழைப்பைக் கொடுக்கும் நிலையில், பெண்களுக்கு மட்டும் குறைவான

29. தாமரை, ஒரு கதவும் கொஞ்சம் கள்ளிப்பாலும், ப. 36.

கூலி கொடுப்பது சமூக விரோதச் செயலாகும். பெண்கள் ஆண்களைப் போன்று உடல் வலிமையைக் கொண்டிருக்கவில்லை என்ற கருதுகோள் தவறானதாகும்.

"களத்துல கட்டுடைத்து

கச்சிதமா நெல் உதிர்த்து

காத்துவரும் நேரம் பார்த்து

தூரத்தி முடிக்கும் முன்னே

கண்ணுல விழுந்த தூச

நின்னெடுக்க நேரமேது?

ஒன்னுக்கு இருக்கக் கூட

ஒழியுதில்ல நேரமயா"[30]

என்ற கவிஞர் இளம்பிறையின் கவிதை முதலாளித்துவ வர்க்கத்தின் அடிமைகளாக இருக்கும் பாட்டாளி வர்க்கத்தினரின் துன்பங்களை எடுத்துச் சொல்கிறது. அடிமை வர்க்கமாக இருக்கும் தொழிலாளி வர்க்கத்தில் அடிமையின் அடிமையாக இருக்கும் பெண்களின் நிலையினை இக்கவிதையானது படம்பிடிப்பதோடு, பொருளாதாரச் சுதந்திரத்திற்கானத் தொழிலாளர்களின் போராட்டத்திலும் பெண்கள் ஒடுக்கப்பட்டிருப்பதைத் தெளிவாக எடுத்துக்காட்டியுள்ளது.

## 2.10.பெண்கள் - பாலியல் பண்டங்கள்

ஆண்களின் பார்வையில் பெண்கள், காமச் சுகம் அளிக்கும் பாலியல் பொருளாகப் பார்க்கப்படுவதை அறியமுடிகின்றது. ஆணின் காமப்பசிக்குச் சதை விருந்து படைக்கும் அடிமையாகப் பெண் அடையாளப் படுத்தப்படுகிறாள் என்பதை,

"கணவனின் குறிப்பேடுகளால்

மனைவிகள்

30. இளம்பிறை, நிசப்தம், ப. 22.

இண்டு இடுக்குவிடாமல்

தினசரி எழுத

அவர்களின்

மோகக் கிறுக்கலுக்குப்

பக்கம் பக்கமாய் விரிந்து

மனைவிகள் நாட்குறிப்புகள்

நாட்குறிப்புகள்

நாட்குறிப்பு எழுதவில்லை”[31]

என்ற கவிதை எடுத்துக்காட்டுகின்றது. கணவன் மார்களின் பாலியல் வேட்கையைத் தீர்த்துக் கொள்ளும் கருவிகளாகப் பெண்கள் கருதப்பட்டதால் அவர்களது உணர்வுகள் சாகடிக்கப் பட்டிருப்பதை ஆண்டாள் பிரியதர்ஷினி மிகத் தெளிவாக எடுத்துக்காட்டியுள்ளார்.

## 2.11.கட்டடவேலை செய்யும் பெண்களின்நிலை

கட்டட வேலை செய்யும் சித்தாள் என்று சொல்லப்படும் பெண்கள் பல்வேறு பணிச்சுமைகளால் கசக்கிப் பிழியப்படுகின்றனர். இவர்களின் உழைப்பு சுரண்டப்படுவதையும், அவர்களின் வேதனையும், வலியும் பின்வருமாறு கூறப்படுகிறது.

“முதுகை வெறுமையாக்கி

முந்தானைப் பந்தாக்கி

சும்மாடு கிரீடத்தை

விடாமல் பற்றியிருக்கும்

நாங்கள் தான்

இப்பாரத பூமியின் இளவரசிகள்

31. ஆண்டாள் பிரியதர்ஷினி, முத்தங்கள் தீர்ந்துவிட்டன, பக். 42-43.

எங்களுக்குத் தெரிந்ததெல்லாம்

சூரியன் ஊடுருவும் சல்லாத் துணிகள்

ஜோடி சேராத ஒற்றைச் செருப்புகள்

ஊஞ்சலாடும் சாரங்கள்

பல்போன ஏணிகள்"[32]

என்று மீனாட்சி தம் கவிதையின் வழியாக சித்தாள் வேலை செய்யும் பெண்களின் சிக்கல்களைப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

இவ்வாறு கட்டட வேலை செய்யும் பெண்கள் மண் சலிக்கும் போதும், செங்கல் தூக்கும் போதும் ஏற்படக் கூடிய வியர்வைத் துளிகள் அவர்களின் கடுமையான உழைப்பினை வெளிப்படுத்திக் காட்டும்.

"குழியாத கரண்டியின் சங்கீதங்கள்

இரும்புத் தட்டுகளில் இறுகும் கவலைகள்

எங்களுக்கும் சட்டம் உண்டு

அது

மண் சலிக்கும்

எங்களுக்கும் திருவிழா

தெருவோரங்களில்

தினந்தினமுண்டு.

நாங்களே தேராகி

சுண்ணாம்பு மஞ்சனத்துடன்

குலுங்க வருவோம்

செங்கல் வியர்வை அபிஷேகம்

32. இரா. மீனாட்சி, மீனாட்சி கவிதைகள், ப. 99.

***கொத்தும் மேஸ்திரியின் அர்ச்சனைகள்”***[33]

என்று மீனாட்சி தம் கவிதையின் வாயிலாகப் பணி செய்யும் இடத்தில் உயிருக்கு உத்திரவாதம் இன்றியும், மேஸ்திரியின் அர்ச்சனைகளுக்கும் ஆளாகின்றனர் என்பதை உணரமுடிகின்றது.

கிராமப் புறங்களில் உள்ள பெண்கள் கூலி வேலை செய்து பிழைக்க வேண்டிய நிலை உள்ளது. கட்டடத் தொழிலாளியாக வேலை செய்யும் பெண்கள் மீது ஆண்களின் காமப் பார்வையும், பாலியல் துன்புறுத்தலும் செலுத்தப்படுகின்றன என்பதை,

***“எங்கள் மேய்ப்பர்***
***யாருக்குச் சித்தரனோ?***
***முதுகைத் தடவி***
***தலையையும் தடவி***
***அவர்கள் அளப்பது***
***கூலியுமல்ல***
***கப்பமுமல்ல***
***எங்கள்***
***வயிறெல்லாம் கொப்புளங்கள்***
***இறக்க முடியாத சுமைகள்”***[34]

என்ற மீனாட்சியின் கவிதை வரிகள், கூலி வேலை செய்யும் பெண்களுக்கு, வேலை முடிந்து கூலி கொடுக்கும் போது எவ்வாறெல்லாம் பாலியல் சுரண்டலுக்கு ஆளாகின்றனர் என்பதை இக்கவிதை படம் பிடித்துக் காட்டுகிறது.

---

33. மேலது.
34. இரா.மீனாட்சி, மு.நூ., ப. 100.

## 2.12.பேருந்துப் பயணத்தில் பெண்களின்நிலை

பேருந்துகளில் கூட்டம் அதிகமாகும் வேளையில் பெண்கள் பெரும் துன்பத்திற்கு ஆளாகின்றனர். பேருந்தில் செல்லும் பெண்கள், பல பாலியல் தொல்லைகளுக்கு ஆளாகின்றனர் என்பதை,

**"இப்பேருந்து நெரிசலில் பெண்ணாய்**

**இச்சிக்கப்படுவதைவிடப் பேசாமல்**

**மைனாவாய்ப் பிறந்திருக்கலாம்"**[35]

என்ற தமிழச்சி தங்கபாண்டியன் கவிதைவழி அறியமுடிகின்றது. பேருந்தில் செல்லும் பெண்களின் மனநிலையையும், பயணத்தில் ஏற்படும் பாலியல் தொந்தரவுகளும் எத்தகைய துன்பத்தைத் தருகின்றன என்பதை இக்கவிதை விளக்கி நிற்கின்றது.

போக்குவரத்துப் பயணங்கள் எளிதாகிவரும் இன்றைய சூழ்நிலையில் பெண்கள் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் பாதுகாப்பாகச் செல்லமுடியாத நிலை உள்ளது. அண்மைக்காலங்களில் பேருந்து மற்றும் தொடர்வண்டிகளில் தனியாகப் பயணம் செய்த பல பெண்கள் ஆண்களின் பாலியல் சீண்டல்களுக்கு ஆளாகியதைச் செய்தித்தாள்கள் மற்றும் தொலைக்காட்சி வாயிலாக அறிந்தோம். இந்நிலையை,

**"போக்கு ~ வரத்து**

**எளிதாகிவரும் இந்தக் காலத்திலும்**

**போய்வர முடிவதில்லை சில இடங்களுக்கு"**[36]

என்று பதிவு செய்துள்ளார் கவிஞர் பழமலய்.

பேருந்துப் பயணத்தில் செல்லும் பெண் கைக்குழந்தையுடன் கூட்ட நெரிசலில் தடுமாறுகிறாள். இதனைப் பார்த்த வக்கிர குணம் கொண்ட ஆண் ஒருவன் அவளை இடித்துக் கொண்டே பயணம் செய்கின்றான். பொறுமையாக இருந்த அந்தப் பெண்

---

35. தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப் பெண், ப. 48.
36. சு.சண்முகசுந்தரம்(தொகு.ஆ.), மு.நூ., ப. 444.

திடீரெனத் "தள்ளி நில்லுடா பொறுக்கி" என்று கண்டிக்கின்றாள். இதனை மு.மேத்தா பின்வருமாறு கவிதை புனைந்துள்ளார்.

"பேருந்து நடத்திய
ஊஞ்சல் ஓட்டத்தில்
கைக் குழந்தையுடன்
தடுமாறிக் கொண்டிருந்த
தையல் ஒருத்தி
கீழ்த்தரமாய்
இடித்துக் கொண்டே
இருந்த
கிருதாக்காரனைக்
கிழித்தாள்
"தள்ளி நில்லுடா
பொறுக்கி"[37]

என்ற கவிதையின் வழி கவிஞர், பேருந்துப் பயணத்தில் பெண்கள் அனுபவிக்கும் பாலியல் தொல்லைகளையும், ஆண் வர்க்கத்தின் கீழ்த்தரமானப் போக்கினையும் வெளிப்படுத்தியுள்ளார்.

இவ்வாறு பேருந்துப் பயணத்தில் செல்லும் பெண்களின் மீது ஏற்படக் கூடிய பாலியல் தொல்லைகளைக் கூறவந்த சல்மா,

"வஞ்சம் படர்ந்த
நகரத்தின் தெருக்களில்
வெப்பம் மிகுந்ததையும்

37. மு.மேத்தா, காத்திருந்த காற்று, ப. 72.

பேருந்தில்

வியர்த்து வழியும் உடல்களினூடே

எங்கோ துளிர்த்துப் பெருகிய வன்மமென

என் மீது நீளும்

ஓர் ஆண்குறி"[38]

என்று ஆண்களின் பாலியல் செயற்பாடுகளால் பாதிக்கப்பட்டுத் துன்பம் அடையும் பெண்களின் உணர்வுகளை விவரித்துள்ளார். மேலும்,

"நெரிசலின் நடுவே

தானே பேசிக்கொண்டு போகிற

பெண்ணொருத்தியைப் பார்த்தேன்

அவள் தலை கலைந்திருந்தது

காய்கறி நிரம்பி வழிகிற

பைகளோடிருந்தாள்

முணுமுணுப்பாயில்லாமல்

உரக்க தனக்குத்தானே பேசினபடி"[39]

என்ற கவிதையின் வாயிலாகப் பேருந்துக் கூட்ட நெரிசலில் காய்கறிப் பையுடன் பயணம் செய்த பெண்ணிற்கு ஏற்படும் பாலியல் துன்ப நிகழ்வினைப் படம் பிடித்துக் காட்டியுள்ளார் சே.பிருந்தா.

இதேபோல், தன் குடும்பம், தன்கணவன், தன்பிள்ளைகள் ஆகியோரைப் பிரிந்து வெகுதொலைவில் அலுவலகம் சென்று வேலை முடிந்து இரவில் வீடு திரும்புகின்றாள். அப்போது பாதி உறக்கத்தில் இருந்த அவளுக்கு நேர்ந்த துன்பத்தைக் கவிஞர் பின்வருமாறு கூறுகிறார்.

---

38. சல்மா, பச்சைத் தேவதை, ப. 38.
39. சே.பிருந்தா, வீடு முழுக்க வானம், ப. 39.

"இரவு நேரப் பேருந்துப் பயணத்தின்

அரை உறக்கத்தினூடே

ரகசியமாய் இடை வருடும்

பின் இருக்கை மிருகம்

காமமும் கோபமும்

ஒருசேரக் கிளர்ந்தெழ

வருடலின் சுகம் மீறியும்

பளாரென அறைகிறேன்

என் வருகையை எதிர்நோக்கி

தலையணை கட்டித்தூங்கும்

கணவன் முகம் நினைத்து"[40]

இவ்வாறு ஆண்களின் இந்த அற்ப மகிழ்ச்சியால் கல்வியைக் கைவிட்டவர்களும், அலுவலகம் செல்ல அருவருப்பு அடைந்தவர்களுமாகப் பெண்கள் பல வகையில் பாதிக்கப்படுகின்றனர். இவ்வாறு சிக்கல்களை எதிர்கொள்ளும் ஆற்றல் உள்ள பெண்கள் எவ்வாறேனும் சமாளித்துக் கொள்கின்றனர். ஆனால், இத்தகைய செயல்களைக் கண்டு அஞ்சும் இயல்புடைய பெண்களின் எதிர்காலமே இருண்டு போவதை மேற்கண்ட கவிதைகள் விளக்கி நிற்கின்றன.

## 2.13.சீண்டலுடன் வேலைக்கூலி

பெண்களின் கவர்ச்சி கருதியே பல்வேறு கடைகளில் பெண்கள் பணியமர்த்தப்படுகின்றனர். பெண்களை விற்பனையாளராக அமர்த்தினால் வாடிக்கையாளர்களைக் கவரக்கூடும் என்பதைப் பல்வேறு வணிக நிறுவனங்கள் உத்தியாகப் பின்பற்றி வருகின்றன.

40. அனிதா, கனவு கலையாத கடற்கன்னி, ப. 16.

"பொட்டப் புள்ளைக சிவனேன்னு
கொடுத்த காசுக்கு உழைக்கும்
வர்ரவனுக்கும் கண்ணுக்குக் குளிர்ச்சியா
கூட்டம் குறையாது"[41]

என்னும் இவ்வரிகள் வாடிக்கையாளர்களைக் கவரும் அழகுசாதனப் பொருளாகப் பெண்கள் பார்க்கப்படுவதை உணர்த்துகின்றது.

வறுமையின் காரணமாகக் கிழிந்த ஆடையை உடுத்தி வரும் பெண் தொழிலாளி ஒருத்தியின் இக்கட்டான நிலையினை,

"பார்வைக் கணைகள் பட்டுக் கிழிந்த
பழைய ரவிக்கைக் கந்தல் ~ அவள்
வேர்வை மணக்கும் மார்பின் சரிவை
மூடும் சேலைப் பந்தல்"[42]

என்று இக்கவிதை உணர்த்தி, உழைக்கும் பெண்களின் இடர்ப்பாடுகளை எடுத்துக் கூறுகின்றது. கிழிந்த அல்லது குறைந்த ஆடையுடன் வரும்போது ஆணுக்கு ஏற்படாத சிக்கல் பெண்களுக்கு ஏற்படுவதை இவ்வரிகள் சுட்டிக்காட்டுகின்றன.

## 2.14.கங்காணிகளின் அத்துமீறல்கள்

கண்காணிப்பவர் என்னும் சொல் "கங்காணி" எனத் திரிந்து வழங்குகின்றது. வறுமையின் காரணமாகப் பணிக்குச் சென்ற பெண்கள் இந்தக் கங்காணிகளால் பல்வேறு சிக்கல்களுக்கு ஆளாகின்றனர்.

"கட்டுத் தூக்கும் போது
கதிர்விலக்கும் சாக்காய்

---

41. சிற்பி, சிரித்த முத்துக்கள், ப. 21.
42. ஞானக்கூத்தன், கடற்கரையில் சில மரங்கள், பக். 27-29.

ஒதுங்கிய மார்பைத்

தட்டி விடுவான் கங்காணி

அலையும் கன்றை

ஒதுக்கி மேய்க்கையில்

மேயவருவான் கங்காணி

முறைத்துப் பார்த்தால்

பேச்சை மாற்றிப்

புருசனை விசாரிப்பான்”[43]

என்ற இக்கவிதை கங்காணிகளின் அத்துமீறல்களைப் புலப்படுத்துகின்றது. பல்வேறு விதமாகப் பேசும் பண்பாட்டு நிலைகளையும் புறந்தள்ளி, மணமான கூலித்தொழிலாளியிடம் ஆண்கள் முறைதவறி நடக்கும் நிலையினை இக்கவிதை வெளிப்படுத்துகின்றது. இவ்வாறு பெண்களின் துயரத்தைக் கண்ட பாரதி,

“நெஞ்சம் குமுறுகிறார் ~ கற்பு

நீங்கிடச் செய்யும் கொடுமையிலே அந்தப்

பஞ்சை மகளிரெல்லாம் ~ துன்பப்

பட்டு மடிந்து மடிந்து மடிந்தொரு

தஞ்சமும் இல்லாதே - அவர்

சாகும் வழக்கத்தினை இந்தக் கணத்தில்

மிஞ்ச விடலாமோ? - ஹே

வீரகாளி சாமுண்டிகாளி”[44]

43. பச்சியப்பன், உனக்குப் பிறகான நாட்களில், ப. 70.
44. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப. 126.

என்று பாடியிருப்பது கவனத்தில் கொள்ளத்தக்கது. இன்றும் பணியிடங்களில் பெண்களின் இத்துன்பங்கள் குறைந்துவிட்டதாகக் கூற முடியவில்லை. பெண்களின் கற்புக்குப் பங்கம் நேர்வதைக் குறிப்பிடும் பாரதி, அதனால் அவர்களுக்கு ஏற்படும் துயரை "மடிந்து" என்ற சொல்லை மும்முறை பயன்படுத்துவதன் மூலம் கூறுகிறார். இத்தகைய நிலையினைப் போக்குவதற்குப் பெண்களை அணிதிரட்டும் போராட்டத்தை முன்வைப்பதுமே வழியாகும். ஆனால், பாரதியோ அந்த எல்லையைத் தொடமுடியாத சூழலில் இறைவனிடம் தஞ்சம் புகுவதைக் காணமுடிகின்றது.

இன்றும் உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் இத்தகைய துயரத்தைப் பெண்கள் சந்தித்துக் கொண்டுதான் உள்ளனர் என்பதை,

"பெண்வர்க்கம் அயல்நாடுகளில்
தேயிலைத் தோட்டங்களிலும்
ரப்பர் தோட்டங்களிலும்
கற்பிற்கும் வயிற்றுப் பிழைப்பிற்கும்
வடித்திடும் கண்ணீர்"[45]

என்ற இக்கவிதை எடுத்துக்காட்டுகிறது. வயிற்றுப் பிழைப்பிற்காகப் பாலியல் தொல்லைகளுக்கு ஆளாக வேண்டிய சூழலில் இன்னும் பெண்கள் உள்ளனர் என்பதும் ஆணாதிக்கப் போக்குகள் இன்னும் மறையாமலேயே உள்ளது என்பதும், இக்கவிதைகளின் வாயிலாக அறியமுடிகின்றது.

## 2.15.ஆண்களின் பார்வையில் பெண்கள்

சமூகத்தில் பெண் ஆணைப் போலவே ஓர் உயிரியாகக் கருதப்படாமல் ஆண்களின் உடைமைப் பொருளாகவும், கருவியாகவும் மட்டுமே இன்றும் மதிக்கப்படுகிறாள்.

45. மித்ரா, நிரந்தர நிழல்கள், ப. 7.

"தந்தைக்கு அவள் ஒரு

பந்தையச் சரக்கு

காமுகனுக்கு அவள்

இரவல் பாக்கு

கணவனுக்கோ அவள்

யந்திர உறுப்பு"[46]

என்ற கவிதையின் மூலம் கவிஞர் சிற்பி, தந்தை, கணவன் மற்றும் பிற ஆண்களின் ஆதிக்கத்தின்கீழ் வாழ்கின்ற பெண் சூதுப் பொருளாகவும் பாலியல் பண்டமாகவும், அடிமை இயந்திரமாகவும் பார்க்கப்படுவதை இக்கவிதை உணர்த்தி நிற்கின்றது.

## 2.16.பெண்கள் ஆண்களின் கருவிகள்

ஒவ்வோர் ஆணும் பெண்களைத் தன் பயன்பாட்டுப் பொருளாகப் பார்ப்பதால் ஆணின் தேவையை நிறைவு செய்யும் கருவியாகவே பெண் மதிக்கப்படுகிறாள். இவ்வாறு தொடர்ச்சியாக பெண்கள் ஏமாற்றப்பட்டு வருவதற்கு நல்லவர்களாகவும் தீயவர்களாகவும் இரட்டை வேடமிடும் ஆண் வர்க்கமே காரணம் என்பதை,

"வசந்த உற்சவத்திற்கு

முதல் தாம்பூலம் வாங்கி

இலையுதிர் காலத்தில் வாய்

கொப்பளித்து உமிழும்

விசுவ எத்தர்களும்

துரோக துஷ்டந்தர்களும்

இன்னும் எங்களில் இருக்கிறார்கள்"[47]

---

46. சிற்பி, சிற்பி கவிதைகள், தொகுதி-1, ப. 601.
47. சிற்பி, சிற்பி கவிதைகள்-தொகுதி 1, ப. 474.

என்ற கவிஞர் சிற்பியின் கவிதை, ஆண் வர்க்கத்தின் ஆதிக்க வஞ்சகத்தை வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது. விசுவாமித்திரர், துஷ்யந்தன் ஆகியோர் பெண்களை ஏமாற்றிய ஆணாதிக்கவாதிகளாக இங்கு சுட்டிக்காட்டப் பட்டிருக்கிறார்கள். பழங்காலத்து ஆண்களின் ஆதிக்க மனநிலை இன்றைக்கும் ஆண்களால் பெண்கள் ஏமாற்றப்படுகிறார்கள் என்ற உண்மை தெரியாமல் பெண்கள் விழிப்புணர்வற்று இருப்பதை எடுத்துக்காட்டுகிறது.

## 2.17.வியாபாரத் தளத்தில் பெண்கள்

தற்காலத்தில் பெண்கள் மருந்துக்கடைகள், பண்டக சாலைகள், சிறுகடைகள், துணிக்கடைகள் மற்றும் பல்வேறு நிறுவனங்களில் பணியாற்றுகின்றார்கள். அப்பணிக்கு அவர்கள் தேர்ந்தெடுக்கப்படும்போதே உடல் பற்றிய எண்ணங்களும் பங்கு பெறுகின்றன. அதிகார மையம் பெண்களை எப்படியும் தங்கள் பிடிக்குள் கொண்டுவர வேண்டும் என எண்ணுகிறது.

"ஒவ்வொரு பெண்ணும் உலகத்தை எதிர்கொள்ள நேரும்
ஒவ்வொரு கணத்திலும் தன் ஆடையைச் சரிசெய்ய
வேண்டியுள்ளது. சமூகம் கண்கொத்திப் பாம்பு போல்
பெண்ணின் உடலைக் கண்காணிப்பதோடு விழுங்கவும்
காத்திருக்கிறது"[48]

என்ற வரிகள் வியாபாரத் தளத்தில் பெண்களுக்கு ஏற்படும் சிக்கல்கலைப் பிரதிபலிப்பதாக வடிவமைத்துள்ளார் கவிஞர் வெண்ணிலா.

இவ்வாறு எல்லா நிலைகளிலும் பெண்களின் உடல் உறுப்புக்கள் கவனிக்கப்படுகின்றன என்பதை,

"முழுக்க நனைந்தபடி

48. அ.வெண்ணிலா, பெண் எழுதும் காலம், ப. 9.

***வியாபாரம் பார்க்கும் இளம் பெண்ணிடம்***

***நிமிடத்தில் விற்று விடுகின்றன***

***மூடி வைத்த காய்கறிகள்”***[49]

என்ற கவிதையில் தமிழச்சி தங்கபாண்டியன் வெளிப்படுத்தியுள்ளார்.

## 2.18.பெண்கள் மீதான சந்தேகம்

ஆண்கள், பெண்களின் மீது சந்தேகம் கொள்ளும் நிலை, பெண்களின் முன்னேற்றத்திற்குப் பெருந்தடையாக உள்ளது. சீதையின் தீக்குளித்தல் இன்னும் தொடர்கிறது என்றே கூறலாம். குறிப்பாக, அலுவலகம் செல்லும் பெண்களின் மீது கொள்ளும் சந்தேகம் அவர்களை மன உளைச்சலுக்கு ஆளாக்கிவிடுகின்றது. சில சமயம் வேலைக்குச் செல்லும் பெண்கள் அலுவலக வேலையின் மிகுதியாலோ, விழாவின் காரணமாகவோ வீட்டிற்குக் காலதாமதமாகச் செல்வதுண்டு. அதேபோல் வீட்டிலுள்ள வேலையின் மிகுதியால் அலுவலகத்திற்குக் காலதாமதமாகச் செல்வதுண்டு. இவ்விரு நிலைகளிலும் பெண்கள் மிகுதியாகப் பாதிக்கப்படுகின்றனர்.

***“வேலைப் பளு காரணமாய்த்***

***தாமதமாய் வீடு வந்தால்***

***பார்வை மறையுதா? - சந்தேகப்***

***பார்வை குறையுதா?”***[50]

என்ற கவிதை, அலுவல் பணியின் காரணமாகக் கூடத் தாமதமாய் வருவது கணவனின் சந்தேகத்திற்குக் காரணமாகிவிடுகின்றது. இத்தகைய நிலை பெண்களின் இரட்டைச் சுமையோடு மூன்றாவது சுமையாக ஆகிவிடுகின்றது. மேலும்,

***“கண்ணுக்கழகியென மாற்றாரை அவன் பேசிடலாம்***

***அகத்திலோ அலுவல் அகத்திலோ***

---

49. தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப. 123.
50. மாலதி ஹரீந்திரன், மாலதி ஹரீந்திரன் ஹைகூ கவிதைகள், ப. 7.

**பெண்கள்தான் எவரோடு பேசிடினும்**

**செய்திடுவர் பெரும் ஐயம்”**[51]

என்ற இக்கவிதை இன்னொரு நிலையில், இருபாலருக்கும் உள்ள இரண்டக மதிப்பீட்டைக் குறிப்பிடுகின்றது. பெண்ணை எப்படி வேண்டுமானாலும் வருணித்துக் கூச்சமின்றி மகிழும் ஆண், அதே நேரத்தில் பெண்கள் ஆண்களோடு பேசினால்கூட ஐயம் கொள்கிறானே என்று இக்கவிதை வினா எழுப்புகின்றது. தனக்குள்ள உரிமை தனியென்பதிலும் அவ்வுரிமை பெண்களுக்கு அளிக்கப்படவில்லை என்பதிலும் ஆண்கள் உறுதியாய் உள்ளனர். அத்தகைய உரிமை பெண்களுக்குக் கூடாது என்றும் கருதுகின்றனர். எனவே, எப்போதும் பெண்களைக் கண்காணிப்பிலேயே வைத்திருக்க வேண்டும் என்று கருதுகின்றனர். இத்தகைய நிலை பெண்கள் பணிபுரிவதில் இடர்ப்பாடுகளை உண்டாக்குகிறது என்பதை இக்கவிதைகளின் மூலம் தெளியமுடிகின்றது.

## 2.19.ஊதியத்தில் உரிமையில்லை

பெண்கள் வீட்டில் இருப்பதால் அவர்களின் அன்றாடத் தேவைகளை நிறைவு செய்யக் கணவனை எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது. இதைக் காரணமாக வைத்துப் பெண்களை அடிமைப்படுத்துகின்றனர். ஆனால், இன்று பெண்கள் கல்வி கற்று சரிபாதிக்கு மேல் பணிக்குச் செல்கின்றனர். அவ்வாறு பணிக்குச் செல்லும் பெண்கள் தங்களுடைய அன்றாடத் தேவைகளை நிறைவு செய்யக் கணவரிடமும் மாமனாரிடமும் மாமியாரிடமும் எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது. இதனை,

**“மாதத்தில் ஒருநாள்**

**மறவாது அலுவலக**

**வாயிலில் வந்து**

**நிற்பார்’**

---

51. அரசு மணிமேகலை, ஒரு வானம்பாடி வாய்திறக்கிறது, ப.24.

**உறையோடு பறிபோகும்**

**வெட்டி முடிக்கிற**

**மாதச் சம்பளம்"**[52]

என்ற தாமரையின் கவிதை சுட்டிக்காட்டுகின்றது. பெண்கள் சுயமாக உழைத்துச் சொந்தக் காலில் நிற்க முயலும் போது, ஆணாதிக்கத்தால் அவர்களின் மாதச் சம்பளம்கூட அவர்களுக்கு உரிமை இல்லாமல் போய்விடுகிறது என்பதை உணரமுடிகின்றது. இவ்வாறு பெண்கள் பொருளாதாரத் தற்சார்பை வேலை வாய்ப்பால் பெற்றிருந்தாலும்கூடப் பண்பாட்டுச் சூழல் மாறாத காரணத்தால் ஊதியத்தைப் பயன்படுத்தும் உரிமையற்று இருப்பதைக் காணலாம். இக்கவிதையானது ஆணாதிக்கத்தின் அப்பட்டமான செயலை வெளிப்படுத்தி நிற்கின்றது.

பொருளாதாரத் தற்சார்பை வேலைவாய்ப்பால் பெற்ற பெண்கள்கூடப் பண்பாட்டுச் சூழல் மாறாத காரணத்தால் ஊதியத்தைப் பயன்படுத்தும் உரிமையற்று இருக்கிறாள் என்பதை,

**"அவன் கொணர்ந்து தரவேண்டும்**

**அவன் உழைப்பின் ஊதியத்தை**

**அதிலெடுத்துச் செலவு செய்ய**

**அவளுக்கோர் உரிமையில்லை"**[53]

என்று கூறும் கவிதை ஆணாதிக்கத்தின் அப்பட்டமான தோற்றத்தை வெளிப்படுத்துகிறது. பெண்ணின் ஊதியத்தின் மீதும் ஆண் ஆதிக்கம் செலுத்தித் தன் அதிகாரத்தை நிலைநிறுத்திக் கொள்கிறான் என்பதையே இது காட்டுகிறது. ஆணாதிக்கம் வேதவிதிபோல் கருதப்படும் சமூகச்சூழல் மாறாத நிலையில் பெண்களும்

---

52. தாமரை, மு.நூ., ப. 36.
53. அரசு மணிமேகலை, மு.நூ.,ப. 24.

இதற்கேற்ப நடந்து கொள்ள வேண்டிய சூழலுக்குத் தள்ளப்படுகிறார்கள் என்பதை இக்கவிதை உணர்த்தி நிற்கின்றது.

## 2.20.வேலைப் பகிர்வின்மை

வீட்டு வேலையையும், அலுவலகப் பணியையும் பெண்கள் செய்து வருகின்றனர். வீட்டு வேலை பெண்களுக்கானது என்றும், கணவன் அவ்வேலையைப் பகிர்ந்து கொண்டால் அது ஏளனத்துக்குரியது என்றும், கருதுகின்ற மனநிலையில் மாற்றம் வேண்டும். பொருளாதாரச் சுதந்திரம் பெண்களுக்குத் தரப்படுகிற அதே நேரத்தில் இத்தகைய பண்பாட்டுச் சூழலும் மாறினால்தான் பெண்களின் மீதான இரட்டைப் பணிச்சுமை பகிர்ந்து கொள்ளப்படும் என்பதை,

**"பெண்களுக்குப் பொருளாதாரச் சுதந்திரம் கிடைத்தாலும் கூடப் பழைய பண்பாட்டுச் சூழல் உடனடியாக மாற்றங்களுக்கு உட்படுவதில்லை. இந்நிலையில் பெண்களின் வாழ்நிலையைத் தீர்மானிப்பதில் நேரடியான பொருளாதாரக் காரணிகளைவிட, அக்காரணிகளால் உருவாகிய பண்பாட்டுச் சூழல் பெரும் பங்கு வகிக்கிறது என்பர்"**[54]

என்ற வரிகளின் வாயிலாகப் பஞ்சாங்கம், கணவன் மன நிலையில் மாற்றம் ஏற்பட வேண்டியுள்ளது என்கின்றார். பெண்களின் இந்நிலைக்குக் காரணம் பொருளாதாரக் காரணிகளை விட, அக்காரணிகளால் உருவாகிய பண்பாட்டுச் சூழலேயாகும் என்பது பெறப்படுகின்றது.

இன்றைய நிலையில் பெண்கள் பணிக்குச் சென்றாலும், வீட்டு வேலைகளையும் செய்ய வேண்டும் என்ற சூழ்நிலையே நிலவுகிறது. இதனை,

**"அலுத்துக் களைத்து**

**உள்ளே நுழைந்தால்**

**அதட்டல்' அவர்தான்!**

54. க.பஞ்சாங்கம், மு.நூ., ப. 12.

வீடெல்லாம் சிலந்தி பின்னி

அசிங்கமாய்க் கிடக்கிறதாம்

அதைக்கூட கவனியாது

அப்படியென்ன

வெட்டி முறிக்கிறேன்'

நேரத்தோடு வந்து

இதெல்லாம் செய்தால் என்ன?

சம்பாதிக்கிற திமிர்'

அடுத்த குரல் அடுக்களையிலிருந்து"[55]

என்ற கவிதைவழி அறியலாம். குடும்பக் கடமைகளோடு வெளி வேலையையும் சேர்த்துச் செய்யும் பெண்கள், இரட்டை மாட்டு வண்டியில் ஒரு மாட்டை மட்டும் கட்டியது போன்ற உணர்வோடு செயல்பட வேண்டியுள்ளது. இருபாலரும் அலுவல் பணிகளைப் பார்ப்பதோடு, குடும்பச் சுமைகளைப் பகிர்ந்து கொள்வதுமே இதற்குச் சிறந்த தீர்வாக அமையும் என்பதை இக்கவிதை விளக்கி நிற்கின்றது.

இவ்வாறு பணிக்குச் செல்லும் பெண்கள் வேலை, குடும்பம் என்று இரட்டைப் பணிச்சுமையால் துன்பப்படுகின்றனர் என்பதைக் கீழ்வரும் கவிதை எடுத்துக்காட்டுகின்றது.

"நாங்க,

வேலைக்குப் போகணும் சம்பாதிக்கணும்

வேளா வேளைக்குச் சமைத்துப் போடணும்

கணவன்மாரு வீடு வந்தால்

காலைப் புடிக்கணும் கையைப் புடிக்கணும்

55. தாமரை, மு.நூ., பக். 36-37.

**கத்தும் குழந்தையின் சத்தமடக்கணும்**

**கணவனோடு படுத்துறங்கணும்**

**வருஷமெல்லாம் பெத்துக் கொடுக்கணும்**

**வாழ்க்கையிலே மாரடிக்கணும் ~ அட**

**பெண்களெல்லாம் இயந்திரமா சொல்லுங்க ~ இத**

**ஆண்கள் கொஞ்சம் புரிந்து கொண்டா போதுங்க"**[56]

என்ற கவிதை பணிக்குச் செல்லும் பெண்கள் எதிர்கொள்ளும் இரட்டைப் பணிச்சுமையின் ஆதங்கமாக அமைகின்றது. இவ்வாறு குடும்பக் கடமைகளோடு வெளி வேலையையும் சேர்த்துப் பெண்கள் செய்தாலும், அப்பெண்களுக்குச் சமூகத்தில் மதிப்பில்லாத நிலையே நிலவுகின்றது என்பதையும் இதன்மூலம் அறியமுடிகின்றது.

## 2.21.ஓய்வின்றி உழைத்தல்

குடும்பத்தைப் பராமரித்தல், அலுவலகப் பணி என்று பெண்ணின் மீது பல்வேறு பணிகள் சுமைகளாக ஏற்றப்பட்டன. பெண்ணானவள் எதைப்பற்றியும் சிந்திக்கக் கூட நேரமின்றி அல்லள்படுகிறாள்.

**"பிழிந்தெடுத்து விட்டது**

**வயிற்று சுழற்சிக்கான வேலை**

**ஜன்னலோரத்தைப்**

**பார்க்கக் கூட முடியாமல்**

**அமைந்து போனது பயணம்**

**.......... ..........**

**கிழிந்து நைந்து**

**வீடு திரும்புகையில்**

56. ஜீவபாரதி, சொல்லுறத சொல்லிப்புட்டேன், ப. 29.

**வரவேற்றன இணைந்த கதவுகள்**

**மின்வெட்டு உபயத்தில்**

**இருளில் மூழ்கியது வீடு**

**அன்று ~**

**முழுநிலா பார்க்க**

**குளிக்க முடிந்தது**"[57]

என்ற வெண்ணிலாவின் கவிதை, பெண்ணின் இயந்திரமயமான உழைப்பினை வெளிப்படுத்தி நிற்கின்றது.

பெண் குடும்பத்திலும், அலுவலகத்திலும் மாறி, மாறி உழைக்கும் ஓர் இயந்திரக் கருவியாக செயல்படுகிறாள். ஒவ்வொரு நாளும் ஓய்வின்றி கசக்கிப் பிழியப்படுகிறாள் என்பதை இக்கவிதையின் வழி உணரமுடிகின்றது.

இவ்வாறு கல்வியிலும், பொருளாதாரத்திலும் பெண்கள் வீட்டை விட்டு வெளியே வந்திருந்தாலும் கூட, ஆணாதிக்கச் சமூகத்தில்தான் பணியாற்ற வேண்டியுள்ளது. இதனால் வழக்கமான ஆணாதிக்கத்திற்குள் மாட்டிக் கொண்டு பெண்கள் இன்னும் தவித்துக் கொண்டுள்ளனர் என்பதை இக்கவிஞர்களின் கவிதைகள்வழி அறியமுடிகின்றது.

இரட்டை வேலைப் பளு என்கிற கொடிய சுமை உலகம் முழுமைக்கும் பெண்களைச் சார்ந்ததாகவே இருக்கின்றன.

கடமையைச் சரியாகச் செய்தாலோ, இழுத்த இழுப்பிற்கு அடிபணிய மறுத்தாலோ அவர்களின் மேலதிகாரிகளால் பெண்கள் அலட்சியப்படுத்துவதோடு தேவை இல்லாத குற்றச்சாட்டுகளுக்கும் ஆளாக நேரிடுகிறது.

57. அ.வெண்ணிலா, நீரிலலையும் முகம், ப.12.

வேலைக்குப் போகும் பெண்களின் நடை, உடை, நடத்தை ஆண்களால் கிண்டலடிக்கப்படுகிறது. போக்குவரத்துப் பொது வாகனங்களில் இடி மன்னர்களின் துன்புறுத்தல்களுக்கும் ஆளாக நேரிடுகிறது.

மாதவிலக்குத் தொல்லைகள், போதிய கழிப்பிட வசதியின்மை போன்றவையும் பிரச்சினைக்குரியதாக இருக்கிறது.

உள்ளாட்சி நிர்வாகங்களில் பெயரளவிற்குப் பெண்கள் பொறுப்புக்களில் இருக்கிறார்கள். நடைமுறை செயற்பாடுகள் அனைத்தையும் இப்பெண்களின் குடும்ப ஆண்களே செய்கின்றனர். தனித்துச் செயற்பட முடியாத அளவிற்குக் கட்டுப்பாடுகளை விதிக்கின்றனர்.

சிலவகை வேலைகளுக்குப் பெண்கள் அனுமதிக்கப்படுவதில்லை. அவை ஆண்களுக்கு மட்டுமே உரியதானதாகக் கருதப்படுகின்றன.

அரசுப் பணியைத் தவிர பிற இடங்களில் இரு பாலரும் ஒரே மாதிரியான வேலையைச் செய்த போதிலும் சமமான ஊதியம் வழங்கப்படுவதில்லை.

பெண்களுக்கென்று தனியாக உணவருந்தும் இடங்கள், கழிப்பறைகள், ஓய்வறைகள், போக்குவரத்து வசதிகள் ஆகியவற்றை முறையாகப் பல நிறுவனங்கள் செய்து தருவதில்லை.

இவ்வாறு பணியிடங்களில் பாலியல் வேறுபாடுகளைப் பெண்கள் எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது.

## 2.22.விலை மகளிரும் ஆண் சமூகமும்

மானிடச் சமுதாயத்தில் நடக்கும் பல குற்றங்களுக்கு வறுமையும் ஒரு காரணமாக இருந்து வருகின்றது. வறுமையின் பிடியிலிருந்து மீளவே கொலை, கொள்ளை, வழிப்பறி, பரத்தமை போன்ற சீர்கேடுகள் நடந்து வருகின்றன. மேலும், பெண்ணை ஆபாசமாகவேப் பார்த்துப் பழகிவிட்ட வக்கிரக் குணம் கொண்ட

ஆணினத்தின் வற்புறுத்தலாலும், பாலியல் வேட்கைகளினாலும் சுயத்தை இழந்த பெண்கள் பாலியல் தொழிலாளர்களாக ஆக்கப்படுகிறார்கள்.

"அப்பா ரயில் விபத்தில்
இறந்த போது
அம்மா நகைகளை விற்றாள்
அப்புறம் காய்கறி விற்றாள்
தலையில் சுமந்து விறகு விற்றாள்
பிறகு?
கற்பை விற்றாள்!
எங்களுக்கு
கால் வயிறு நிரம்பியது"[58]

என்ற சிற்பியின் கவிதை, கணவனை இழந்த மனைவி தன் பிள்ளைகளை வளர்க்க, தாய் பரத்தையான சோகத்தைச் சுட்டிக்காட்டுகின்றது.

பெண்களின் பலவீனங்களை ஆண்கள் பலமாக்கிக் கொண்டு ஒவ்வொரு சூழ்நிலையிலும் சீரழித்தே வருகின்றார்கள். அந்த அடிப்படையில் பெண் பாலியல் தொழிலாளியின் கொடுமையை,

"படுக்கைச் சந்தையில்
இரவிலும்
பகலிலும்
புழுங்கிப் புழுங்கி
இனிமேலும்
செல்லுபடியாகாத பிறகு

58. சிற்பி, சிற்பி கவிதைகள் - தொகுதி -1, ப. 464.

***அந்த நாணயம்”*** [59]

என்ற வைரமுத்துவின் கவிதை வருத்தத்தோடு எடுத்துரைப்பதாக உள்ளது. இதில் செல்லாத காசு என்பது எதற்கும் பயன்படாததோடு, யாருக்கும் பெருமை சேர்ப்பதில்லை. அதைப் போலவே இளமை, அழகு எல்லாம் பாலியல் சந்தையில் சுரண்டப்பட்டு செல்லாத மனுசிகளாக ஆகிக் கொண்டிருக்கும் சமூகக் கொடுமையைக் கவிஞர் வைரமுத்து ஆதங்கத்தோடு வெளிப்படுத்தியுள்ளார்.

வாழ்க்கையின் தொடக்கம் முதல், இறுதி வரையில் சடங்குகள் என்ற பெயரில் ஆண்கள், பெண்களைச் சிறைகொண்டு அடிமைப்படுத்தி வந்திருக்கின்றனர். அவ்வகையில் “பொட்டுக் கட்டுதல்” என்ற சடங்கின் பெயரில் ஊராரின் பாலியல் தேவையைப் பூர்த்தி செய்வதற்காகக் கோயிலுக்கு மகளைத் தானமாக எழுதிக் கொடுக்கும் சமூகக் கொடுமை இன்னும் சில கிராமப்புறங்களில் அங்கொன்றும் இங்கொன்றுமாக நடந்து கொண்டுதான் இருக்கின்றன என்பதை,

***“பூஜைக்கும் நாம்***
***பொட்டுக்கட்ட நீ என்று***
***விதித்தோம்”*** [60]

என்ற அப்துல் ரகுமானின் கவிதை எடுத்துரைக்கின்றது. மதங்கள் மற்றும் மதச்சடங்குகள் ஆண்களின் கட்டுப்பாட்டில் இருப்பதையும், சடங்கின் பெயரில் ஒரு பெண்ணிடம் நிகழ்த்தும் பாலியல் சுரண்டல் என்னும் சமூக விரோதச் செயலையும் இக்கவிதை விளக்கி நிற்கின்றது.

இவ்வாறு, “விலைமகளிர்” என்ற தலைப்பில் அமைந்த நா.காமராசனின் கவிதையின் பொருளைச் சிதைக்காமல் அதனைப் பின்வருமாறு கூறலாம். “கற்புச் சிறையை அடிக்கடி உடைப்பதற்காகக் கைது செய்யப்படும் விலைமகள் அவள். அவளின் இதழ்களின் அமுதத்தைச் சுவைத்து மகிழ்வதற்குத் தான் காமுகர்களிடையே

---

59. வைரமுத்து, திருத்தி எழுதிய தீர்ப்புகள், ப. 100.
60. அப்துல் ரகுமான், கவிக்கோ கவிதைகள், ப. 288.

எத்தனை போட்டி? அவள் பாவம், ஆடைகள் வாங்குவதற்காகத் தனது நிர்வாணத்தை விற்பனை செய்கிறாள். செயற்கையாக ஆடவர்களை நோக்கி அவள் புன்னகைத்தே ஆக வேண்டும். அவள் கண்களின் கண்ணீர்த் துளிகள் அவ்வப்போது மறைகின்றன. அவள் ரோஜாப் பூவாகத்தான் இருக்கிறாள். பறிப்பவர்களின் கரங்களில்தான் முள் முளைத்திருக்கிறது. சமூகத்தில் உடல்பசி கொண்டவர்களுக்கு அவள் உணவாகிறாள். அவளது சாம்ராஜ்யத்தில் என்றைக்கும் அஸ்தமனம் இல்லை என்பதை,

"நாங்கள் ரஜனியின் மக்கள்
மன்மதனின் ஒற்றர்கள்
கற்புச் சிறையை உடைப்பதால்
கைது செய்யப்படுகிறோம்
பாற்கடல் அமுதத்தை தேவர்கள் சுவைத்து
விட்டதால்தான்
எங்கள் இதழ் அமுதத்தை அரக்கர்களுக்கு வழங்குகிறோம்
எங்களுடைய நீதிமன்றத்தில்தான்
ஒழுக்கம் தண்டிக்கப்படுகிறது
நாங்கள் நிர்வாணத்தை விற்பனை செய்கிறோம்
ஆடை வாங்குவதற்காக"[61]

என்று ஒரு விலைமகளின் சுயசரிதை போன்று இக்கவிதை அமைந்திருக்கின்றது.

விலைமகளிர் தங்களுக்கு ஏற்பட்டுள்ள பொருளாதாரச் சிக்கலை எதிர் கொள்வதற்காக நாங்கள் விலைமகளிராக மாறுகின்றோம் என்கின்றனர்.

"நாங்கள் பசியின் குழந்தைகள்
எங்கள் முதலிரவிலும்கூட

61. நா.காமராசன், கறுப்பு மலர்கள், ப. 85.

**வேர்வைப் பன்னீர்தான் தெளிக்கப்படுகிறது**

**நாங்கள் அடிமைகள்**

**அதனால்தான்**

**எங்கள் சாம்ராஜ்யத்தில்**

**சூரியன் உதிப்பதுமில்லை**

**அஸ்தமிப்பதுமில்லை**"[62]

என்று நா.காமராசன் தமது கவிதையின்வழி, விலை மகளிரின் சிக்கல்களைப் படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

மானிடச் சமுதாயத்தில் வறுமையால் வஞ்சிக்கப்பட்ட பெண்கள், விலை மகளிராக ஆக்கப்படுவதை,

"**இமையில் கண்ணீரும்**

**இதயத்தில் இரத்தமும்**

**உறைந்து போன**

**நெடிய இரவுகள்**

.................. ...........

**இனிமேலாவது**

**அவனைக்**

**கொஞ்சம் தூங்கவிடுங்கள்**"[63]

என்ற கவிஞர் சிற்பியின் கவிதை தெளிவுபடுத்துகிறது. ஆண்களின் பாலியல் வேட்கையால் சூறையாடப்பட்டு, சுயமரியாதையை இழந்து, கடைசியில் புகலிடமாகப் பாலியல் விடுதிகளில் தஞ்சம் புகுந்த பெண்களின் அவலங்களில் இருந்து, ஆணாதிக்கக் கட்டமைப்பையும், பெண்ணடிமைத் தனத்தையும் அறியமுடிகின்றது.

62. மேலது, ப. 87.
63. சிற்பி, சிற்பி கவிதைகள்-தொகுதி 1, ப. 400.

## 2.23.வக்கிர ஆண்களும் விலைமகளிரும்

ஆண்கள் தங்களின் வக்கிர உணர்வுகளால், சுயக்கட்டுப்பாட்டை இழந்து விலை மகளிரை நாடும் சமூக ஒழுங்கீனத்திற்கு அவர்களின் உயர்வு மனப்பான்மையே காரணமாகிறது. பெண்களிடம் எதிர்பார்க்கும் ஒழுக்கக் கட்டுப்பாடுகளை, இச்சமூகம் ஆண்களிடம் எதிர்பார்க்க மறுத்ததால்தான் பெண்ணடிமைத் தனத்தைப் பேணும் ஆணாதிக்கப் போக்கு வலுப்பெற்றிருக்கிறது.

ஆண்களின் காமவேட்கையினால் சூறையாடப்பட்டவர்களும், பொருள் ஆதாரமற்று வறுமையின் கொடுமையிலிருந்து தன்னைக் காக்க முயன்றவர்களும், விலை மகளிராகப் பலிகடா ஆக்கப்படும் இச்சமூக அவலத்தை,

"இவர்கள் இறந்தால்

எரித்துவிட வேண்டுமாம்

எந்தக் காரணம் கொண்டும்

புதைக்கக் கூடாதாம்'

குழிதோண்டியாவது

பக்கத்தில் படுத்துக்

கொள்வார்களாம்"[64]

என்று தாமரையின் கவிதை விளக்குகிறது. பெண்ணைப் பிணமாகப் பார்த்தால்கூடப் புணர நினைக்கின்ற ஆண் வர்க்கத்தின் வக்கிர மன நிலையைத் தாமரையின் கவிதை வரிகள் சாடுவதாக அமைந்துள்ளது.

மேலும் பெண்ணின் மீது ஏற்பட்டுள்ள தீராத காம வேட்கையைத் தீர்த்துக் கொள்ள நினைக்கும் வக்கிர குணம் கொண்ட ஆணின் நிலையை,

"நான் பேராசைக்காரன்தான்

---

64. தாமரை, மு.நூ., ப. 65.

**பொய்யல்ல..**

**இதற்குமுன்**

**எந்தப் பெண்ணையும்**

**ஏறெடுத்துப் பார்த்ததில்லை**

**உன்னைப் பார்த்த பிறகு**

**எதிரில் வரும்**

**எந்தப் பெண்ணையும் விடுவதில்லை"[65]**

என்று கவிஞர் மீரா சுட்டிக்காட்டியுள்ளார்.

இவ்வாறு விலை மகளிர் தங்களின் வறுமையைப் போக்கிக் கொள்வதற்காக ஆண் வர்க்கத்தின் பாலியல் தேவைகளைப் பூர்த்தி செய்கின்ற அடிமையாகவே இருந்து வருகிறார்கள் என்பதை இக்கவிதைகள் உணர்த்தி நிற்கின்றது.

## 2.24.விலைமகனும் விலைமகளும்

ஆண், பெண் இருவருக்கும் ஒழுக்கம் என்பது பொதுவான ஒன்றாக இருக்கும்போது, தகாத பாலியல் நடத்தை கொண்டிருக்கும் பெண் விமர்சிக்கப்படுகிறாளே ஒழிய, தகாத பாலியல் உறவு கொண்டிருக்கும் ஆண் விமர்சனங்களுக்கு அப்பாற்பட்டவனாக இருக்கிறான் என்பதை,

**"உதயகுமாரர்களுக்குத்**

**தங்கள் உடல்களையே**

**அட்சய பாத்திரமாக்கித்**

**தம் வயிற்றுப் பசியைத்**

**தணித்து கொள்ளும்**

**மணிமேகலைகள்"[66]**

65. மீரா, கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள், பக். 41-42.
66. அப்துல் ரகுமான், பால்வீதி, ப. 52.

என்ற அப்துல் ரகுமானின் கவிதை சுட்டிக்காட்டுகின்றது. காமப் பசியோடு வரும் வக்கிர குணம்கொண்ட ஆண்கள் உதயகுமாரர்களாகவும், ஆண்களின் சிற்றின்பத் தேவைகளைப் பூர்த்தி செய்யத் தயாராக இருக்கும் பாலியல் தொழில் செய்யும் பெண்கள் மணிமேகலைகளாகவும் சித்தரிக்கப்பட்டுள்ளார்கள். மேலும், விலைமகன் பற்றியும், விலைமகள் பற்றியும் கூற வந்த கவிஞர்,

***"உனக்கும் எனக்கும் அவளுக்கும்***

***நிர்வாணம் தான் பளபளப்பான ஆயுதம்***

***குருதியின் வியர்வையில் நனையும்போதெல்லாம்***

***ஒரு பயிற்சியின் முழுமையை அடைகிறது"***[67]

என்று தன் கவிதையின் மூலம் விலைமகன் மற்றும் விலைமகளின் முறையற்ற பாலியல் வாழ்க்கையினைப் படம்பிடித்துக் காட்டுகிறார். விலைமாதர்களின் பாலியல் வேட்கையை,

***"காமுக ஜோடிகள்***

***தசைகளில் செதுக்கிய***

***முகங்களைக் கொண்டு***

***தங்கள்***

***கபாலம் தெரியாமல்***

***மூடுகின்றனர்.***

***கொடுக்கல் வாங்கலற்ற***

***பொருளாதாரத் தன்னிறைவின்***

***பனிக்கல் படுக்கையில்***

***புணர்கின்றனர்"***[68]

67. குட்டி ரேவதி, தனிமையின் ஆயிரம் இறக்கைகள், ப. 45.
68. காலசுப்பிரமணியம்(பதி.ஆ.), பிரமிள் கவிதைகள், ப. 216.

என்று கவிதைபடுத்தியுள்ளார் பிரமிள். இக்கவிதை வரிகள் பாலியல் தொழில் செய்யும் முறையற்ற காமுக ஜோடிகளின் நிலையினை எடுத்துக்காட்டுவதாய் அமைந்துள்ளது என்பதை அறியமுடிகின்றது.

இவ்வாறு முறையற்ற பாலியல் ஒழுக்கத்தாரை விபச்சாரிகள் என்று அழைக்கும் இச்சமூகம். அதே நடத்தை கொண்டிருக்கும் ஓர் ஆண்மகனை இது போன்ற அவமானத்திற்குறிய அடைமொழிகளால் அழைப்பதில்லை. ஒழுக்கம் என்பது மானுடச் சமுதாயத்தில் இருபாலருக்கும் பொதுவாக இருக்கும்பட்சத்தில் பெண் அடிமைகளாகவே இருக்கவேண்டும் என்பதற்காகக் "கற்பு" வலியுறுத்தப்பட்டிருப்பதை உணரமுடிகின்றது.

ஆண்கள் தனக்கு ஏற்படும் காமவேட்கையால் விலைமகளிரைத் தேடிச் செல்கின்றனர். விலை மகளிரும் தங்களுடைய வயிற்றுப் பசியைப் போக்கிக் கொள்வதற்காக, ஆண்களின் காம இச்சைக்கு ஆளாகின்றனர் என்பதை,

*"அவர்கள் என் ஆடைகளைக் களையும்போது*

*வெட்கப்படுவது போலவும்*

*உச்சத்தில் முனகுவது போலவும்*

*நான் பாவனை செய்தாக வேண்டும்"*[69]

என்ற கவிதை, விலை மகளிரின் விருப்பமில்லாத பாலியல் தொழிலை வெளிப்படுத்தி நிற்கின்றது.

மேலும், விலைமகளிரைப் புணர வந்த ஆண் தன்னுடைய காமப் பசியைப் போக்கிக் கொள்கிறான். அந்த ஆணின் காம இச்சையைத் தீர்த்த அந்தப் பெண் எந்தக் கூடலிலும் கருத்தரிக்க முடியாது என்பதையும் கவிஞர் சுட்டிக்காட்டியுள்ளார்.

69. சுகிர்தராணி, காமத்தீப்பூ, ப.22.

"தாண்டவம் முடிந்தும்

தனியாக் காமத்துடன்

நெருங்கும்

ருத்ரனிடம்

அலுத்துக் கொண்டாள்

உமை

எந்தக் கூடலிலும்

கருத் தரிக்க முடியாத

தன் கன்னிமை வரம்

குறித்து"[70]

என்று கலாப்ரியா தன் கவிதை வழி விலை மகளிரின் கருத்தரிக்க முடியாத நிலையை எடுத்துக் கூறியுள்ளார்.

இவ்வாறு பெண்கள் தங்களுக்கு ஏற்பட்டுள்ள வறுமையைப் போக்கிக் கொள்வதற்காகப் பாலியல் தொழிலில் ஈடுபடுகின்றனர். இதனால் ஏற்படும் சிக்கலை,

"பாருங்கள்'

இந்தப் பாலுறவு விபத்து

கருவறைகளின்

சுவாசப் பைகளாயிருந்த

பள்ளியறைகளையே

கல்லறைகளின்

இரைப்பை யாக்கிவிட்டதே

பெண்ணே!

70. கலாப்ரியா, தண்ணீர்ச் சிறகுகள், ப. 40.

**ஆசைப் பயிர் வளர்க்க**

**ஆயுளை உரம் கேட்கும்**

**நிலங்கள் எதற்கு...?**

**நிராகரி!"**[71]

என்று கவிஞர் தன் கவிதை வழி விலைமகளிர்க்கு எடுத்துக் கூறுவதாய் இக்கவிதை அமைந்துள்ளது.

மேலும் காமப் பசியைப் பொறுத்துக் கொள்ள முடியாத இளைஞன், தன்னுடைய பசியைப் போக்கிக் கொள்வதற்காக விலை மகளிரை நாடுகின்றான். அவனது இந்தச் செயலானது தவறு என்பதை உணர்ந்த கவிஞர்,

**"இளைஞனே**

**நீ**

**இராமனாயிருந்தால்**

**காத்திருப்பது சீதை**

**காமனாயிருந்தால்**

**காத்திருப்பது சிதை!**

**உன்னவள் விருந்தெனில்**

**உடற் பசிக்கு உயிர் அருந்தும்!**

**கண்டவள் விருந்தெனில்**

**உடற் பசி உயிரையே அருந்தும்"**[72]

என்று கவிதையின் வாயிலாக எச்சரிக்கின்றார். விலை மகளிரை நாடும் இளைஞனுக்கு உடற் பசியை விட உயிர் முக்கியம் என்பதைக் கவிஞரின் இக்கவிதை வரிகள் புலப்படுத்தி நிற்கின்றன.

---

71. நெல்லை ஜெயந்தா, தென்றலோடு சில தினங்கள், ப. 21.
72. நெல்லை ஜெயந்தா, தென்றலோடு சில தினங்கள், ப. 21.

**இவ்வாறு விலை மகளிரின் பொருளாதாரச் சிக்கல்களையும், அதனால் அவர்களுக்கு ஏற்படும் மன வேதனைகளையும், இளைஞனின் வக்கிர எண்ணத்தையும் மேற்கண்ட கவிஞர்களின் கவிதைகள் உணர்த்தி நிற்கின்றன.**

## 2.25.முடிவுரை

- "பணிக்குச் செல்லும் பெண்கள் எதிர்கொள்ளும் சிக்கல்கள்" என்னும் இவ்வியலில் பெண்கள் தற்சார்பு அடைய வேண்டியதன் இன்றியமையாமையை அறியமுடிகின்றது.

- பெண்கள் தற்சார்பினை அடைவதற்குப் பொருளாதாரம் ஓர் அடிப்படை என்பதும், அதனை அடைய தொழில், அலுவலகப் பணிகள் முதலியவற்றைப் பெண்கள் நாட வேண்டியுள்ளது. அவ்வாறு தொழில்களிலும், அலுவலகப் பணியிலும் ஈடுபடும் பெண்கள் எதிர்கொள்ளும் சிக்கல்கள் பட்டியலிட்டுக் காட்டப்பட்டிருப்பதைக் காணமுடிகின்றது.

- பணிநிலையில் பெண்களுக்கு ஏற்படும் சிக்கல்களையும், அதனால் அவர்கள் அடையும் மன வேதனையும், அதிலிருந்து பெண்கள் தங்களை எவ்வாறு காத்துக் கொள்கின்றனர் என்பதையும் அறியமுடிகின்றது.

- பணிக்குச் செல்லும் பெண்கள் குடும்பம், பணியிடம் என்ற இரண்டு விதமான உழைப்புச் சுரண்டலுக்கும் ஆளாகிறார்கள். அவர்களுக்கு ஏற்படும் இரட்டைப் பணிச் சுமையால் உள்ளம் மற்றும் உடல் ரீதியான பாதிப்புகளுக்கு உள்ளாவதை இக்கவிதைகள் புலப்படுத்தி நிற்கின்றன.

- கலை, இலக்கியம், திரைப்படம், இதழ்கள் போன்ற பல ஊடகங்களில் பணியாற்றும் பெண்களுக்கு ஏற்படக் கூடிய சிக்கல்களை வெளிப்படுத்துவதோடு, அதற்கான தீர்வினையும் வெளிப்படுத்தி நிற்கின்றது.

- வீட்டு வேலை செய்யும் பெண்களின் நிலையும், கட்டட வேலை செய்யும் பெண்கள் சந்திக்கும் பிரச்சினைகளும், மேற்கண்ட கவிதைகளில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

- ❖ பணிக்குச் செல்லும் பெண்கள் பேருந்துப் பயணங்களின்போது ஆண்களின் அத்து மீறல்களையும், இதனால் பெண்களுக்கு ஏற்படும் பாலியல் தொல்லைகள் பற்றியும் இக்கவிதைகளின் வழி அறியமுடிகின்றது.

- ❖ வீட்டு வேலை செய்யும் பெண்கள், வேலை செய்யும் போது, வீட்டு எஜமானியின் வன்மையான பேச்சிற்கு ஆளாக வேண்டியுள்ளது. இதனால், வீட்டு வேலை செய்யும் பெண்களின் கஷ்டங்களையும், அவர்களுக்கு ஏற்படும் மனக் குமுறல்களையும் கவிதைகளில் பதிவு செய்துள்ளன.

- ❖ கிராமப்புறங்களில் கூலி வேலை செய்யும் பெண்கள் சீண்டலுடன் கூலி பெறுவதையும், வியாபாரத் தளத்தில் பெண்கள் வாடிக்கையாளரைக் கவரும் கவர்ச்சிப் பொருளாகவே கருதப்படுவதும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

- ❖ பணிக்குச் செல்லும் பெண்களுக்குத் தங்கள் ஊதியத்தில் உரிமையற்ற நிலையையும் காணமுடிகின்றது. பணிக்குச் செல்லும் பெண்கள் தங்கள் குழந்தைகளைப் பராமரிக்க முடியாத நிலையையும், அதனால் குழந்தைகளுக்கு ஏற்படும் சிக்கல்கள் பற்றியும் விளக்கிக் காட்டப்பட்டுள்ளது.

- ❖ பணியாற்றும் பெண்களின் வீட்டில் வேலைப் பகிர்வின்மை, அவர்களின் ஓய்வின்றி உழைத்தல், உழைப்புச் சுரண்டல் போன்ற ஆணாதிக்கக் கட்டுப்பாடுகளையும் இக்கவிதைகள் வழி அறியமுடிகின்றது.

- ❖ வறுமையின் காரணமாகப் பாலியல் தொழிலில் ஈடுபடும் பெண்களின் நிலை குறித்தும் விவாதிக்கப்பட்டுள்ளது. விலை மகளிர் எதிர்கொள்ளும் பல்வேறு சிக்கல்கள் கவிதைகளின் வாயிலாகப் படம் பிடித்துக் காட்டப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

- ❖ ஆணாதிக்க வர்க்கத்தினால் பெண் பாலியல் பண்டமாகப் பார்க்கப்படுவதையும், ஆணாதிக்கத்தின் வக்கிர குணங்களையும் மேற்கண்ட கவிதைகள் விளக்கி நிற்கின்றது.

- ❖ இவ்வாறு பணிக்குச் செல்லும் பெண்கள் மீதான பல்வேறு சிக்கல்களையும், பணித் தளத்தில் ஏற்படும் பல்வேறு பிரச்சினைகளையும் தமிழ்ப் புதுக்கவிதைகள் புலப்படுத்தி நிற்கின்றன.



# இயல் - 3

# இல்லத்தரசிகள் எதிர்கொள்ளும் சிக்கல்கள்

## 3.0.முன்னுரை

இன்றைய ஆணாதிக்கச் சூழலில் வெளி வேலை செய்யும் பெண்களுக்கு மட்டுமல்லாது, இல்லத்தில் இருக்கும் பெண்களுக்கும் பல்வேறு சிக்கல்கள் ஏற்படுகின்றன. குடும்பத்தைப் பராமரித்தல் என்ற பெயரில் பெண்ணின் மீது பல்வேறு பணிகள் திணிக்கப்படுகின்றன. இதனால் ஒவ்வொரு நாளும் வீட்டில் இருக்கும் பெண்கள் வீட்டு வேலை என்ற பெயரால், எதைப் பற்றியும் யோசிக்கக்கூட நேரமின்றி வீடு என்ற சங்கிலியால் பிணைக்கப்படுகிறார்கள்.

ஓர் ஆண் வெளியே சென்று வேலை பார்ப்பதை மிகக் கடினமான உழைப்பு என்று கருதுகிறான். மாலையில் வீடு திரும்பும் அவனை மனைவி உற்சாகத்துடனும், சிரித்த முகத்துடனும் வரவேற்க வேண்டும் என்று ஆசைப்படுகிறான். வீட்டில் இருக்கும் தன் மனைவி காலையில் இருந்து மாலை வரை வேலை இல்லாமல் இருப்பதாக நினைத்துக் கொள்கிறான். இத்தகைய எண்ணம் பெரும்பாலான ஆண்களிடம் மேலோங்கிக் காணப்படுவதுதான் பெண்களுக்குத் துரதிஷ்டம். ஓர் ஆண் எப்படி வெளியே சென்று அலுவலகத்தில் எட்டு மணி நேரம் அல்லது அதற்கும் மேலாக உழைக்கின்றானோ, அதைப்போலவே வீட்டிலேயே அடைந்து கிடக்கும் பெண்ணும், கொஞ்சம் கூட ஓய்வின்றி உழைத்துக் கொண்டேதான் இருக்கிறாள் என்பதை ஆண்கள் நினைத்துக்கூடப் பார்ப்பதில்லை.

கணவனை வேலைக்கு அனுப்பி வைத்த பின்னர், அலங்கோலமாகக் கிடக்கும் வீட்டை சரிசெய்ய வேண்டிய நிர்பந்தம் மனைவிக்கு ஏற்படுகிறது. இப்படி வீட்டில் உள்ள அனைத்து வேலைகளையும் செய்து முடிப்பதற்குள் மாலைப் பொழுது வந்துவிடுகிறது. இவ்வாறு கஷ்டப்பட்டு உழைக்கும் பெண்கள், அதிக வேலைச் சுமையின் காரணமாக

சோர்வடைகிறார்கள். அவ்வாறு உழைக்கும் அவளது உழைப்பைக் கணவன் அங்கீகரிக்க வேண்டும் என்று மனைவி விரும்புகிறாள். ஆனால், அவளது இந்த ஏக்கமும், விருப்பமும் கணவனால் புரிந்து கொள்ளப்படுவதில்லை.

ஓர் ஆண் எவ்வாறு வெளியே சென்று உழைக்கிறானோ, அதே அளவு உழைப்பை ஒரு பெண்ணும் வீட்டில் செய்கிறாள். ஆனால், வெளியே செல்லாமல் வீட்டிற்குள்ளேயே இருப்பதால் அவளது உழைப்பு அங்கீகரிக்கப்படுவதில்லை. இதனால் பெரும்பாலான ஆண்கள், தங்கள் மனைவிகளுக்கு வேலையே இல்லை என்று தவறாகப் புரிந்து கொள்கிறார்கள்.

இவ்வாறு வீட்டில் இருக்கும் பெண்களுக்கு கருத்துச் சுதந்திரமின்மை, வீட்டில் பணிசெய்யும் இயந்திரங்களாக மதிக்கப் பெறுதல், சொந்த உறவுகளாலேயே பாதிக்கப்படுதல், பெற்றோரால் ஏற்படும் சிக்கல்கள் போன்ற பிரிவுகளை உள்ளடக்கி இல்லத்தரசிகள் எதிர்கொள்ளும் சிக்கல்கள் என்னும் மூன்றாவது இயல் விரிவாக ஆராய்கின்றது.

## 3.1.கருத்துச் சுதந்திரமின்மை

இச்சமூகத்தில் பெண்கள் என்னதான் கல்வி பெற்றிருந்தாலும், வீட்டில் ஏதேனும் ஒன்றைப் பற்றிக் கருத்துரைக்கும் உரிமை அவர்களுக்கு மறுக்கப்படுகிறது என்பதை,

> **"அதிகாரம் எப்பொழுதுமே, தான் அதிகாரம் செலுத்துகின்ற பொருளின் மொழியைப் பிடுங்கிக் கொள்ளுகிறது அல்லது அடக்கி வைத்து விடுகிறது. சூத்திரன் தேவபாஷையைப் பேசக் கூடாது, மீறிப் பேசினால் பேசிய நாக்கு வெட்டப்படும் என்ற மனுதர்மச் சட்டம், அடக்கமுடமை பேச வந்த வள்ளுவர் யாகாவாராயினும் நாகாக்க எனக் கூறும் கூற்று"**[1]

பெண்களுக்குக் கருத்துச் சுதந்திரம் மறுக்கப்பட்டிருப்பதை உணர்த்துகின்றது.

வர்க்க, இன, சாதிச் சுரண்டல்களுக்கு முன்னரே ஆண் - பெண் இடையே பாலியல் சுரண்டல் தோன்றியிருக்கிறது.

---

1. க. பஞ்சாங்கம், பெண்-மொழி-புனைவு, ப. 67.

"பெண்ணுக்கு அழகு எதிர் பேசாதிருத்தல்
ஊமையான மனைவி அடிபடுவதே இல்லை
பெண்ணிடம் கடைசியாகச் சாவது நாக்குதான்
ஆட்டுக்கு வாலைப் படைத்தான்
பொம்பளை சிரிச்சா போச்சு, புகையிலை
விரிச்சாப் போச்சு"[2]

என்ற சொலவடைகளும், பழமொழிகளும், பெண்ணின் பேச்சுச் சுதந்திரத்தை மறுப்பதோடு பெண்களுக்குக் கட்டுப்பாடுகளையும் விதித்திருக்கின்றது என்பதை அறியமுடிகின்றது.

### 3.1.1.ஆண்களின் முடிவு

பெண்கள், குடும்பத்திலும், வெளியிடங்களிலும் எதைப் பேச வேண்டும் என்பதை ஆண்களே முடிவு செய்கிறார்கள். ஆண்மை, கம்பீரம் என்ற பெயரில் அதிகாரத்தின் மையமாக ஆண் இருக்கத் தாயின் கனிவுடன், நடுங்கும் கைகளுடன், உணவிடும் பெண்கள், தேவைப்படும் நேரங்களில் ஆண்களை உறுதியுடன் எதிர்கொள்கின்றனர். இதனை,

"எனக்காக வார்த்தைகளை
நீ செய்கையில்
நான் தேர்கிற மௌனம்
மிக வலிமையானது
ஒரு வயோதிகப் பிச்சைக் காரனைப்
புறந்தள்ளிய அலட்சியத்துடன்
நீ நடக்கும் பொழுது
அவனுக்கு நிழல் தரும் மரத்தின்
திடத்துடன் உன்னைச் சந்திக்கும்"[3]

என்ற தமிழச்சி தங்கபாண்டியனின் கவிதை, ஆண் அதிகார மையத்தை ஆழமாகப் பதிவு செய்திருப்பதுடன், மறைமுக எச்சரிக்கையொன்றையும் விடுக்கின்றது.

2. மேலது.
3. தமிழச்சி தங்கபாண்டியன், வனப்பேச்சி, ப.64.

இவ்வாறு குடும்பத்திலும், குடும்பத்திற்கு வெளியிலும் சமமற்ற நிலையில் ஒரு பக்கச் சாய்வுடன் கூடிய மதிப்பீடுகளை எதிர்கொண்டு வாழ வேண்டியிருக்கிறது. இவ்வாழ்க்கையானது பெண்ணுக்குப் பெருஞ்சுமையாக இருக்கிறது. ஆனாலும், ஆணும் பெண்ணும் அருகருகே அல்லது ஒருங்கே இருந்துதான் வாழ வேண்டியிருக்கிறது. இந்நிலையை,

***"முற்றிலும் புதிதாய்ச்***
***சற்றுமுன் சமைக்கப்பட்ட சூடான***
***பதத்திற்கான தயாரிப்புடன்***
***நமக்கான உரையாடலைத்***
***தொடங்குகிறேன்***
***உணவின் எச்சமென***
***நீ அதற்கு முற்றுப்புள்ளி வைக்கிறாய்"***[4]

என்று ஒரு பெண், தன்னுடைய நிலை குறித்து ஓர் உரையாடலின் வழியாக எடுத்துரைப்பதாக இக்கவிதை உணர்த்துகின்றது.

## 3.1.2.இல்லற வாழ்க்கையில் பெண்ணின்நிலை

திருமணம் என்ற நிகழ்ச்சி, பெண்ணைத் தன் தாய் வீட்டிலிருந்து பெயர்த்து, இன்னொரு புதிய சூழலில், புகுந்த இடம் என்ற கணவன் வீட்டில் தன்னை முழுவதுமாக என்ற தருமத்தில் அவளைப் பணிப்பதாகவே ஆயிற்று. அவள் தன் பெற்றோர், பிறந்த இடம், தன் உணர்வுகள் எல்லாவற்றையும் தியாகம் செய்பவளாகிறாள். இவ்வாறு திருமணமாகி, கணவன் வீட்டுக்கு வந்த பிறகு மனைவிக்கு ஏற்படும் துன்ப நிலையை,

***"பாவம் மனைவி***
***இந்த***
***இல்லறக் கிரிக்கெட்டில்***
***கட்டிலறைக்கும்***
***சமையலறைக்கும்***
***ரன்கள் எடுத்தெடுத்தே***

4. மேலது, ப. 73.

*ரணமாய்ப் போனாள்"*[5]

என்ற கவிதையில் எடுத்துரைத்துள்ளார் கவிஞர் வைரமுத்து. திருமணத்திற்கு முன்பு பெண்ணின் உடல் இருந்த நிலையும், திருமணத்திற்குப் பின்பு, குடும்பச் சுமைகளை ஏற்றபிறகு அப்பெண்ணின் உடல் நிலையையும் குறித்து இக்கவிதை உணர்த்தி நிற்கின்றது.

### 3.1.3.முன்னேற்றத் தடை

குடும்பம் என்ற அமைப்பைக் கொண்டு செல்பவர்களாகக் கணவன், மனைவி இருவரும் இருந்தாலும், பெரும்பாலும் மனைவியே குடும்பச் சுமையால் பாதிப்புக்கு ஆளாக நேர்கிறது. குறிப்பாகத் தன் முன்னேற்றத்தை அவள் இழக்க வேண்டியுள்ளது.

*"இன்று நான்*
*உன்னிடம் தோற்றுப்போனேன்!*
*மனைவி மக்கள் உவகையுற*
*சிறந்த விஞ்ஞானிக்கான*
*தேசிய விருதை நீ பெற்றாய்!*
*ஆனால் நான்'?*
*கணவனின் நோயாளித் தந்தைக்குச்*
*சிறந்த செவிலி!*
*கண்ணான செல்வங்களுக்கு*
*உன்னதத் தாய்!*
*உடல்சார்ந்த பணிகளுக்கு என்னையே*
*சார்ந்து நிற்கும் ஆணின் ஆதர்ச மனைவி!*
*ஆரம்பப் பள்ளி ஆசிரியருக்கா*
*பள்ளி விருதை பெறவில்லை"*[6]

என்னும் இக்கவிதை பெண் குடும்பத்திற்காகத் தியாகம் செய்யும் செயல்களைக் கூறுவதாக அமைகின்றது. இவ்வாறு பெண்களின் முன்னேற்றத்திற்குக் குடும்பம் ஒரு தடையாக உள்ளது என்பதை அறியமுடிகின்றது.

---

5. வைரமுத்து, திருத்தி எழுதிய தீர்ப்புகள், பக்.18-19.
6. வத்ஸலா, சுயம், ப.16.

### 3.1.4.பெண்ணுரிமை மறுக்கப்படல்

இச்சமூகத்தில் ஆண்களுக்கு வழங்கப்படும் உரிமைகளில் பாதியளவுகூட பெண்களுக்கு உரிமைகள் வழங்கப்படுவதில்லை. குடும்ப அமைப்புகள் மென்மேலும் பெண்களை அடிமைப்படுத்தவே செய்கின்றன. ஆணும் பெண்ணும் இணைந்து வாழ்வதற்குச் சமூகத்தால் ஏற்படுத்தப்பட்ட விதிமுறையே திருமணமாகும். இத்திருமணம் பெண்ணின் சுய வெறுப்பு, விருப்புகளுக்கு அப்பாற்பட்டதாகவே உள்ளது. இதில் பெற்றோரின் விருப்பமே முதன்மைப் படுத்தப்படுகின்றன என்பதை,

***"அப்பா சொன்னாரென***
***பள்ளிக்குச் சென்றேன்***
***தலைசீவினேன், சில***
***நண்பர்களைத் தவிர்த்தேன்,***
***சட்டைபோட்டுக் கொண்டேன்,***
***பல்துலக்கினேன், வழிபட்டேன்,***
***கல்யாணம் கட்டிக்கொண்டேன்,***
***காத்திருக்கிறேன்***
***என் முறை வருமென்று"***[7]

என்ற கனிமொழியின் கவிதை விளக்குவதோடு, பெண்களுக்கான உரிமைகள் மறுக்கப்பட்டு, ஆணாதிக்கத்தால் பெண்கள், குடும்ப அமைப்புகளுக்குள் சிறைபடுவதை உணர்த்துகின்றது.

இவ்வாறு திருமணத்திற்குப் பின்பு பெண்கள் புகுந்த வீட்டில் சம்பளம் இல்லாத கூலிப் பணிப்பெண்களாக இருக்க நேரிடுகின்றது.

***"வம்சம் வளர்க்க***
***பெருக்க, பொங்க,***
***விளக்கேற்ற,***
***கழுவ, துவைக்க***
***பூத்தொடுக்க,***
***துணையாய் வருவாள்***

7. கனிமொழி, கருவறை வாசனை, ப. 16.

**மருமகப்பொண்ணு"[8]**

என்ற கவிதை, திருமணமாகி புகுந்த வீட்டிற்குச் செல்லும் பெண்கள் குடும்பச் சுமைகளை ஏற்று ஊதியமில்லாத வேலைக்காரியாகச் செயற்படுவதைக் கனிமொழியின் கவிதை உணர்த்தி நிற்கின்றது.

## 3.1.5.பெண்மனம்

காலங்காலமாக அடக்கப்பட்டிருக்கும் பெண்தான் காலங்காலமாகப் பழி சுமத்தப்படுபவளாகவும் இருக்கிறாள். பாட்டி காலத்திற்கும், கணினி காலத்திற்கும், பெரிய வித்தியாசமில்லை. படிப்பு அவளுக்குச் சுதந்திரத்தை ஊட்டவில்லை. படித்தாலும் அடங்கி, அதிர நடக்காதவள்தான் படுபுத்திசாலியாகப் புகழப்படுகிறாள் என்ற ஆதங்கத்தை, உணர்வின் சுவாசங்களுக்குள் ஏற்பட்ட வெக்கையைத் தாங்க முடியாத பெண்மனம், கவிதை வரிகளாக உருமாறியிருக்கிறது.

**"கணவனைத் தொழும் பெண்கள் வாழும்**
**நாட்டிலே மாமழை பொய்க்காது**
**என்றாராம் பொய்யாமொழிப் புலவர்**
**பாட்டியின் கணவர்**
**எப்போதும் சொல்லுவாராம்**
**சிரத்தையும், பக்தியும்**
**பெண்ணிடம் இருந்தால்**
**வீடு துலங்கும்**
**வளங்கள் கொழிக்கும்**
**விறகுமூடி வெந்து விழும் வரை**
**பாட்டி வாழ்ந்தாள்**
**எல்லா பக்திகளுடன்"[9]**

என்ற கவிதையின் வழி ஆண்டாண்டு காலமாக எதிர் பேசாமல் இருக்கும் பெண்களின் நிலையினைக் கனிமொழி எடுத்துரைத்துள்ளார்.

---

8. கனிமொழி, கருவறை வாசனை, ப.19.
9. கனிமொழி, சிகரங்களில் உறைகிறது காலம், ப. 64.

### 3.1.6.உழைப்புச் சுரண்டல்

திருமணத்திற்குப் பின்னர்தான் ஒரு பெண்ணின் உழைப்பு அதிகமாகச் சுரண்டப்படுகிறது. இந்தச் சமையலறை அடிமைகளின் சாதனைப் பட்டியலைக் கவிஞர் ஆண்டாள் பிரியதர்ஷினி எள்ளல் தொனிக்கச் சுட்டிக்காட்டியுள்ளார்.

*"மூணு முடிச்சுக்குப் பின்*
*................*
*ஊடலும் கூடலும்*
*கோபமும் தாபமும்*
*புளி கரைப்பதும்*
*தயிர் உறை ஊற்றுவதும்*
*மாசத்திற்கு*
*முன்னூறு தோசை சுடுவதும்*
*மாதாந்திர அல்லாட்டமும்*
*குறிக்கும் அளவுக்குச் சாதனையா?"*[10]

என்ற கவிதையின் மூலம், திருமணத்திற்குப் பின் இல்லத்தரசியானவள், சமைத்தல், விருந்தோம்பல் தொடர்பான குடும்பச் சிறையின் அனுபவங்களைப் பெற்றிருக்கிற பெண்கள், உலக அனுபவங்களை இன்னும் பெறாமலேயே குடும்பத்திற்குள் அவர்களது உழைப்பு சுரண்டப்பட்டும், ஆணாதிக்கச் சக்திகளுக்குக் கட்டுப்பட்டும், வாழ்ந்து வருவதை இக்கவிதை படம்பிடித்துக் காட்டுகிறது.

### 3.1.7.வீட்டு மனைவி

பெண்கள், ஆண்களுக்கு இணையாகச் செயல்பட இயலாமல் போவதற்குச் சமூகச் சூழலே காரணமாக உள்ளது. ஆண், பெண் என்ற பிரிவை மையப்படுத்திப் பணிப் பங்கீடு வரையறை செய்யப்பட்ட நிலையில் பெண்ணுக்கு வீட்டுப் பொறுப்பு மட்டும் என்ற எல்லை ஏற்படுத்தப்பட்டுள்ளது. வீட்டு மனைவி என்ற பட்டத்தோடு இருக்க வேண்டிய நிலை உள்ளது. கணவனின் அதிகாரப் பேச்சிற்கு அடங்கிப் போகும் நிலையும் உள்ளது.

---

**10.** ஆண்டாள் பிரியதர்ஷினி, தோகையெல்லாம் துப்பாக்கிகள், ப. 49.

"ஒலிக்குறிகளும் தலையசைப்புகளுமே
அன்றாடத் தேவைகளுக்குப் போதுமானதாக'
அதிகம் போனால்
ஒன்றிரண்டு வார்த்தைகளும்'
உப்பு ஒரு கல் தூக்கல் என்று
ஊர் கேட்க இரைச்சல்
ஒரு கல் குறைச்சல் என்று
பரம்பரையின் சொரணையில் சந்தேகம்
சுட்டுவைத்த இட்டலிகளை
விட்டெறிந்த வீரம்
வீரவசவுகளில் தப்பாது
யார் அப்பன் வீட்டுச் சொத்து'
எரிகிற தீயும் என் நாவும் ஒன்றாய்'
முப்பது வருட இரைச்சல் எரிமலையின்
எதிரொலி மட்டும் எப்படி
நிசப்த சாம்பல்'?"[11]

என்ற தாமரையின் கவிதை, முப்பது வருட காலமும் வசவுகளை வாங்கிக் கொண்டு எதிர்பேசா மடந்தையாக பெண் இருக்கிறாள் என்பதைப் புலப்படுத்துகின்றது.

இவ்வாறு குடும்பங்களில் மனைவிமார்களைப் பாலியல் சுகம் தரும் பதுமைகளாகப் பாவிக்கும் ஆணாதிக்கக் குடும்பத் தலைவனின் சிந்தனையை,

"பாரடி பெண்ணே
எம்
பாரத புத்திரிகள்
ஏதோ ஒன்றுக்காய்
இரவில் பெண்ணாக
பகல் வாழ்க்கையெல்லாம்
பாழும் கல்லாகச்
சபிக்கப்பட்டிருக்கும்
சாபக்கதை அறிகுவையோ"[12]

---

**11.** தாமரை, ஒரு கதவும் கொஞ்சம் கள்ளிப்பாலும், பக். 70-71.
**12.** வைரமுத்து, திருத்திய எழுதிய தீர்ப்புகள், ப. 54.

என்று வைரமுத்து தம் கவிதைவழி சித்தரிக்கிறார். குடும்ப அமைப்பில் பாலியல் சுரண்டலுக்கும், உழைப்புச் சுரண்டலுக்கும் ஆளாகி அடிமை வாழ்க்கை வாழும் பெண்களின்நிலை இங்கு சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. ஆடவர்களின் ஆசீர்வாதத்திற்கும், சாபத்திற்கும் ஆளாகி நடைபிணமாய் வாழும் பெண்கள் அகலிகைகளாகச் சுட்டப்பட்டிருக்கிறார்கள். ஆண்களின் உடல்சார் தேவைகளுக்காக மட்டுமே பெண்களின் உடல் பயன்படுத்தப்படுவதால் அவர்களின் உணர்வுகள் அடக்கப்பட்டிருக்கின்றன என்பதை இக்கவிதை விளக்கி நிற்கின்றது.

## 3.2.வீட்டில் பணிசெய்யும் இயந்திரங்கள்

சமூகத்தில் பெண்கள் வெளியே சென்று வேலை செய்ய மறுக்கப்பட்ட காலங்களிலும், தங்களை வீட்டு வேலைகளில் முழுமையாக ஈடுபடுத்திக் கொள்கிறார்கள். எட்டு மணி நேர வேலை என்ற வரையறை இல்லாமல் சம்பளம் இல்லாத வேலைக்காரியாகப் பெண் காலம் கழிக்கிறாள். இதனை,

**"சுத்தம் முடித்து**
**துணி துவைத்து**
**சாப்பாடு முடிந்து**
**கொஞ்ச நேரம் சாய என**
**வந்தால்**
**மடிப்பதற்கான**
**காய்ந்த துணிகள்**
**உறங்கிக் கொண்டிருக்கும்**
**ஒற்றை தலையணையோடு**
**கட்டாந்தரையில்**
**உடல் சாய**
**குழந்தைகளின் காலடி ஓசை**
**உறக்கம் எழுப்பும்**
**கேட்கவே வேண்டாம் பிறகு**
**பிள்ளைகள் ~ எழுத ~ உட்கார**
**குதித்து விளையாட என**
**கட்டில் தூள் பறக்கும்"**[13]

---

**13.** அ.வெண்ணிலா, நீரிலலையும் முகம், பக். 42-43.

என்று தனது கவிதையின் வழி உணர்த்துகிறார் கவிஞர் வெண்ணிலா. இவ்வாறெல்லாம் பணி செய்யும் பலபணி குறித்த ஒரு சொல்தான் மனைவி, என்றால் மிகையன்று. ஆங்காங்கே பலபேர் தனித்தனியாகச் செய்யும் பல்வேறு பணிகளை வீட்டில் மனைவி என்ற தனியொருத்தி அன்றாடம் செய்து கொண்டிருக்கிறாள்.

இவ்வாறு வீட்டில் பணி செய்யும் பெண்கள் இயந்திர வாழ்க்கை வாழ்வதைப் பார்த்த, அமெரிக்காவின் சிக்காக்கோ பல்கலைக்கழகத்தைச் சார்ந்த பெக்கர், ஷீல்ஸ் ஆகியோர் "புதிய வீட்டுப் பொருளாதாரம்" என்ற பெயரில் ஒரு கோட்பாட்டை உருவாக்கியுள்ளனர். அவை,

> "புதிய வீட்டுப் பொருளாதாரக் கோட்பாட்டின் படி ஓய்வு நேரம் (குறிப்பாகப் பெண்களின் ஓய்வு நேரம்) 1.வீட்டு உற்பத்தி வேலை. 2.ஓய்வு நேரம் என்று இரண்டாகப் பிரிக்கப்பட வேண்டும் என்பர்."[14]

இக்கோட்பாடானது, வீட்டு வேலைக்கு ஊதியம் மதிப்பிட வேண்டும் என்பதை வலியுறுத்துகிறது. ஊதிய மதிப்புள்ள வேலைகளைச் செய்யும் மனைவியானவள் சம்பளம் எதுவும் பெறுவதில்லை. இதனைக் கண்டிக்கும் பெண்ணியவாதிகள் வீட்டு மனைவியின் வேலைப் பளுவை வெளிச்சமிட்டுக் காட்டத் தொடங்கிவிட்டனர். இன்றைய நிலையில் பல வீடுகளில் மனைவிமார்கள் சம்பளம் இல்லாத வேலைக்காரிகளாகவே வாழ்ந்து வருவதைக் காணமுடிகின்றது.

குடும்பப் பெண்களின் சுமைகளைப் பற்றிக் கூறவந்த வெண்ணிலா, அவர்கள் அழுக்குத் துணிகளைத் துவைக்கவும், பாத்திரங்கள் விளக்கவும், சாப்பாடு சமைக்கவும், வீட்டைப் பெருக்கி முடித்தவுடன் பொழுது முடிந்து விடும் என்பதை,

> "உன் அழுக்குச் சட்டைகளின்
> குவியல்களுக்குள்
> உட்கார்ந்து கொண்டிருக்கிறேன்
> இவ்வளவு நேரம்
> விளக்கித் துடைத்தாயிற்று

14. க.பஞ்சாங்கம், மு.நூ., ப. 180.(எடுத்தாளப்பெற்றது).

**பாத்திரங்களை**
**நம் இரைப்பைகளை நிரப்பப்**
**பொங்கியும் வைத்தாயிற்று**
**ஆச்சு**
**இன்னும் பெருக்கி நிமிர்ந்தால்**
**முடிந்துவிடும்**
**இரவு**
**கட்டில் இருட்டில் பார்த்து தான்"**[15]

என்ற கவிதையின் வழி இல்லத்தரசிகளுக்கு ஏற்படும் குடும்பச் சுமைகளைப் பட்டியலிட்டுக் காட்டுகிறார் கவிஞர்.

இவ்வாறு ஒவ்வொரு குடும்பச் சூழ்நிலையிலும் வீட்டு மனைவி என்பவள் வேலைக்காரியாகவே மதிக்கப்படுகிறாள் என்பதை,

**"மனைவி என்பவள் நல்ல வேலைக்காரியாக**
**இருக்க வேண்டும் இல்லை எனில்**
**வேலைக்காரி மனைவியாகிவிடுவாள்"**[16]

என்ற நா.காமராசனின் வரிகள், நகைச்சுவை என்ற பெயரில் பெண்களை அச்சுறுத்துவதாக அமைந்துள்ளன. வீட்டு மனைவியை வேலைக்காரி என்ற முத்திரை குத்தி, ஒவ்வொரு குடும்பப் பெண்களும் வீட்டு வேலைக்காரியாகவே நடத்தப்படுவதை இச்சமூகத்தில் இன்றும் காணமுடிகின்றது.

## 3.3.குடும்ப வன்முறையும் போர்க்குணமும்

வன்முறை என்ற சொல்லில் அதிகாரம் என்ற பொருள் இயங்கிக் கொண்டு இருக்கின்றது. வன்முறையானது பெண்களுக்கு எதிராகச் செயல்படும் ஆண்களின் அதிகாரம் என்று கொள்ளலாம். பெண்களுக்கு எதிரான வன்முறையின் பிறப்பிடம் குடும்பமாக இலங்குகின்றது. குடும்பத்தில் தொடர்ந்து பெண்ணுக்கு எதிரான வன்முறைகள் நடந்து வருகின்றன. குடும்ப வன்முறையில் மனைவியை அடித்தல், மனம் பாதிக்கும்படியாக மனைவியைத் திட்டுதல், பழி கூறுதல் போன்றவை நிகழ்கின்றன.

---

15. அ.வெண்ணிலா, மு.நூ., ப. 16.
16. நா.காமராசன், பொம்மைப் பாடகி, ப. 60.

தினந்தோறும் பெண்கள் ஆணாதிக்கத்தை எதிர்கொண்டுதான் வருகிறார்கள். மேல்தட்டு வர்க்கத்தைக் காட்டிலும், பாட்டாளி மக்களின் வர்க்கத்தில் இத்தகைய வன்முறை குறைவாக நிகழ்வதைக் காணமுடிகின்றது. பெண் உழைப்பதாலும் ஊதியம் பெறுவதாலும் அவளால் சுயமாக இயங்கமுடிகிறது.

கணவனின் கொடுமைக்கு எதிராகப் பெண்கள் வன்மம் நிகழ்த்தினால்தான் ஆணாதிக்கக் கொட்டம் அடங்கும் என்பதை,

"இன்று
உங்கள் கணவன்
இப்படி
கேவல முகவுரை
தொடங்கும் போதே
நீங்களும்
காலில் இருப்பதைக்
கழற்றி"[17]

என்ற தமிழன்பனின் கவிதை ஆணாதிக்கக் குடும்ப வன்முறைக்கு முடிவு கூறுகின்றது.

## 3.4.சொந்த உறவுகளால் பாதிக்கப்படுதல்

குடும்பத்தில் பெண்களுக்கு எதிராக ஏற்படும் வன்முறையானது கணவனின் கொடுமையாலும், கணவனைச் சார்ந்த குடும்ப உறுப்பினர்களின் தரம்தாழ்ந்த பேச்சுக்களாலும் செயல்களாலும் ஏற்படுவதைக் காணமுடிகின்றது.

குடும்பம் என்ற அமைப்பு பெண்களுக்குப் பாதுகாப்பானது என்கிற வாதம், அடிப்படையில் போலியானது. சொந்த உறவுகளாலேயே பெண்ணானவள் உடல், மன ரீதியாகப் பாதிக்கப்படுகிறாள். திருமணம் செய்து கொண்ட கணவனே ஆனாலும், மனைவியின் விருப்பத்தோடுதான் உடலுறவு கொள்ள வேண்டும் என்பது சட்டம். சமூக நீதியும் இவ்வாறாகத்தான் இருக்க முடியும். எனினும், தாலி கட்டிய உடனே பெண்ணை அடிமையாகவும், சொத்தாகவும், பொருளாகவும் கருதும் ஆணாதிக்க மனநிலையில்

---

**17.** ஈரோடு தமிழன்பன், ஈரோடு தமிழன்பன் கவிதைகள், தொகுதி-3, பக்.130-131.

உள்ள ஆண்கள், மனைவியின் மன உணர்வுக்கு மதிப்புத் தராமல் நடந்து கொள்வது பாலியல் வன்முறையாகவே கருதப்படும். இவ்வாறு தன் சொந்த உறவுகளாலேயே பெண் உடல் மற்றும் மன ரீதியாகப் பாதிப்புக்குள்ளாவதை அறியலாம்.

### 3.4.1.பெண்ணுக்கு எதிரான குடும்ப வன்முறை

சங்க காலத்தில் மயிலுக்குப் போர்வை கொடுத்த மனித நேயம் மிக்க பேகனையும், பெண்களின்மீது குடும்ப வன்முறையில் ஈடுபடும் ஆதிக்கக் கணவனையும் பற்றிக் கூறவந்த மு.மேத்தா,

"காட்டு மயிலை
தேசியப் பறவையாக்கி
கௌரவிக்கும்
இந்தியப் பேகனுக்கு
எச்சரிக்கை
காட்டு மயில்களை
இப்படி
வேதனை அம்புகளால்
வேட்டையாட வேண்டாம்"[18]

என்கின்றார். இக்கவிதை ஐந்தறிவு உயிர்கள் உள்ளிட்ட எல்லா உயிர்களிடத்தும் அன்பும் இரக்கமும் செலுத்தும் ஆணுள்ளம், மானுட வர்க்கத்தில் உள்ள பெண்களை மட்டும் துன்புறுத்தும் பிற்போக்குத் தனத்தை எடுத்துரைக்கிறது. குடும்பத்தில் பெண்ணுக்கு எதிராக வன்மம் நிகழ்த்தப்படுவதையும், இதற்கு எதிராகப் போர்க்குணம் கொள்ளாமல் இருக்கும் பெண்களின் நிலையினையும் இக்கவிதை எடுத்தியம்புகிறது.

இவ்வாறு ஆணின் வன்மங்களைத் தாங்கிக் கொண்டு சகிப்புத் தன்மையுடன் இருப்பதாலும், ஆணின் வன்மத்திற்கு எதிர்வினை புரியாமல் இருப்பதாலுமே பெண்கள் இன்னும் குடும்ப வன்முறைக்கு ஆளாகிக் கொண்டிருக்கிறார்கள் என்பதை இக்கவிதை வழி அறியலாகிறது.

18. மு.மேத்தா, அவர்கள் வருகிறார்கள், ப. 20.

## 3.4.2.தலைமுறை அடிமைகள்

பெண்ணின் அடிமைநிலை தலைமுறைகளைக் கடந்து வந்து கொண்டிருக்கிறது. குடும்பத்தில் தாயானவள் மூத்த பெண் அடிமையாகவும், மணமாகாத மகள் இளைய பெண்ணடிமையாகவும் தந்தை எனும் ஆதிக்கவாதியால் உருவாக்கி வைக்கப்பட்டிருக்கும் அடிமைத் தலைமுறையைப் பற்றி இன்னும் கண்கூடாகப் பார்க்க முடிகின்றது.

ஆண் சமூகத்தின் கட்டமைப்புக்குக் கட்டுப்பட்டு இல்லறத்தில் மரபு சார்ந்த பணிகளைச் செய்து வரும் தாயும், அடுத்த தலைமுறையின் குடும்ப அடிமையாக வளரும் தன் மகளும் ஒரே வாழ்வியல் சிக்கலை எதிர்கொள்ள வேண்டிய அடிமைச் சூழலுக்குத் தள்ளப்பட்டிருப்பதைக் காணலாம்.

*"மறுபடி மறுபடி*
*கழுவி மெழுகி*
*மறுபடி மறுபடி*
*சமைத்துச் சமைத்து*
*மறுபடி மறுபடி*
*படுத்து படுத்து*
*மறுபடி மறுபடி*
*சுமந்து தளர்ந்து*
*மறுபடி ஓடி*
*மறுபடி ஓய்ந்து*
*மகளே' என் மகளே*
*இதுவா பெண் வாழ்க்கை"*[19]

என்ற ஆண்டாள் பிரியதர்ஷினியின் கவிதை வழி, இன்றைய சமூகத்தில் ஆணாதிக்கப் போக்கும், பெண்ணடிமைத் தனமும் வலிமையாக இருப்பதால் தலைமுறைகளாகத் தொடரும் பெண்ணடிமைத் தனத்தைக் காணமுடிகின்றது.

---

19. ஆண்டாள் பிரியதர்ஷினி, சுயம் பேசும் கிளி, பக்.34-35.

இவ்வாறு நீண்ட தலைமுறையைக் கொண்டிருக்கும் பெண்ணினம் மரபின் தாக்கத்திலிருந்து விடுபட்டு இன்னும் புதுமைச் சிந்தனையை மறந்து அடிமைச் சுகம் காணும் பெண்ணினத்திற்குப் பொன்மணி வைரமுத்து,

"சீதை வழிவந்த
செல்வியரெல்லாம் இங்கே
……………………
சமையல் உரிமையைத்தான்
சரியாய்க் கேட்டார்
சமூக உரிமைகளைச்
சரியாய்க் கேட்டது யார்?"[20]

என்று ஒரு திருப்பள்ளி எழுச்சி பாடியுள்ளார். பெண்களின் அடிமைத்தனங்களின்மீது மோகத்தையும், கவுரவ உணர்வையும் ஏற்படுத்தி அவர்களை மூளைச் சலவை செய்து மழுங்கடித்திருக்கிறது இச்சமூகம். மேலும், இல்லச் சிறை தாண்டி சமூக வெளிக்கு வராமல் பெண் தடுக்கப்பட்டிருக்கிறாள் என்பதை இக்கவிதையின் வழி அறியமுடிகின்றது.

இவ்வாறு காலங்காலமாகக் குடும்பத்தில் அடிமைப்பட்டுக் கிடந்த பெண்கள், அந்தப் புரத்தில் அரசியாக இருந்தாலும், குடும்பத் தளத்தில் அடுப்படியில் வேகும் அரிசியாகவே இருக்கிறாள் என்பதைக் கவிதை எடுத்துரைக்கின்றது.

"அந்தப்புரத்தில்தான்
அரசிகள்
மற்றபடி
அடுப்படியில் வேகும்
அரிசிகள்
என்று
பெண்களைப்
பார்த்த
பேர்வழிகள்"[21]

20. பொன்மணி வைரமுத்து, பொன்மணி வைரமுத்து கவிதைகள், ப.77.
21. மு.மேத்தா, காத்திருந்த காற்று, ப. 34.

என்று தன் கவிதையின் வாயிலாகப் பெண்கள் குடும்பத் தளத்தில் எதிர்கொள்ளும் சிக்கல்களையும், இல்லம் தாண்டி வெளியே வரமுடியாத அந்தப் பெண் குடும்பத்தில் தலைமுறை அடிமையாகவே இருந்து வருகிறாள் என்பதையும் உணர்த்துகின்றார் கவிஞர் மு.மேத்தா.

**"வருடங்களை உதைத்து**
**நொடிகளைச் சுவைத்து**
**நானும் மகளும்**
**மகளும் நானும்**
**விளையாடும் பந்து போல**
**வாழ்க்கை"**[22]

என்ற கவிதையின்வழி சே.பிருந்தா, பல வருடங்களாக ஒவ்வொரு நொடிப் பொழுதும் தாயும் மகளும் மாறி மாறி வாழ்க்கை முழுவதும் குடும்பத்தில் உழைப்புச் சுரண்டலுக்கு ஆளாக்கப்படுவதைக் கவிஞர் பிருந்தா எடுத்துக்காட்டியுள்ளார். இவ்வாறு குடும்பத்தில் பெண்கள் தலைமுறை அடிமைகளாகவே வஞ்சிக்கப்படுகிறார்கள் என்பதை மேற்கண்ட கவிஞர்களின் கவிதைகள் புலப்படுத்துகின்றன.

### 3.4.3.பெண்ணடிமைத்தனம்

திருமணம் என்பது பெண்ணைப் பொறுத்த வரையில் அடிமைத் தனங்களும், அவலங்களும் நிறைந்த வாழ்வியல் அனுபவம் மட்டுமல்லாமல் வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும், சுயத்திற்கும் மிகப்பெரிய தடைக்கல்லாகவும் இருக்கிறது. இத்திருமண நிகழ்வால் அவர்களுக்கு இன்பியலுக்குப் பதிலாகத் துன்பியலே மிஞ்சுகிறது என்பதை,

**"உன்**
**சகோதரி**
**திருமணமான பிறகு**
**உல்லாசச் சிறகுகளால்**
**உயரங்களையா**

22. சே.பிருந்தா, மகளுக்குச் சொன்ன கதை, ப.19.

முத்தமிடுகிறாள்?
வைகறைக் கிளைகளை
அவள்
கைகள் உலுக்கும் போது
உதிர்வன ~ அவளது
விரல்களைத் தவிர
வேறு என்ன?"[23]

எனும் தமிழன்பனின் கவிதையானது வெளிப்படுத்துகின்றது. இக்கவிதையில் பெண்ணானவள் திருமணம் செய்து கொண்டாலும், திருமணம் செய்து கொள்ளாமல் இருந்தாலும் துன்பங்களையே அனுபவிக்க வேண்டியுள்ளது. ஆணினத்தின் இருமுனைத் தாக்குதல்களுக்கு ஆளாகிக் கொண்டிருக்கும் பெண்ணினத்தின் வாழ்க்கை, கேள்விக் குறியாய்ப் போவதை வேதனையோடு வெளிப்படுத்தி இருக்கிறார் கவிஞர் ஈரோடு தமிழன்பன்.

இவ்வாறு பெண்கள் குடும்பப் பொறுப்புக்களைச் சுமக்கும் ஓர் இயந்திரமாகவே மதிக்கப்படுகிறாள் என்பதையும் கவிதைவழி அறியமுடிகின்றது.

"மண் என்றும் மரம் என்றும்
மங்கையரைப் புறக்கணித்த
காலம் கழிந்த தென்றும்
கருதலாம்; எனினுமிங்கே
கோலமிடல் இல்லத்தைக்
கூட்டல் துணிதுவைத்தல்
கையலுக்கும் வேலைகளைக்
கவனித்தல் என்றிது போல்
மையலுக்கும் சமையலுக்கும்
மட்டும் இருக்குமொரு
கூட்டம் குறைந்ததுவா"[24]

**23.** ஈரோடு தமிழன்பன், மு.நூ., பக். 261-262.
**24.** மீரா, கோடையும் வசந்தமும், பக். 103-104.

என்று கவிஞர் மீரா, குடும்பத் தளத்தில் பெண்கள் இன்னும் அடிமையாகவே இருந்து வருகிறார்கள் என்றும், குடும்பத்தில் பெண்ணடிமைத்தனம் குறைந்ததுண்டா? என்றும் தன் கவிதையின் வாயிலாகக் கேள்வி எழுப்புகிறார்.

புதிதாகத் திருமணம் ஆகிப் புகுந்த வீட்டிற்கு வரும் புதுப்பெண்ணிற்கு அவளது நாத்தனாரானவள் வேலை வாங்கும் எஜமானாகவே விளங்குவதைக் காணமுடிகின்றது.

"வீடு புதிது
உறவுகள் புதிது
கிண்டல் புதிது
திண்டல் புதிதென
புதுமணப்பெண்
மங்கல ஓசைகளில் இருந்து விடுபடாமல்
திளைத்திருக்கிறாள்
யாரும் எழுமுன்
சாணம் கரைத்து போட்டு
வாசல் பெருக்கணும்
நாத்தனாரின் கட்டளை கேட்டு
திடுக்கிட்டு அடங்கி
பழம்பெண்ணாகிறாள்"[25]

என்ற கவிதை திருமணமாகிப் புகுந்த வீட்டிற்குப் புதிதாக வரும் மணப்பெண் நாத்தனாரின் வசவுகளுக்குக் கட்டுப்பட்டு, அதிகாலையிலேயே எழுந்து வீட்டு வாசல் பெருக்கி, வாசல் தெளித்து அக்குடும்பத்தின் பழம்பெண்ணாகிறாள் என்பதை உணர்த்துகின்றது.

இவ்வாறு பெண்கள் காலங்காலமாகக் குடும்பப் பொறுப்புக்களைச் சுமக்கும் குடும்ப அடிமைகளாகவே வாழ்ந்து வருகிறார்கள் என்றும், குடும்பத்தில் பெண்ணடிமைத்தனம் இன்னும் குறையவில்லை என்பதையும் இக்கவிதைகள் எடுத்துக்காட்டுகின்றன.

---

**25.** லாவண்யா சுந்தரராஜன், இரவைப் பருகும் பறவை, ப. 77.

### 3.4.4.பெண்ணின் முரண்பட்ட வாழ்க்கை

திருமணம் முடித்த மணமக்கள், மனம் ஒருமித்த கருத்துடன் வாழ வேண்டும். இவ்வகையில் மனம் ஒருமித்து ஒற்றுமையுடன் வாழாமல் வீட்டுக்குள்ளேயே உயிரற்ற ஜடங்களாய், விருப்பு, வெறுப்பு எதையும் காட்டாமல் வாழ்க்கையில் எவ்விதப் பிடிப்புமின்றி ஒரே வீட்டுக்குள் வாழ்வோரும் உள்ளனர். கணவன், மனைவி ஆகிய இருவருள் எவ்வித அன்போ, ஈடுபாடோ இல்லாமல் இல்லறத்தில் இணையும் பொழுது அவ்விடம் உருவாகும் சூழல், கொலைக்களத்திற்குச் சமமானது என்கின்றார் கவிஞர்.

"இந்த அறையெங்கும்
இந்தப் படுக்கையெங்கும்
அத்துமீறி நுழைந்த கால்களின்
சுவடுகள்
எங்கோ தொடங்கிற்று
பாதைகள் அழிக்கப்பட்ட பாதையில்
......... ..........
யாரேனும் ஒருவர்
கொலையாளியாகும் சாத்தியங்களுடன்
ஒன்றாக உறங்குகிறோம்
..................
எண்ணற்ற சதிகளால்
புனையப்பட்டதிந்த வாழ்க்கை"[26]

என்று சல்மாவின் கவிதை, அத்துமீறி நுழைந்த கால்களை உடையவனையும், கொலைக்களமாகக் காட்சியளிக்கும் படுக்கையறையையும், பெண்ணானவள் எளிதில் ஜீரணித்துக் கொள்கிறாள் என்பதை வெளிக்காட்டி நிற்கின்றது.

### 3.4.5.சுயத்தைக் காத்தல்

கணவனும் மனைவியும் ஒற்றுமையுடன் வாழ வேண்டும் இல்லையெனில், முரண்பட்ட சூழ்நிலை ஏற்பட வழி வகுத்து விடும். இன்றைய காலச் சூழலில், கணவனும்

---

**26.** சல்மா, ஒரு மாலையும் இன்னொரு மாலையும், ப.க். 35-36.

மனைவியும் அவரவர்களுக்கான சுயத்தைக் காத்துக்கொள்ளப் போராட வேண்டியுள்ளது.

"எனக்கான உன்னை
உன்னில் தேடித் தேடி
ஏமாறுகிறேன்
உனக்கான என்னை
உனக்கு உணர்த்த முடியவில்லை
எனக்கானதாகவும்,
உனக்கானதாகவும்
யாருக்கானதாகவும்
இல்லாமல்
இயங்கிக் கொண்டிருக்கிறது
அவரவர்களின் "நான்"[27]

என்ற வெண்ணிலாவின் கவிதை வரிகள், கணவன், மனைவி ஆகிய இருவருமே அவர்களுக்கான சுயத்தை அவர்களே காத்துக்கொள்ள வேண்டும் என்பதை வலியுறுத்துகிறது.

## 3.4.6.பெண்ணின் வேதனை

ஆண்களால் தொடுக்கப்படும் வன்முறைகளில் ஒன்று பாலியல் வன்முறையாகும். அதிலும் கணவனே வன்முறையில் ஈடுபடும் பொழுது, பெண் உடல், மன வாழ்க்கைச் சிதைவுக்கு ஆளாகிறாள்.

"மருத்துவச்சி வந்தாள்
சூலுற்றவளை நிர்வாணித்தாள் மெல்ல'
அகட்டிய காலின் இரு தொடைகளிலும்
சாம்பல் உதிரும் சிகரெட் சூடுகள்
கண்களாய்க் கனன்று கொண்டிருந்ததைக் கண்டாள்
அதிர்ச்சியில் காதுகளைப் பொத்திக் கொண்டாள்
இன்னுமா நீ அவனுக்கு மனைவி"[28]

---

**27.** அ.வெண்ணிலா, மு.நூ., ப. 29.
**28.** குட்டி ரேவதி, முலைகள், ப. 41.

என்று மனைவியின் வேதனையையும், அவளின் வலியையும் குட்டி ரேவதி தன் கவிதை வழி சுட்டிக்காட்டியுள்ளதைக் காணமுடிகின்றது.

## 3.5.பெற்றோர்களால் ஏற்படும் சிக்கல்கள்

மனிதர்களின் வாழ்க்கையைத் திருமணத்திற்கு முன், திருமணத்திற்குப் பின் என இரண்டு விதமாகப் பிரிக்கலாம். ஆண், பெண் இருபாலரும் தங்களைப் பற்றி உணரத் தொடங்கிய பருவம் முதல் தங்களுடைய எதிர்காலத்தை மகிழ்ச்சியானதாகவே எண்ணிப் பார்க்கின்றனர். அப்படிப்பட்ட இல்வாழ்க்கை அனைவருக்கும் கிடைப்பதில்லை. பெரும்பாலானவர்களுடைய வாழ்க்கை முரண்பட்டதாகவே அமைகின்றது. இதில் பெண்களே பெரிதும் பாதிக்கப்படுகின்றனர். இவர்கள் விரும்பிய வாழ்க்கையை அடைய முயல்கின்றனர். அடைய முடியாத நிலையில், கிடைக்கக் கூடிய வாழ்க்கையை மனமின்றி ஏற்றுக்கொள்கின்றனர். தங்களின் குடும்பச் சூழ்நிலையின் காரணமாக இவ்வாழ்க்கையை ஏற்றுக்கொள்கின்றனர். இவ்வாறு ஏற்றுக்கொள்ளும் இவர்களுடைய வாழ்க்கை நிகழ்வுகள் முரண்பட்டவையாகவே அமைகின்றன. விரும்பிய வாழ்க்கை கிடைக்காத நிலையில் பிறருக்காக ஏற்றுக்கொண்ட வாழ்க்கையில் பெண்ணின் எதிர்பார்ப்புகள், கருத்துச் சுதந்திரம் அவளை விட்டு விலகிப் போகின்றன.

### 3.5.1.விருப்பமின்றி அமையும் வாழ்க்கை

பெற்றோர், பிள்ளைகளின் விருப்பத்தைத் தவறாது நிறைவேற்ற வேண்டும் என்பதில் நிலைத்த கருத்தைக் கொண்டிருப்பர். குழந்தைகள் எந்தெந்தப் பொருட்களைக் கேட்கின்றனரோ அவற்றை வாங்கிக் கொடுப்பர். பிள்ளைகளின் ஒவ்வொரு பருவமும் பெற்றோருக்கும், குழந்தைகளுக்குமிடையே எவ்வித முரணுமின்றி வளர்ந்து வருகின்றது. இவர்களுள் பெண் பிள்ளைகள் குறிப்பிட்ட பருவத்தை அடைந்த பிறகு, தாங்கள் விரும்பிய ஆடவரையே கணவனாக அடைய வேண்டும் என விரும்பும் பொழுது மட்டும் பெற்றோர்களால் முட்டுக்கட்டை போடப்படுகிறது.

குழந்தைப் பருவம் முதல் ஏற்பட்ட எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றிய அப்பெற்றோரே திருமண விருப்பத்தை நிறைவேற்றத் தவறுகின்றனர். தங்கள் விருப்பத்தைப் பெண் மேல் வலிந்து செலுத்தும் நிலையே சமுதாயத்தில் பெரும்பாலும் நிலவுகின்றது.

**"எப்பொழுதும்**
**எனது எல்லாக் காரியங்களும்**
**நான் இல்லாத போதே**
**நிகழ்ந்துவிடுகின்றன**
**ஒவ்வொரு முறையும்**
**எதையும்**
**ஸ்பரிசித்து உணர்வதற்குள்**
**அவை நிகழ்ந்து முடிகின்றன**
**நான்**
**முயன்றுதான் பார்க்கிறேன்**
**என்றாவது**
**எதுவாயினும்**
**நிகழ்வதற்கு முன்பே**
**நான் அதைத் தொடுவதற்கு**
**ஆயினும்**
**என் முயற்சிகளைத் தோற்கடித்து**
**எனக்காக நிகழும் அவை**
**நானில்லாமலேயே நடந்துவிடுகின்றன"**[29]

என்ற சல்மாவின் கவிதை, தன்னுடைய வாழ்க்கையில் ஏற்படவிருக்கும் இன்ப, துன்பங்களை ஏற்றுக்கொண்டு வாழ, பெண்ணுக்கு எவ்வித முன்னறிவிப்பும் இல்லாமலேயே அவளுடைய எதிர்கால வாழ்க்கைத் திட்டங்கள் நிறைவேற்றப்படுகின்றன என்பதைப் புலப்படுத்துகின்றது.

### 3.5.2.கருத்தைத் திணித்தல்

**29.** சல்மா, ஒரு மாலையும் இன்னொரு மாலையும், ப. 16.

பெற்றோர்கள் தம் மகளுடைய ஆழமான விருப்பத்தை அறிந்தும், அதற்கு முக்கியத்துவம் கொடுக்காமல் எளிதாக நிராகரித்துவிட்டு தங்கள் கருத்தை வலியப் புகுத்தும் பெற்றோரும் உள்ளனர்.

"ஒவ்வொரு முறையும்
அம்மா நாசூக்காய்ச் சொல்வதை
அக்கா கோபமாய்ச் சொல்வாள்
..............................
ஒளிரும் கோடி நட்சத்திரங்களிலிருந்து நீள
நடுங்கும் இரவுகளில்
மிதக்கும் அறிவுரைகள்
குட்டிக்கு உணவூட்ட
இயலாப் பூனையின்
தேம்பியழும் குழந்தைக்குரல்
கவ்விப் பிடிக்கிறது ஈரலை
உனக்கும் கூடப்
புகார்கள் இருக்கலாம்"[30]

என்ற கவிதையில், பெற்றோரும், உற்றோரும் மாறி மாறித் தங்கள் கருத்தைப் பெண்ணிடம் புகுத்துவதால் தன் பிறந்த வீட்டுச் சூழலுக்கு மதிப்பளிக்கும் பெண்ணால் தன் விருப்பத்தில் நிலைத்து நிற்க முடியாது. பிறருக்காகத் தன்னையே மாற்றிக் கொள்கிறாள் என்பதைக் கவிஞர் சல்மா சுட்டிக்காட்டியுள்ளார்.

### 3.5.3.பெற்றோரின் பொறுப்பின்மை

தாய், தந்தையரின் பொறுப்பின்மையால், காலமெல்லாம் உழைத்து, உழைத்துப் பொருள் ஈட்டும் இயந்திரமயமாக்கப்பட்ட பெண்களின் நிலையைக் கவிஞர் கவிதையாக்கியுள்ளார்.

"ஒண்ணாந்தேதி அமுதசுரபிகள்
வைத்திருப்பதால்
சில பெற்றோர்கள் அவர்களை

30. மேலது, ப. 26.

*மாற்றி விட்டனர்*"[31]

என்ற வைரமுத்துவின் கவிதை, பெற்றோரின் பொறுப்பின்மையால் குடும்பப் பெண்களைப் பொருள் ஈட்டும் இயந்திரமாக மாற்றிவிட்டனர் என்பதை எடுத்துரைக்கின்றது.

இவ்வாறு தன் பெற்றோருக்காக உழைத்து, தம் குடும்பப் பொருளாதாரச் சீர்கேட்டை ஒழுங்குபடுத்தி நிமிரும்போது தம் இளமைக் காலத்தைக் கடந்து விடுகின்றனர்.

"*அவர்கள் உழைப்பு*
*வங்கிக் கணக்கை*
*நிறைத்தது ~ அப்போது*
*தலையிலும் இரண்டொன்று நரைத்தது*"[32]

என்ற வைரமுத்துவின் கவிதை, தன் பெற்றோருக்காகப் பெண்கள் திருமணம்கூட செய்யாமல் தங்களின் இளமையை இழந்து விடுகின்றனர் என்ற சோகத்தை உணர்த்துகிறது.

### 3.5.4.குடும்ப அடிமைகள்

நீண்ட காலமாகப் பழகிப்போன அடிமை வாழ்க்கையை மரபின் சுமை அழுத்த ஆண்களின் சமூகக் கட்டமைப்புக்குள் முடங்கி வாழ்ந்து வந்ததால், பெண்கள் தங்களைத் தற்சோதனை செய்துகொள்ள இயலவில்லை. பெண் முன்னேற்றம், பெண் விடுதலை போன்ற சிந்தனைகளில் கவரப்படாமல் இருந்தார்கள். இவ்வாறு, சுதந்திரம் இழந்து வாழ்ந்த பெண்களின் வாழ்க்கையானது குடும்பத்தில் அடிமைத்தனம் வலுப்பெறக் காரணமாயிற்று.

"*அடிநாள் முதலாய் இந்த*
*ஆண் வர்க்கம்*

---

**31.** வைரமுத்து, இன்னொரு தேசிய கீதம், ப. 48.
**32.** மேலது, ப. 47.

**பெண்ணை**
**கர்ப்பஞ் சுமக்க மட்டும்**
**கைகுலுக்கி வரவேற்கும்”**[33]

என்ற வைரமுத்துவின் கவிதை, இன்பத்தைக் கொடுப்பதற்கும், பிள்ளைப் பேற்றிற்கும் மட்டுமே பெண்ணை உரிமையுடையவளாகச் சித்தரித்துள்ளது. மேலும், குடும்பப் பெண்களின் நிலையினைக் கூறவந்த கவிஞர் கலாப்ரியா,

**"ஒவ்வொரு முறையும்**
**தாய்**
**இரு கர்ப்பம்**
**தரிக்கிறாள்**
**சூற் பையில்**
**ஒன்று**
**மனதில்**
**ஒன்று இரண்டாவதை**
**இறக்கி வைப்பதேயில்லை”**[34]

என்ற கவிதையின் வழி, தங்களின் சந்ததியைப் பெருக்குவதற்கும், தங்களின் பாலியல் தேவையைப் பூர்த்தி செய்வதற்குமே பெண்களைப் பயன்படுத்தி வருகிறார்கள். ஆனால் எங்களின் மன வேதனையை யாரும் புரிந்து கொள்வதில்லை என்பதை எடுத்துரைத்துள்ளார்.

அதிகமான பேச்சும் புறம் சொல்லும் பழக்கமும் பெண்களிடம் மிகுதியாக இருப்பதால், அவர்களிடம் ரகசியம் தங்காது என்கிற பிரச்சாரமானது பெண்ணியச் சுதந்திரத்தை முடக்கும் நடவடிக்கையாகவே தெரிகிறது. இதனை,

**"ரகசியமா?**
**காதலிக்குச் சொல்**
**ஒரு காதில் வாங்கி**
**மறு காதில் விடுவாள்**
**மனைவிக்குச்**

---

**33.** வைரமுத்து, திருத்தி எழுதிய தீர்ப்புகள், ப. 18.
**34.** கலாப்ரியா, உளமுற்ற தீ, ப.75.

***சொல்லாதே***
***இரு காதில் வாங்கி***
***வாய்வழி விடுவான்”[35]***

எனும் கவிஞர் வைரமுத்துவின் கவிதை, பெண்ணின் பேச்சு மற்றும் பிரச்சார சுதந்திரத்தை மறைமுகமாகத் தடுக்கும் சூழ்ச்சியைப் புலப்படுத்தி நிற்கின்றது.

கோலம் போடுவது ஒரு கலை என்றாலும், அது ஆண் வர்க்கத்தினரால் ஏற்படுத்தப்பட்ட அடிமைப் பயிற்சியாகும். இது குடும்பப் பெண்ணை அதிகாலையிலேயே எழுந்திருக்கச் செய்யும் குடும்ப உழைப்புச் சுரண்டல் நடவடிக்கையாகும் என்பதை,

***“பெண்கள் இடும் கோலங்களில்***
***புள்ளிகள்***
***சிறைப்பட்டிருப்பதைப் போலவே***
***அந்தப் புள்ளி மயில்களும்***
***சிறைப்பட்டிருந்தன”[36]***

என்கிறார் வைரமுத்து. இதுபோன்ற குடும்ப மரபு சார்ந்த பணிகள் பெண்ணின் அடிமைத் தனத்தையே பேணிப் பாதுகாத்து வருகிறது என்பதை இன்றும் பார்க்க முடிகின்றது.

ஆண் வர்க்கத்தினரால் பாதிக்கப்பட்டிருக்கும் குடும்பப் பெண்களுக்கு அழுகை மட்டுமே மிகப் பெரிய ஆறுதலான ஒன்றாகும்.

***“பாவம்***
***தன்***
***கண்ணீர் முத்துக்களைக்***
***கோர்க்கத்தான்***
***நொந்து நொந்து அவள்***
***நூலாய் இளைத்தாளோ?”[37]***

---

**35.** வைரமுத்து, வைரமுத்து கவிதைகள், பக். 484-485.
**36.** மேலது, ப. 472.
**37.** அறிவுமதி, அறிவுமதி கவிதைகள், ப. 378.

என்ற கவிதையானது, ஆணாதிக்க வர்க்கத்தால் ஏற்படும் பெண்ணடிமைத் தனத்திற்கு அழுகை ஒன்றுதான் அவர்களுக்கு ஆறுதலாக இருக்கிறது என்பதை வெளிப்படுத்துகிறது.

பெண்கள் செய்யும் சிறு குற்றத்திற்கான ஆணாதிக்கத் தண்டனையானது கடுமையாக இருப்பதை அறிந்த பெண்கள் கண்ணீரையே தங்களின் ஆயுதமாகப் பயன்படுத்துகிறார்கள் என்பதிலிருந்து பெண்ணினம் இன்னும் கோழைத் தனமாகவே இருக்கிறது என்பதை,

**"பெண்ணே**
**.......... ...........**
**குற்றங்களை மறைக்க**
**கண்ணீரை விட**
**கனத்த போர்வை**
**என்ன இருக்கிறது"**[38]

என்ற அறிவுமதியின் கவிதை, படம் பிடித்துக் காட்டுகிறது.

இவ்வாறு, காலங்காலமாகக் குடும்ப அடிமைகளாக இருக்கும் பெண்களுக்குப் பத்தினிப் பட்டங்களை ஆண் சமூகம் வழங்கிக் கவுரவித்து வருகிறது என்பதை,

**"எவனோ ஒருவனோடு**
**உள்ளே ~ அழுது**
**வெளியே சிரித்து வாழ்கிற**
**உத்தமிகள்தான்**
**இந்தப் பூமியில்**
**பத்தினிகள்"**[39]

என்ற அறிவுமதியின் கவிதை வழி அறியமுடிகின்றது. இவ்வாறு காலங்காலமாகத் தன் பெற்றோர், குடும்பம் என்று அடிமைப்பட்டுக் கொண்டிருக்கும் பெண்கள் இன்றைய

38. மேலது, பக்.391-392.
39. அறிவுமதி, அறிவுமதி கவிதைகள், ப. 407.

அறிவியல் தலைமுறையிலும்கூட அடிமைப்பட்டுக் கிடப்பதை மேற்கண்ட கவிதை வரிகள் உணர்த்துகின்றன.

### 3.5.5.இளம் வயதுத் திருமணம்

இளம் வயதிலேயே திருமணமான பெண்கள், குடும்பப் பொறுப்பு என்றால் என்ன? என்பதைப் புரிந்துகொள்ளும் முன்பே பொறுப்புகளையும் புதல்வர்களையும் சுமக்கின்றனர். தன் ஆசைகளை அடக்கி, அடங்கி, ஒடுங்கி வாழ்கின்றனர். இந்த இன்னல்களிலிருந்து இன்றைய சீதைகளை இராமன் வில்லாலும் விலக்க முடியாது என்பதை,

**"தரும தேவதை**
**தினக்கூலி வாங்கிக் கொண்டு**
**திசைகளுக்குக்**
**கறுப்பு அடிக்கப் போய்விட்டான்"**[40]

என்ற தமிழன்பனின் கவிதை சுட்டிக்காட்டுகின்றது. இளமைத் திருமணத்தால், சம்பளம் இல்லாத தினக்கூலி ஆளாய் குடும்பப் பொறுப்புக்களைச் சுமக்கும் பெண்ணின் நிலையை மேற்காணும் கவிதையில் சுட்டிக்காட்டியுள்ளார் கவிஞர் ஈரோடு தமிழன்பன்.

### 3.5.6.பெற்றோர் கட்டுப்பாடு

பெண்களுக்குச் சிக்கல் என்பது அவள் பெண்ணாகப் பிறந்ததே ஆகும். எந்த நிலையிலும் பெண்ணின் மீதான தாக்குதல் தொடர்ந்து கொண்டேதான் இருக்கிறது. சிறுவயது முதலே பெண்களின்மீது கட்டுப்பாடுகளும் நிபந்தனைகளும் திணிக்கப்படுகின்றன.

**"எதைக் காட்டிலும்**
**வாசற்படி மேல் உட்கார்வது**
**பிடித்திருக்கிறது**

---

40. ஈரோடு தமிழன்பன், ஈரோடு தமிழன்பன் கவிதைகள், தொகுதி-2, ப.463.

முதுகு அழுந்த
இதமாய் சாய்ந்து
வானப் பார்ப்பது விச்ராந்தையாயிருக்கிறது
சின்ன வயதில்'
'லட்சுமி அது
சாமி மேல உட்காரலாமா?' என்பாள் அம்மா
இப்பொழுதெல்லாம்
'படிச்ச பொண்ணு
பார்க்க நல்லாவாயிருக்கு?'
அங்கலாய்க்கிறாள்
படித்ததா
பெண்ணாயிருப்பதா
தவறு எதுவோ"[41]

என்று, வெண்ணிலா தனது கவிதையில், பெண்கள் வாசற்படியில் அமரக் கூடாது என்பது காலங்காலமாகப் பெற்றோர்களும் முன்னோர்களும் விதித்த கட்டுப்பாடு என்பதை எடுத்துரைத்துள்ளார்.

சிறு வயதிலிருந்தே ஆண், பெண் என்ற பிரிவினையை ஏற்படுத்தியது ஆணாதிக்கச் சக்தியாக விளங்கும் பெற்றோரே ஆவர். அவர்களைத் தொடர்ந்து சமூகமும் பல்வேறு கட்டுப்பாடுகளைப் பெண் குழந்தைகளுக்கு விதிக்கின்றது. பெண் என்பவள் வீட்டிலேயே இருக்க வேண்டும். வெளியில் செல்லக் கூடாது. ஆண் என்பவன் சுதந்திரமாக எப்போது வேண்டுமென்றாலும் வெளியில் சென்று வரலாம் என்ற நிலை இருந்து வருகின்றது. இதனை,

"வீடு பெண்ணுக்கு
வெளி ஆணுக்கு' என
இன்னுமொரு முறை
எழுதப்பட்ட
அந்தக் கறுப்பு ஒப்பந்தத்தில்

41. அ.வெண்ணிலா, மு.நூ., ப. 6.

***கட்டாயக் கையொப்பமானது***”[42]

என்ற கவிதையின்வழி, கவிஞர் பழநிபாரதி கலாச்சாரம், பண்பாடு என்ற போர்வையில் மூழ்கிக் கிடக்கும் சமூகத்தைச் சாடியும், ஆண்-பெண் வேறுபாட்டிற்குப் பெற்றோர்களே காரணம் என்றும் குற்றம் சாட்டுகின்றார்.

## 3.5.7.குழந்தையை வைத்துப் பிச்சையெடுக்கும் கொடுமை

பொருளாதாரத் தேவையை நிவர்த்தி செய்ய முடியாத ஒரு பெண் தன் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகக் குழந்தையைக் கையில் வைத்துக்கொண்டு பேருந்துகளிலும் பேருந்து நிலையங்களிலும் பிச்சையெடுக்கின்றாள். பிச்சை எடுப்பதற்காகவே பெண் குழந்தைகளை வாடகைக்கு விடப்படும் அவல நிலையும் தொடர்கின்றது. அவ்வாறு வாடகைக்கு விடும் குழந்தை அழாமல் இருப்பதற்கு அக்குழந்தைக்குப் போதைப் பொருள் கொடுத்துத் தூங்க வைக்கும் கொடிய நிலை நிலவுவதை,

***“போக்குவரத்து நெரிசலில்***
***பிச்சையெடுக்கும்***
***இந்த நடுத்தர வயதுப் பெண்ணை***
***கவனிக்காமல் நகர முடியாது***
***அவளைக் கவனிக்காமல் நகர்வது***
***அவளது கையில்***
***பிச்சையெடுப்பதற்காக***
***வாடகைக்கு விடப்பட்ட குழந்தையைக்***
***கவனிக்காமல் நகர்வதைப்போன்றது***
***அந்தக் குழந்தையைக்***
***கவனிக்காமல் நகர்வது***
***தாய்மையின் ஈனத்தைக்***
***கவனிக்காமல் நகர்வதைப்போன்றது***

---

**42.** பழநிபாரதி, தனிமையில் விளையாடும் பொம்மை, ப. 23.

அழக்கூடாது என்பதற்காக

அதற்கு ஊட்டப்படும்

போதைப் பழக்கத்தை

கவனிக்காமல் நகர்வதைப்போன்றது"[43]

என்ற கவிதையின்வழி காட்சிப்படுத்தியுள்ளார் கவிஞர் பழநிபாரதி.

### 3.5.8.சுதந்திரமாகச் செயல்படவிடாமை

பொதுவாகப் பெண் குழந்தைகளின்மீது பெற்றோரின் கண்காணிப்பும், கட்டுப்பாடும் சற்று அதிகமாகவே இருக்கும். அங்கே போகாதே, அதை எடுக்காதே, சத்தம் போடாதே, சீக்கிரம் தூங்கு என்று குழந்தைகளுக்குக் கற்பித்து அவர்களைச் சுதந்திரமாகச் செயல்படவிடாமல் கட்டுப்படுத்தி வைக்கின்றோம். இது பெண்குழந்தைகளின் வளர்ச்சியினைத் தடுப்பதற்கு ஒப்பாகும்.

"அங்கே போகாதே
அதை எடுக்காதே
கீழே இறங்கு
மேல ஏறாதே
பேசாம இரு
சத்தம் போடாதே
தூங்கு சீக்கிரம்
தொணதொணன்னு பேசாதே
இவற்றோடு
லேசான ஒரு கையுயர்த்தலும்
போதுமானதாயிருக்கிறது
குழந்தைகளை
நம் உலகிற்கு
அழைத்துக் கொள்ள"[44]

---

**43.** பழநி பாரதி, தனிமையில் விளையாடும் பொம்மை, ப. 34.
**44.** அ.வெண்ணிலா, மு.நூ., ப. 72.

என்ற வெண்ணிலாவின் கவிதை, குழந்தைப் பருவம் முதலே பெண்களுக்குப் பல்வேறு கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டு, அவர்களைச் சுதந்திரமாகச் செயல்பட விடாமல் தடுத்து வருவதை வெளிக்காட்டுகின்றது.

### 3.5.9.உயர்கல்வி மறுப்பு

குடும்ப நிறுவனத்தைத் திறம்படச் செயல்படுத்தப் பெண்கல்வி தேவை. ஆகையால், பெண்களுக்குக் கல்வி அளிக்கப்பட வேண்டும் என்றனர். பொருளாதாரச் சுதந்திரம் பெண்களுக்குக் கிடைக்க வேண்டுமெனில் பெண்களுக்குக் கல்வி அவசியம் என்று கருதினர். அதனால், திருமணத்திற்கு மட்டுமே முக்கியத்துவம் அளிக்கும் இந்தச் சமூகத்தில், பெண் கல்விக்கு முக்கியத்துவம் கொடுக்கத் தயங்கினர். ஏனென்றால், பெண்கள், கல்வி பயின்றாலும் வேலைக்குச் சென்றாலும் அது வேறு ஓர் இல்லத்திற்கே பயன்படும் எனக் கருதும் மனப் போக்கே, பெண்கள் உயர்கல்வி பயில மறுத்துள்ளனர் என்பதைப் பின்வரும் கவிதையால் அறியமுடிகின்றது.

"தெனம் பேப்பர் படி
கலெக்டராகணும்
'அஸ்ஸாமின்
தலைநகர் என்ன?'
அறிவுக்கு விதையிட்ட
ஆசைமுகம் லேசாய் நினைவில்
'இன்னிக்கு நெலமைக்கு
டீச்சரானாய் போதும்
என் ஆசைக்கு
ஓம் புள்ளைய வளர்த்துக்கலாம்'
கனவுகளை மடக்கி
என்னையும் சுருக்கிய
யதார்த்த முகந்தான்
ஆழமாய் இன்னும் கண்முன்"[45]

---

45. அ.வெண்ணிலா, மு.நூ., பக். 22-23.

என்கிற வெண்ணிலாவின் கவிதை, பெற்றோர்களின் மற்றொரு மனநிலையைப் படம்பிடித்துக் காட்டுகிறது. இவ்வாறு பெண்களுக்கு உயர்கல்வி மறுக்கப்பட்டதற்குப் பெற்றோரின் இந்த உள்ளக்கிளர்ச்சியே காரணமாக இருப்பதை இன்றும் இச்சமூகத்தில் காணமுடிகின்றது.

### 3.5.10.பெண்கள் மீதான வசவு

பெண்கள் ஏதேனும் ஒரு சிறு தவறு செய்திருந்தால்கூட, அவர்களை ஆபாசமாகத் திட்டுவதும் அடிப்பதும் ஆணாதிக்க வர்க்கத்தின் (தந்தை, சகோதரன், கணவன், மகன்) உடமையாகக் கருதப்படுகிறது.

***"சொல்லின் முன்னொன்று தந்தாய்***
***மீனின் முள்ளையோ தாவர முள்ளையோ***
***ஒத்திராதது***
***சதைக்குள் இறங்கிய அக்கொடுக்கை***
***விட்டோடிப் பறந்தது குளவி***
***கடுக்கின்றன***
***என் விசேஷ உறுப்புகளான***
***கண்களும் முலைகளும் யோனியும்***
***அழியாத வலியின் சாயலெல்லாம்***
***கொடுக்கு தானே"***[46]

என்ற குட்டி ரேவதியின் கவிதை, பெண்கள் மீது தொடுக்கப்படும் குடும்ப வன்முறையை எடுத்துக் கூறுவதாய் அமைந்துள்ளது.

### 3.5.11.பெண்கள் மீதான சந்தேகம்

பெண்கள் பிறரிடம் பேசுவதற்கும் பழகுவதற்கும் இச்சமூகம் எல்லைக்கோடு வைத்திருக்கிறது. எந்நேரமும் அக்கோடு, கண்காணிக்கப்படும் என்பதை,

***"அடுத்த வீட்டிற்குள் குலை தள்ளிவிடுமோ***
***என்கின்ற பதட்டத்துடன்***
***வளர்க்கப்படும் என் வீட்டு வாழையால்***

46. குட்டி ரேவதி, முலைகள், ப. 38.

**எப்படித் தர இயலும்**
**என்றாவது இளைப்பாற வரும்**
**ஒரு நாடோடிக்கான உணவு**
**பரிமாறப்படும் அகன்ற பச்சை இலையை"**[47]

என்று தமிழச்சி தங்கபாண்டியன் தன் கவிதை வழி சுட்டிக்காட்டியுள்ளார். பெண்கள் பிறரிடம் பேசுவதற்கும், பழகுவதற்கும் அனுமதி மறுக்கக் காரணம் அவர்கள்மீது கொண்டுள்ள சந்தேகப் பார்வையே என்பதை இக்கவிதை உணர்த்துகின்றது. இதன்மூலம் பெண் என்பவள் பாதுகாக்கப்பட வேண்டிய பொருளாகச் சமூகம் பார்ப்பதை அறியமுடிகின்றது.

## 3.5.12.திருமணம்

இன்றையச் சமுதாயத்தில் பெண்கள் தக்க வயது வந்ததும் தகுந்த ஆடவனை மணந்து கொள்ளும் நிலையிலும், மணம் புரிந்த பின்னர் மணவாழ்விலும் பல சிக்கல்களைச் சந்திக்க நேரிடுகிறது. அச்சிக்கல்களில் முதன்மையாய் இருப்பது அவர்களது திருமணச் சிக்கல்தான். பல்வேறு காரணங்களால் திருமணம் தடைபட்டு அது பிரச்சினை வடிவம் கொள்கிறது. எனவே, திருமணம் என்பது பெண்ணின் வாழ்க்கையில் முக்கியமான ஒன்றாகக் கருதப்பட்டாலும், பெண்கள் உயர்கல்வி கற்பதற்கும் திருமணமே தடையாக இருக்கிறது என்பதைக் காணமுடிகின்றது.

**"அப்பா, மேலே படிக்கவேணும் என்றேன்**
**தப்பாய் பேசாதே மாப்பிள்ளை பார்த்தாச்சு என்றார்**
**அம்மா, வகுப்பிலே நான்தான் முதல் என்றேன்**
**சும்மா இரு சமையல் தெரியுமா என்றாள்**
**அண்ணனாவது கைகொடுப்பான் என்றால்**
**வண்ணக் கனவில் மூழ்கியிருந்தான்**
**அடுத்தது அவன் முறையாயிற்றே"**[48]

என்ற தாமரையின் கவிதை, திருமணம் என்பது பெண்களின் முன்னேற்றத்திற்குத் தடையாக இருப்பதைச் சுட்டிக்காட்டுகின்றது.

---

**47.** தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப.37.
**48.** தாமரை, மு.நூ., ப. 17.

இவ்வாறு பெண்களின் முன்னேற்றத்திற்குப் பெற்றோர்களும், உற்றார்களும் மிகப் பெரியத் தடையாக இருப்பதை மேற்கண்ட கவிஞர்களின் கவிதை வழி அறியமுடிகின்றது.

### 3.6.சமூகத் தளத்தில் குடும்பம்

"நல்லதொரு குடும்பம் பல்கலைக்கழகம்" என்பார்கள். அதற்கேற்ப சமூக அமைப்பின் உறுப்பினர்களுக்கு மிகப் பெரிய பாதுகாப்பு மையமாகவும், சமூகக் கல்வியைப் பயிற்றுவிக்கக் கூடிய தொழிற்சாலையாகவும் குடும்பம் திகழ்கிறது. குடும்பம் என்ற இலத்தீன் சொல்லுக்கு அடிமை என்றொரு பொருளும் உண்டு. *Fumulus* என்றால் வீட்டு அடிமை என்று பொருள். *Famila* என்பது ஒருவனுக்குச் சொந்தமான அடிமைகளின் எண்ணிக்கையைக் குறிக்கும் சொல்லாகும். *Family* என்ற இலத்தீன் சொல் ரோமானிய வழக்கில் தலைவன் தனக்குக்கீழ் மனைவியையும், குழந்தைகளையும் சில அடிமைகளையும் வைத்திருத்தலைக் குறிக்கக் கூடியதாகும்.

ஒருதார மணத்தில் மனைவியின் விசுவாசத்தை நிலைநாட்டவும், குழந்தைகளின் தகப்பன் இவன்தான் என்பதை உறுதி செய்வதற்கும், ஆணின் முழுமையான அதிகாரத்தைப் பெண்ணின்மீது செலுத்துவதற்கும் குடும்பம் என்ற அமைப்பை ஆண் பயன்படுத்திக் கொண்டான். இக்குடும்ப அமைப்பில் கால்நடைகள் பெருகியதும் ஆணாதிக்கத்திற்கு வழி வகுத்தது. வரலாற்றில் நீண்ட காலமாகத் தாய்வழிச் சமூக மரபு வேரூன்றி இருந்தநிலை இங்கு மிகப் பெரியத் தோல்வியைச் சந்தித்தது. இதனால், ஆண் வீட்டிலும் வெளியிலும் அதிகாரத்தைக் கைப்பற்றிப் பெண்களை இழிநிலைக்குத் தள்ளினான். நீண்ட காலம் நீடித்த இந்த நிலை தற்கால அறிவியல் யுகத்தில் மாற்றம் பெற்று வருவது மகிழ்ச்சிக்குரியதே.

ஒருதார மணத்தில் ஆணே மேலாதிக்கம் செலுத்தினான். திருமணம் செய்து கொண்ட பெண்ணை ஆண் நினைத்தால் மட்டுமே மணமுறிவு செய்யவோ அல்லது மனைவியைத் தள்ளி வைக்கவோ முடியும். திருமண வாழ்வின் எந்தச் சூழ்நிலையிலும்

உண்மையாகவே நடந்துகொள்ள மறுக்கின்ற உரிமை இன்று வரை ஆண்களுக்கே இருக்கிறது. பெண் தவறு செய்தால் கடுமையான தண்டனை விதிக்கப்படுகிறது. மனைவி மட்டும் பிற ஆடவர்களை மனத்தாலும் நினைக்காதவளாக ஒழுக்கத்தோடு இருக்க வேண்டும். கணவனின் சட்டப் பூர்வமான வாரிசுகளுக்குத் தாயாகவும், அவனது வீட்டின் முதன்மையான வேலைக்காரியாகவும், கணவனின் உத்தரவிற்காகக் காத்திருக்கும் ஓர் அடிமையாகவும் குடும்ப அமைப்பில் பெண் இருக்கிறாள்.

குடும்பத்தின் மைய அச்சாக இருப்பது பெண் என்கிற உணர்வு அழுத்தமாக நம்மிடம் உள்ளது. ஒரு வீடு என்கிற கட்டடம், குடும்பம் என்கிற அமைப்பாக மாறுவது அந்த வீட்டில் பெண் என்பவள் இருப்பதால்தான் என்பார்கள். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இவ்வீட்டிற்குள் இருக்கும் பெண்களிடம்தான் சமூகத்திற்கேற்ற குழந்தைகளை வளர்க்கும் பொறுப்பினை ஆண்கள் ஒப்படைத்திருக்கிறார்கள். அப்பணியினைப் பெண்கள் கொஞ்சமும் பிசகாமல் செய்து வருகின்றனர். இதனால்தான் ஆண்கள் கொஞ்சம் அப்படி, இப்படி இருந்தாலும் ஏற்றுக் கொள்கிற சமூகம், குடும்பப் பெண்கள் விசயத்தில் எந்தச் சலுகையும் காட்டுவதில்லை. இதனால், எதையும் மீற முடியாதவளாகப் பெண் கட்டமைக்கப்படுகிறாள். இந்தக் கட்டமைப்பைப் பெண்கள் ஏற்றுக் கொண்டால்தான் அவர்கள் குடும்பப் பெண்களாகச் சமுதாயத்தில் பார்க்கப்படுகின்றார்கள். இதை மீறும்போது பெண்களின்மீது பல்வேறு இழிசொற்களை வீசுகின்றார்கள்.

குழந்தைகளுக்கிடையில் பாலினப் பாகுபாட்டைப் புகுத்தும் கல்விச் சாலைகளுக்கு அடுத்ததாக மிகப்பெரிய அளவில் இப்பணியைச் செய்யக் கூடியது குடும்பம் என்கிற பண்பாட்டுத் தொழிற்சாலைகளாகும். மதம், சமூகம் உள்ளிட்ட நிறுவனங்களோடு ஒப்பிட்டால் குடும்பம் மிகச்சிறிய நிறுவனம்தான். ஆனாலும், பாலினப் பாகுபாட்டைப் புகுத்தி அவர்களைப் பண்படுத்தும் பணியை மிக நுட்பமாகவும், குடிசைத் தொழிலாகவும் செயல்பட்டு வருகிறது. நாம் வாழும் சமூகத்திற்கு ஏற்ப

குழந்தைகளை ஆணாகவும் பெண்ணாகவும் பாலினப் பாகுபாட்டோடு வளர்த்தெடுக்கும் இடமாகவே குடும்பம் இருக்கிறது.

## 3.7.குடும்பத் தளத்தில் பெண்கள்

குடும்ப அமைப்பானது ஆணைத் தலைவனாகக் கொண்ட ஆதிக்க அமைப்பாகும். இதில் பெண்ணின் பங்களிப்பு ஆணைக் காட்டிலும் அதிகமாக இருந்த போதிலும், பெண் ஆணின் துணைமையாகவே கொள்ளப்பட்டிருக்கிறாள். பெண்ணின் எல்லா வளங்களையும் சுரண்டும் ஆண், குடும்பத்தில் முதன்மை பெறுவதால் பெண் ஆணைச் சார்ந்தே வாழ வேண்டியவளாக ஆக்கப்பட்டாள். கலாச்சாரம், பண்பாடு, சடங்குகள் ஆகிய ஆண் மைய அமைப்புகள் பெண்ணைச் சிறைப்பிடித்துக் கொண்டதால், பெண்ணானவள் மரபுசார்ந்த பணிகளைச் செய்யும் கொத்தடிமையாகவே குடும்பத்தில் உழல்கிறாள். இதனால் அவளது உழைப்பு ஆண்களால் சுரண்டப்படுகிறது.

உலக வாழ்க்கை குறித்த விழிப்புணர்வைப் பெண் பெறாத அளவிற்குக் குடும்பத்திற்குள்ளேயே எல்லை கட்டப்பட்டாள். பணிக்குச் செல்லும் பெண்களோ இரட்டைச் சுரண்டலுக்கு ஆளாகி, இருவேறு தளங்களில் சுயமிழந்து கொண்டிருக்கிறார்கள். குலமகள், கற்பு, விருந்தோம்பல் போன்ற ஒழுக்கங்கள் பெண் ஒழுக்கங்களாக வலியுறுத்தப்பட்டதால், ஆணாதிக்க மூளைச் சலவைக்குப் பெண்கள் ஆளாகிப் போனதை உணரமுடிகின்றது.

இந்தியக் கூட்டுக் குடும்பங்களிலும் தனிக்குடும்பங்களிலும் இருக்கும் பெண்ணடிமைத் தனங்களைச் சுட்டிக்காட்டும் கவிஞர்களின் கவிதைகள் விடுதலைக்கான முயற்சிகளையும், ஆதிக்கத் தனங்களைத் தகர்ப்பதற்கான சக்தியையும் நேர்மையாக முன்வைக்கின்றன. அடிமை உலகத்தில் இருக்கும் பெண்ணினத்திற்கு விழிப்பூட்டும் கூர்மையான கவிதைகளையும் கவிஞர்கள் படைத்திருக்கிறார்கள் என்பதை அறியமுடிகின்றது.

தாலி கட்டிய பெண்கள், தாலியேறாதப் பெண்கள், தாலியறுந்த பெண்கள் என்று திருமணம் என்ற ஆணாதிக்க அமைப்பால் பெண்கள் இன்னும் பல வகைகளில் இன்னல்களுக்கு ஆட்பட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பதைக் கவிஞர்களின் கவிதைகள் படம்பிடித்துக் காட்டுகின்றன.

"கணவனே கண்கண்ட தெய்வம்" என்ற ஒரு கோட்பாடு பெண்களுக்குக் கற்பிக்கப்படுகிறது. இந்நிலை, பெண் தன்னைப்பற்றியும் தன் வாழ்வியலைப் பற்றியும் சமூகத்தில் உள்ள பிற பெண்கள் நிலை குறித்தும் சிந்திக்காது இத்தகு எண்ணங்களை வளர்க்கவே துணையாகிறது. பெண்கள் தங்களது சிக்கலான வாழ்வைப் பெரும்பாலும் வெளிப்படுத்துவது இல்லை. இத்தகைய போக்கில் மாற்றம் ஏற்படுவதைக் கவிதைகள் வெளிப்படுத்துகின்றன.

**"கணவனும் தெய்வமும் ஒன்றுதான்**
**கல்வடிவம்**
**கரம்பிடித்த நான் தொட்டுக்**
**கண்ணீர்ப் பூக்களால்**
**அர்ச்சிக்கிறேன்!**
**என் கடவுள்**
**கரையவில்லையே!**
**நான் தான் கரைந்துவிட்டேன்!**
**...... ...... ..........**
**இப்போது**
**நான் அம்மிக்கல்**
**எங்களுக்கு இடையில்**
**ஒரு குழவிக்கல்?"**[49]

எனும் கவிதை, கருத்தொற்றுமை இல்லாத இல்லறச் சூழலைக் காட்டுகிறது. கணவனே கண்கண்ட தெய்வம் எனும் பழமொழியைத் திறனாய்கிறது. மனைவி உள்ளத்தால் கல்லாக மாறத்தக்க சூழல் உள்ளதையும் மண வாழ்க்கை என்பதே சடங்குத்தனமாக

49. புவியரசு, இதுதான், ப.45.

அமைந்துவிடுவதால் பெண் அதற்குள் உழலவேண்டியுள்ளதையும் கூறுகிறது. கணவன் மனைவியருக்குள் தேவையான புரிதல் இல்லாத நிலையும் சுட்டிக்காட்டப்படுகிறது.

***"அப்படித்தான் ஒரு முறை***
***எங்கள் தெருவிலே***
***வேசி ஒருத்திக்காய்***
***பரிந்து பேசினார் அப்பா***
***திகைத்துப் போனோம்***
**..........     .......**
***இன்னொரு நாள்***
***வாய்க்கு வந்ததை யெல்லாம்***
***வார்த்தையால் கொட்டிய அப்பா***
***அம்மாவைப் பார்த்துச் சொன்னார்***
***'நீயும் வேசிமவ தான'***
***ஒருக்களித்த கதவுமறைவில்***
***சீரழிந்த வாழ்வை***
***கதை கதையாய்ப் படித்து***
***கண்ணீர் சிந்துவாள் அம்மா"***[50]

என்ற கவிதை கணவன்- மனைவி உறவில் பிணைப்பற்ற நிலையைச் சுட்டுகிறது. கணவனின் செயலை நேரடியாகக் கண்டிக்க இயலாத இல்லத்தரசியின் வாழ்வியல் கதவு மறைவில் அவளது உணர்ச்சியைக் கொட்டித் தீர்ப்பதையே இன்றைய சமூகம் அனுமதிக்கிறது. தன்வாழ்க்கை சீரழிந்து விட்டது என்பதைக்கூட வெளிப்படையாகக் கூற இயலாதவாறு ஆணாதிக்கக் கட்டமைப்பு குடும்ப நிலையில் உயர்ந்து நிற்பதை இக்கவிதை வரிகள் எடுத்துரைத்துள்ளன.

## 3.8.மரபு சார்ந்த பணிகளில் பெண்கள்

பெண்கள் காலங்காலமாகக் குடும்பத்தில் மரபு சார்ந்த பணிகளையே செய்து வருகின்றனர். இதனால் பெண், ஆணைக்காட்டிலும் அதிகம் ஊடல் கொள்கிறாள். இதனை,

---

**50.** ஆ.சுப்பிரமணியம், என்றொரு மௌனம், ப. 92.

**"உப்புஅமைந் தற்றால் புலவி அதுசிறிது**

**மிக்கற்றால் நீள விடல்"**[51]

என்று வள்ளுவர் அறிவுறுத்தியுள்ளார். இவ்வாறு, ஊடலுக்கு உவமையாக உப்பு சொல்லப்பட்டதிலிருந்து, பெண்கள் இல்லத்தில் உறைந்து மரபு சார்ந்த குடும்பப் பணிகளை மட்டுமே செய்து வந்திருக்கிறார்கள் என்பதை அறியமுடிகின்றது.

ஊடல் இங்கு விமர்சிக்கப்பட்டிருப்பதன் மூலம் ஆணின் மீதான பெண்ணின் எதிர்ப்புணர்வுக்கும் போர்க்குணத்திற்கும் தடை உருவாக்கப்படுகிறது. மேலும்,

**"மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை**

**எனைமாட்சித் தாயினும் இல்"**[52]

என்ற வள்ளுவரின் புகழ்ச்சி மாயையில் பெண், இல்லத்தில் சிறைகொள்ளப்பட்டு உழைப்புச் சுரண்டலுக்கு ஆளாகியிருக்கிறாள். இவ்வாறு, குடும்ப அமைப்பில் பெண்களுக்கு எதிரான ஆதிக்கம் நிகழ்ந்துள்ளதை வள்ளுவத்தின் வழி அறியமுடிகின்றது.

## 3.9.பெண் அன்றும், இன்றும்

தாய், தலைமை ஏற்ற சமூகமே மனித சமூகத்தின் தொடக்க காலமாகும். தலைமைப் பண்பும், ஆளுமைப் பண்பும் கொண்டிருந்த பெண் தலைமைச் சமூகமானது, ஆதிக்கச் சமூகமாக உருவெடுத்த ஆணாதிக்கச் சமூகத்தால் திட்டமிட்டு வீழ்த்தப்பட்டது. ஆண் வர்க்கத்தின் கற்பிதங்களால் பெண்ணினம் தன் சுயங்களையும் அடையாளங்களையும் இழந்தது. வேட்டையாடுதல், உணவு சேகரித்தல், உயிர்களைக் காத்தல், போர் செய்தல் என்னும் பணிகளில் தன் திறனையும் துணிவையும் வெளிப்படுத்திக் கொண்ட ஆதிப்பெண் சமூகமானது இன்று உரிமை இழந்து நிற்கும் பெண் அடிமை நிலையை,

---

**51.** குறள். 1302.

**52.** மேலது, 52.

**"நூற்றாண்டுகள் ஓடின**

**......................**

**பந்தையங்களில் பணயமாக்கப்பட்டேன்**

**கோயில்களில்**

**விக்கிரங்களாக்கப்பட்டேன்**

**எனக்காகப் போர் தொடுத்தார்கள்**

**காவியம் படைத்தார்கள்**

**உடைமையாய் உரியவளாய்**

**உயிரற்ற ஜடப்பொருளாய்**

**ஆகிப் போனேன்"**[53]

என்று கவிஞர் கனிமொழியின் கவிதை எடுத்துக்காட்டுகின்றது. ஆண் சமூகத்தின் வஞ்சக வரலாற்றினையும், அதனால் ஏற்பட்ட பெண்ணடிமை நிலையினையும் இக்கவிதையானது படம்பிடித்துக் காட்டியுள்ளது.

தாய்வழிச் சமூகம் வீழ்த்தப்பட்டு தந்தை வழிச் சமூகத்தின் தோற்றத்திற்குப் பிறகு, பெண்கள் பந்தயங்களில் பணயப் பொருளானதையும், ஆண்களுக்கான இலக்கியங்களில் அழகியல் கருவாகவும், பெண்ணின் கற்பைக் காப்பாற்றும் பொருட்டு, ஆணுக்குள் எழுந்த வீரத்தின் வெளிப்பாடாகப் போர்கள் நிகழ்த்தப்பட்டுள்ளதையும் அறியமுடிகின்றது.

இவ்வாறு, ஆண்களின் உடைமைப் பொருளாக ஆக்கப்பட்ட பெண்ணினம், குடும்பத்திலும் சமுதாயத்திலும் இன்னும் அடிமை வலிகளை அனுபவித்துக் கொண்டிருக்கிறது. குடும்பம், சமுதாயம் இரண்டுமே ஆண்களின் மைய ஆதிக்க அமைப்புகளாகவே இருக்கின்றன. இந்த ஆண் சமூகக் கட்டமைப்புக்குள் வாழும் பெண்களின் சிக்கல்களையும், சிக்கல்களுக்கானத் தீர்வுகளையும் கவிஞர்களின் கவிதைகள் எடுத்துரைக்கின்றன.

---

**53.** கனிமொழி, கறுக்கும் மருதாணி, ப. 41.

## 3.10.ஆணாதிக்கப் போக்கு

தாய்வழிச் சமூகத்தை வீழ்த்திய பிறகு தந்தைவழிச் சமூகம் உருவாயிற்று. மீண்டும் தந்தைவழிச் சமூகம் தாய்வழிச் சமூகத்தால் வீழ்த்தப்படாமல் இருக்கக் குடும்பத்திலும் சமூகத்திலும் ஆண் கட்டமைப்புகள் உருவாக்கப்பட்டு நடைமுறைப்படுத்தப்பட்டன. கலை, இலக்கியம், சமயம், அரசியல் போன்றவை ஆண்களின் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவரப்பட்டன. ஆகையால், அனைத்து நிலைகளிலும் பெண்ணானவள் தன் சுதந்திரத்தை இழந்தாள். பெண்களை அடிமையாக வைத்திருக்கத் தொடர்ந்து தன் ஆதிக்கத்தை ஆண் செலுத்தி வந்தான். காலந்தோறும் பெண்ணினத்தின்மீது ஆண் வர்க்கம் எத்தகைய வியூகங்களை அமைத்துத் தன் வன்மத்தைக் காட்டியுள்ளது என்பதைக் கவிதைகளின் வழி அறியமுடிகின்றது.

## 3.11.ஆணாதிக்கத் தோற்றப் பின்னணி

தாய்வழிச் சமூகம் என்றழைக்கப்படும் பெண்ணின் ஆதிக்க உலகை வீழ்த்தி, தந்தைவழிச் சமூகம் தோற்றுவிக்கப்படுவதற்கு ஆண் வர்க்கம் கையாண்டு வந்த நேர்மையற்ற அணுகுமுறையை,

***"சக்தியே***
***காலைத்தூக்கி ஆடிய***
***உன்னை ஜெயித்த***
***வெக்கங் கெட்ட வரலாறு***
***எங்களுடையது"***[54]

என்ற அப்துல் ரகுமானின் கவிதை உணர்த்துகிறது. ஆணாதிக்கத்தால் தாய்வழிச் சமூகம் வீழ்த்தப்பட்டது என்றும், ஒவ்வொரு பெண்ணின் தோல்விக்கும் அடிமைத்தனத்திற்கும் ஓர் ஆண்தான் காரணமாகிறான் என்றும் அறியலாம். பார்வதியைப் பெண் சமூகத்தின் அடையாளமாகவும், சிவனை ஆதிக்க சமூகத்தின் பிரதிநிதியாகவும் பிரதிபலித்தது. இந்த ஆண் சமூகத்தின் வஞ்சக வெற்றியைக் கவிஞர் எள்ளிநகையாடி இருப்பதை இக்கவிதைவழி அறியமுடிகின்றது.

---

**54.** அப்துல் ரகுமான், கவிக்கோ கவிதைகள், ப. 288.

எனவே, தந்தைவழிச் சமூகத்திற்கு முன்பு தாய்வழிச் சமூகம் கட்டமைக்கப்பட்டுள்ளதையும், இந்தத் தாய்வழிச் சமூகத்தை வீழ்த்தி தந்தைவழி ஆணாதிக்கச் சமூகம் தன்னை நிலை நிறுத்திக் கொண்டுள்ளதையும் கவிதைகள்வழி அறியமுடிகின்றது.

## 3.12.ஆணாதிக்கத்தின் மூளைச்சலவை

இந்தியப் பெண்களின் வாழ்வின் ஒவ்வொரு நிலையிலும் ஏதாவது ஒரு சூழ்நிலையால் ஆண் ஆதிக்கம் செலுத்துகிறான். பெண்ணின் தந்தை, கணவன், மகன் என்ற மூவரால் பெண் அரவணைக்கப்படுபவளாக விளங்குகிறாள் என்பதை,

**"முன்பெல்லாம்**
**ஆண்டாள் படிக்கச் சொன்ன**
**அப்பா**
**இன்று**
**பட்டினத்தாரும்**
**பரவாயில்லை என்கிறார்**
**அவள்**
**பெருமூச்சு வெப்பத்தில்**
**மூக்குத் தங்கமும்**
**இளகுதே"**[55]

என்னும் வைரமுத்துவின் கவிதை வெளிப்படுத்துகின்றது. வரதட்சணைக் கொடுமையால் முதிர்கன்னியாக இருக்கும் பெண் எவ்வாறு மூளைச்சலவைக்கு ஆளாக்கப்பட்டு குடும்ப அடிமையாக இருக்கிறாள் என்பதை இக்கவிதை எடுத்துரைக்கிறது. இங்கு பட்டினத்தார் என்னும் தொன்மப் பாத்திரம் ஒரு பருவப் பெண்ணின் திருமண விருப்பத்தைச் சிதைப்பதற்காகப் படைக்கப்பட்டுள்ளதை உணரமுடிகின்றது.

---

55. வைரமுத்து கவிதைகள், பக். 229-230.

## 3.13.சுமைதாங்கி

தந்தை வழிச் சமூகத்தில் வேரூன்றிவிட்ட சில கருத்தியல்களும் ஆணின் சுயநலமும் பெண்களைச் சுமைதாங்கிகளாக மாற்றுகின்றன. பெண்கள் பிறந்தது முதல் பலவற்றையும் சுமக்க வேண்டியிருக்கிறது. கற்பு, கர்ப்பம், குழந்தை எனப் பல்வேறு குடும்பச் சுமைகள் அவள்மீது திணிக்கப்பட்டு சோர்ந்து போகிறாள். இதனால் அவளுக்கு ஏற்பட்ட வெறுப்பை,

**"மூளியாகும் உடம்பைவிட**
**காற்றுக்கும் மழைக்கும்**
**அழுத்தமாய் நிற்கும்**
**சுமைதாங்கிக் கல்லாய்ப் பிறந்து தொலைக்கலாம்"**[56]

என்ற சுகிர்தராணியின் கவிதை எடுத்துரைக்கின்றது. இதன்மூலம் காலங்காலமாகப் பெண்கள் குடும்பச் சுமைகளைச் சுமக்கும் சுமைதாங்கிகளாகவே வாழ்ந்து வருகின்றனர் என்பது பெறப்படுகின்றது.

## 3.14.திருமணப்பந்தம்

பெண்ணுக்குப் பிறந்த வீடு, புகுந்த வீடு என்று வாழ்க்கையில் இருநிலை உள்ளது. திருமணம் உறுதி செய்யப்பட்ட காலத்திலேயே பெண்ணானவள் அடுத்த வீட்டுப் பெண்ணாக மாறி விடுவதாகச் சமுதாயம் கட்டமைத்துள்ளது. திருமணத்தில் மாப்பிள்ளை வீட்டாரின் பக்கமே முடிவுகள் எடுக்கும் நிலை பெரும்பாலும் இருக்கும். திருமணத்திற்குப் பின்னர் ஏதேனும் சிக்கல் ஏற்பட்டால், மாப்பிள்ளை வீட்டார் மனது வைத்தால் மட்டுமே அச்சிக்கல் தீரும். இல்லையெனில், அப்பெண்ணின் வாழ்க்கை தனிமைப்படுத்தப்படும்.

**"சடைத்துக் கொண்டு**
**கிளம்பிப் போன**
**புதுமாப்பிள்ளைக்காகக்**
**காத்திருக்கும் பெண் வீடு போல**

---

56. சுகிர்தராணி, கைப்பற்றி என் கனவு கேள், ப. 50.

***கோடை வெயிலுக்குக் காத்திருக்கிறது***
***கிராமம்”***[57]

என்று தமிழச்சி தங்கபாண்டியன் தன் கவிதை வழி, பெண்களுக்குத் திருமண பந்தத்தால் ஏற்படும் சிக்கல்களை மிகத் தெளிவாக வெளிப்படுத்தியுள்ளார்.

## 3.15.தாலி-மரபுக்குறியீடு

திருமணத்திற்குப் பிறகு பெண்கள் கழுத்தில் மங்கலநாண் என்ற பெயரில் தாலி அணியும் வழக்கம் ஏற்பட்டது. இது திருமணம் ஆனதற்கான அடையாளமாகப் பெண்களுக்கு மட்டும் விதிக்கப்பட்ட குறியீடாகும். ஆனால், பெரியார் தாலி அணிய வேண்டிய தேவை பெண்ணுக்கில்லை என்று மறுத்துக் கூறியிருந்தாலும்கூட, தாலி என்பது மரபுவழி வந்த பெண்ணடிமைத் தனத்திற்கான குறியீடு என்பதை,

***"தாலிக் கயிறு ஒரு***
***ஆயுள் தண்டனையின்***
***கழுத்து விலங்காகாது!***
***திரவப் பெண்மைக்குத்***
***திடப்பொருள் கிண்ணமாய்***
***ஆண்மை இருக்குமங்கே!***
***ஆண்மையுடன் போட்டியிடும்***
***ஆவேசத்தில் அங்கே***
***மெல்லிய பெண்மை***
***மீசை வளர்க்காது”***[58]

என்ற அப்துல் ரகுமானின் கவிதை உணர்த்துகின்றது. இவ்வாறு ஆண், பெண் என்ற அடையாளங்கள் புறநிலையிலும் போற்றப்பட்டுள்ள போக்கைக் காணமுடிகின்றது.

## 3.16.மனைவியைத் துன்புறுத்தல்

ஆண்கள், பெண்களின்மீது கொள்ளும் சந்தேகம் அவர்களை மன உளைச்சலுக்கு ஆளாக்கி விடுகிறது. ஆணாதிக்க வெளியின் எல்லை பரந்துபட்டது என்பதை,

---

**57.** தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப. 138.
**58.** அப்துல் ரகுமான், நேயர் விருப்பம், ப. 63.

**"விபசாரியின் மறைவிடங்களில்**
**பதுங்கித் திரிபவனென்கிற**
**உன் கற்பனைகளைக் கேட்ட படி**
**இங்கேதானிருந்து கொண்டிருக்கிறேன்**
**என் நண்பனொருவனின் அடையாளம் சொல்லி**
**இவன் உங்கள் தகப்பனெனவும்**
**தன் குழந்தைகளைக் கொன்ற தாய்க்கு**
**என் சாயல்கள் அதிகமெனவும்**
**நம் குழந்தைகளுக்கு நீ சொல்கையில்**
**பிடிபடுகிறது**
**உன் ஆதிக்க வெளியின் எல்லை**
**என்னோடு மட்டும் முடிவதில்லை**
**என"**[59]

சல்மா தன் கவிதைவழி வெளிக்காட்டியுள்ளார். இவ்வாறு ஆண்கள், பெண்கள்மீது சந்தேகம் கொள்ளும் நிலையானது சமூகத்தில் வேரூன்றி காணப்படுவதை இன்றும் காணமுடிகின்றது.

நடு இரவில் வீடு திரும்பும் ஆடவன் ஒருவன், விடிந்த பிறகு மனைவியும் குழந்தையும் இல்லாத வீட்டில் அவள்மீது சந்தேகப்பட்டு, அவள் தொடர்பான அனைத்தையும் சோதனை இடுகிறான். இறுதியில் அவனுக்கு ஏமாற்றந்தான் கிடைக்கிறது. வீட்டைப் பூட்டி விட்டு வெளியேறும் அவனது செயலை,

**"குவளையில்**
**நுரைத்து வழியும் அதிருப்தியையும்**
**மதுவிடுதியின் சுவரில் தொங்கும்**
**ஆடையற்ற பெண்களையும் விழுங்கி**
**நொதித்த குடுவையாய் வழிந்த**
**புளித்த வண்டலின் கசடாக**
**மிதக்கிறான்.**
**பூமி தன்னைத் தானே**
**ஒரு முறை சுற்றிக் கொள்கிறது"**[60]

---

59. சல்மா, பச்சைத் தேவதை, ப. 18.
60. மாலதி மைத்ரி, நீலி, ப. 33.

என்ற மாலதி மைத்ரியின் கவிதையானது சுட்டிக்காட்டுவதாய் அமைந்துள்ளது.

## 3.17.வீட்டுச்சிறை

ஆண்கள் தாங்கள் வைத்துக் கொண்டுள்ள உரிமை காரணமாக எந்நேரத்திலும் எவ்விடத்துக்கும் சென்றுவரத் தடையில்லை. ஆனால், இல்லத்தரசிகளாகிய பெண்கள் அவ்வாறு செல்லமுடியாத நிலை உள்ளது. பெண்களுக்கு இல்லமே பாதுகாப்பு என்ற கருத்தை உருவாக்கி அவர்களை வீட்டுக்குள் சிறை வைத்துவிட்ட நிலையினை,

*"பூப்போன்ற பெண்மை புவியாளுமென்று*
*புகழாரம் தனைச் சூடுவார் ~ தெய்வம்*
*நிகரென்றுக் கவிபாடுவார் ~ வாழக்*
*காப்பொன்று தேடிப் புகுந்தாளை வீட்டில்*
*கண்மூடிச் சிறையாக்குவார் ~ பெண்ணை*
*கடிந்தின்பச் சுவை காணுவார்"*[61]

என்ற கவிதை சுட்டிக்காட்டுகின்றது. பெரும்பாலான இல்லத்தரசிகள் தங்கள் வாழ்நாளின் பெரும்பகுதியை வீட்டுக்குள்ளேயே கழிக்க வேண்டிய நிலை இருப்பதை இக்கவிதை புலப்படுத்துகின்றது.

## 3.18. மாமியார் கொடுமை

இல்லத்தரசிகளாக இருக்கும் பெண்கள் பல்வேறு கொடுமைகளை அனுபவிக்க வேண்டியிருக்கின்றது. அதிலும் குறிப்பாக மாமியார் கொடுமை என்பது காலங்காலமாகத் தொடர்ந்து அரங்கேறி வருகின்றது. மாமியாரால் ஏற்படும் கொடுமையினை நா.முத்துக்குமார் தமது கவிதையில் சுட்டிக்காட்டியுள்ளார்.

*"சிலவேளைகளில் இங்கு*
*இரவுகளில்*
*உஷ்ணம் தாங்காமல்*
*ஓட்டுக் கூரையிலிருந்து*
*தேள்கள் விழுகின்றன*

61. பாவலர் கருமலைப்பழம்நீ, அழகி, ப.34.

நான் சுத்தமாக இல்லாததுதான்

இதற்கு காரணமென்று

மாமியார் முணுமுணுக்கிறாள்.

ஆரம்பத்தில்

ஒழுங்காயிருந்த இவர்

இப்போதெல்லாம் குடித்துவிட்டு

அகாலத்தில் வீடு திரும்புகிறார்"[62]

என்னும் இக்கவிதை இல்லத்தரசியாக இருக்கும் மருமகளுக்கு மாமியாரால் கிடைக்கும் வசவினையும் கொடுமையையும் உணர்த்துவதோடு, குடிகாரக் கணவனின் இயல்பையும் சுட்டிக்காட்டுகின்றது.

## 3.19.காவல்நிலையத்தில் பெண்களின்நிலை

சமூகத்தில் கணவன் மனைவிக்கிடையே கருத்து வேறுபாடு ஏற்பட்டால், அக்கருத்து வேறுபாட்டினைத் தீர்ப்பதற்காகக் காவல் நிலையத்தை அணுகவேண்டியுள்ளது. அவ்வாறு, பாதிக்கப்பட்ட பெண்கள் காவல் நிலையத்திற்குச் செல்லும்போது அங்கும் பெண்களுக்குப் போதிய பாதுகாப்பு இன்மையால் பெண்கள் பாலியல் சிக்கல்களுக்கு ஆளாகநேரிடுகின்றது என்பதை,

"உடைந்து கிடந்தன

வளையல் துண்டுகள்

உதிர்ந்து கிடந்தன

மல்லிகைப் பூக்கள்

புகைந்து கொண்டிருந்தது

சிகரெட் துண்டு

கிழிந்து கிடந்தது

ரவிக்கை

காவல் நிலையத்திற்குப் பின்னால்

ஆணுறைகள்"[63]

என்று கவிதையாக்கியுள்ளார் கவிஞர் பழநிபாரதி.

---

**62.** நா.முத்துக்குமார் கவிதைகள், ப. 99.

**63.** பழநி பாரதி, காதலின் பின் கதவு, ப. 39.

## 3.20. பெண்-சில கேள்விகள்

காலங்காலமாகப் பெண்கள் இயற்கையோடு ஒப்பிட்டுப் பேசும் அளவிற்கு பெருமை பெற்றவர்களாக விளங்கி நிற்பதை அறியமுடிகின்றது. அந்த அடிப்படையில் ஒவ்வொரு நிகழ்விலும் தன்னை ஈடுபடுத்தியிருக்கும் பெண் யாராக இருக்க முடியும் என்பதைக் கவிஞர் கவிதையாக்கியுள்ளார்.

**"முதன் முதலாக**
**பெண்ணை வருணிக்கத்**
**தேர்ந்தெடுத்த வார்த்தை எது**
**ஆதாமின் முத்தம்**
**ஏவாளின்**
**எந்த பாகத்திற்கு**
**முதலில் கிடைத்திருக்கும்**
**பெண்ணின் கூந்தலுக்கு**
**முதன்முதலில்**
**சூட்டப்பட்ட பூ எது**
**பெண்**
**முதன்முதலில்**
**எதற்காக**
**ஆடைக்குள் தன்னை**

**மறைத்துக் கொண்டாள்"**[64]

என்ற கவிதையின்மூலம் சில வினாக்களை முன்வைத்துள்ளார் கவிஞர் பழநிபாரதி.

**"பெண்ணின் கண்ணீர்**
**முதன்முதலாக**
**எதன் பொருட்டு**

64. பழநிபாரதி, காதலின் பின் கதவு, ப. 30.

சிந்தப்பட்டிருக்கும்

கற்பென்பது

முதன்முதலில்

எந்தப் பெண்மீது

எதற்காகத் திணிக்கப்பட்டது

முதன்முதலாய்

உடன்கட்டை ஏற்றப்பட்ட பெண்

உயிரோடு எறிகையில்

கடைசியாய்

என்ன நினைத்திருப்பாள்"[65]

என்று பெண்களை உடன்கட்டை ஏற்றியபோது பெண்களின் நிலை எவ்வாறு இருந்திருக்கும் என்று வினாத் தொடுக்கின்றார் கவிஞர்.

காலங்காலமாக அடிமையாக்கப்பட்ட பெண்ணினம் எப்போது? யாரால்? மீண்டிருக்கும் என்கின்ற வினாவை முன்வைக்கின்றார் கவிஞர் பழநிபாரதி.

"வரதட்சணையால்

சபிக்கப்பட்ட

முதல் முதிர்கன்னி

மாதவிலக்கும் நின்றுபோனதை

யாரிடம் சொல்லியிருப்பாள்.

தாய்ப்பாலுக்குப் பதில்

கள்ளிப்பால் ஊட்டப்பட்ட

முதல் பெண் சிசு எது?

ஆண்களின் தேசத்தில்

கேள்விகளுக்குள் சிக்கிய

பெண்ணை மீட்க

எந்தப் பெண்

---

65. மேலது, ப. 32.

*முதன் முதலில்*

*பேராசிரியானாள்?.*"[66]

இவ்வாறு பெண்கள் தங்களுக்கு ஏற்பட்ட கொடுமைகளை எண்ணி மனம் நொந்து வாழ்க்கை நடத்தியிருக்க வேண்டும். இதுபோன்று இல்லத்தரசிகள் சந்திக்கும் வாழ்வியல் சிக்கல்களை இருபால் கவிஞர்களும் தத்தம் கவிதைகளின்வழி வெளிப்படுத்தியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். இல்லத்தரசிகள் சந்திக்கும் சிக்கல்களை தம் கவிதைகளில் கவிஞர்கள் எடுத்துரைப்பதன்மூலம் இச்சிக்கல்கள் சமுதாயத்தில் தீர்க்கப்பட வேண்டும் என்ற செய்தி பெறப்படுகின்றது.

## 3.21.முடிவுரை

- பெண்கள் குடும்பத்திலும், வெளியிடங்களிலும் எதைப் பேச வேண்டும் என்பதை ஆண்கள் அதிகாரத்தின்பேரில் தாங்களே முடிவு செய்கின்றனர் என்பதை அறியமுடிகின்றது.
- சமூக மாற்றம் என்பது தானாக நடப்பது இல்லை. அதற்கு ஒவ்வொரு பெண்ணும் தன்னை மீட்டெடுக்க வேண்டும் என்ற சிந்தை எழுச்சியுடன் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.
- பெண்களுக்குத் திருமணம்தான் முழுமையான வாழ்வாகக் கருதப்பட்டாலும், அதன் பின்னர் ஏற்படும் குடும்பச் சிக்கல்களை எவ்வாறு எதிர்கொள்கிறாள் என்பதைக் கவிதைகளின் வழி அறியமுடிகின்றது.
- குடும்பத்தில் தன் கணவனையே சார்ந்து வாழ வேண்டியவளாகவும், தனக்கென்று தனி விருப்பு, வெறுப்புகளுக்கு இடம் கொடுக்கும் வாய்ப்பு இல்லாதவளாகவும் பெண் விளங்க வேண்டியவளாகிறாள். இவ்வகையான

---

66. பழநிபாரதி, காதலின் பின் கதவு, பக். 32-33.

கட்டுப்பாடுகளில் இருந்து வெளிவரவோ, சிந்திக்கவோ இயலாதபடி நடைமுறைக் கயிற்றால் கட்டப்பட்டிருப்பதை உணரமுடிகின்றது.

❖ இல்லற வாழ்க்கையில் மனைவி, கணவனோடு உடன்பட்டுப் போக வேண்டும். குடும்பத்தாரின் மனம் விரும்பத்தக்க வாழ்வு வாழ வேண்டும் என்றும், தாய்மைப்பேறு அடைய வேண்டும் என்னும் பல கட்டுப்பாடுகள் விதித்திருந்ததை அறியமுடிகின்றது.

❖ வீட்டு வேலைகளில் பெண்ணானவள் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டு ஓய்வின்றியும், சம்பளம் இல்லாத வேலைக்காரியாகவும், இல்லப் பணியாற்றும் இயந்திரமாகவும் பெண் தனது காலத்தைக் கழிக்கிறாள் என்பதை அறியமுடிகின்றது.

❖ குடும்பத் தலைவியின் பணியைக் கணவனோ, குடும்ப உறுப்பினரோ பங்கிட்டுக் கொள்வது கிடையாது. குடும்பம் என்ற அமைப்பு பெண்களுக்குப் போலியானது. என்பதையும், சொந்த உறவுகளாலேயே பெண்ணானவள் உடல், மன ரீதியாகப் பாதிக்கப்படுவதையும் காணமுடிகின்றது.

❖ ஆணும் பெண்ணும் தங்களுடைய சுயத்தைக் காக்கப் போராட வேண்டியுள்ள நிலையினை அறியலாம். மனைவியின்மீது சந்தேகம் கொள்ளும் கணவனை, கவிதைகளின் வழியாக எள்ளிநகையாடி இருப்பதைக் காணமுடிகின்றது.

❖ பெண்களின் திருமண விருப்பத்தைப் பெற்றோர்களே தீர்மானிக்கின்றனர். அவர்களுடைய வாழ்க்கையைத் தீர்மானிக்கும் அதிகாரத்தைப் பெண்கள் இழந்திருப்பதைக் கவிஞர்களின் கவிதைகள் வெளிப்படுத்தி நிற்கின்றன.

❖ திருமணத்திற்கு முக்கியத்துவம் அளித்து, பெண்ணிற்கு உயர்கல்வி மறுக்கப்பட்டிருப்பதை மேற்கண்ட கவிதைகள் உணர்த்துகின்றன. குடும்பத்

**தளத்திலும், சமூகத் தளத்திலும் பெண்களின் உழைப்பு சுரண்டப்பட்டிருப்பதைக் காணமுடிகின்றது.**

- **காலங்காலமாகப் பெண்கள் குடும்ப அடிமைகளாக வாழ்ந்து வருகின்றனர் என்பதை அறியமுடிகின்றது. குடும்பப் பெண்களின் மீது ஆண் வர்க்கம் செலுத்தும் ஆணாதிக்கப் போக்கினைக் கவிதைகளின்வழி காணமுடிகின்றது.**

- **குடும்பத்தில் உள்ள பெண்களின்மீது அனைத்துப் பொறுப்புகளும் திணிக்கப்பட்டு, கடைசி வரை அவள் குடும்பச் சுமைதாங்கியாகவே வாழ்ந்து வருவதையும் அவர்கள் வீட்டிற்குள்ளேயே சிறைப்படுத்தப்படுவதையும் இக்கவிதைகள் தெளிவுபடுத்துகின்றன.**

- **இவ்வாறு இல்லத்தரசிகளாக இருக்கும் பெண்கள் காலங்காலமாகப் பல்வேறு சிக்கல்களை எதிர்கொள்கின்றனர் என்பதை மேற்கண்ட கவிஞர்களின் கவிதைகள் எடுத்துக்காட்டியுள்ளதை அறியமுடிகின்றது.**



# இயல் - 4

# பெண் குழந்தைகள் எதிர்கொள்ளும் சிக்கல்கள்

## 4.0.முன்னுரை

பெண் குழந்தைகளுக்குச் சிக்கல் என்பது கருவிலிருந்தே தொடங்கி விடுகிறது. கருவிலிருக்கும் குழந்தை எப்படி இருக்கிறது? அக்குழந்தை ஆணா? பெண்ணா? என்று முன் கூட்டியே அறிவதற்குக் கருவிகள், அதிநவீன சாதனங்கள் பயன்பாட்டிற்கு வந்துவிட்டன. இத்தகைய தொழில்நுட்ப வளர்ச்சி கருவை அழிப்பதற்குப் பயன்படுவதாக அமைகின்றது. கல்வி கற்றவர்கள் மத்தியிலும் கூடப் பிறக்கப் போவது பெண்குழந்தை என்று தெரிந்த மாத்திரத்தில் அதனை அழித்துவிட முற்படும் மனப்போக்கே மேலோங்கியுள்ளமை வருத்தத்துக்குரியது. இத்தகையச் சூழ்நிலையில் கல்வியறிவு பெறாத மக்களுக்கு எத்தகைய விழிப்புணர்வைத் தந்து நெறிப்படுத்த முடியும் என்பது சிந்தனைக்குரியது. எனவே, இத்தகைய சூழ்நிலையில் பெண் குழந்தைகள் எதிர்கொள்ளும் சிக்கல்கள் பற்றி ஆராய்வதே இவ்இயலின் நோக்கமாக அமைகின்றது.

## 4.1.பெண் குழந்தைகள்மீதான சமூகத்தின் பார்வை

பெண் குழந்தைகளை வெறுத்து ஒதுக்குவது இன்றளவும் சமுதாயத்தில் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. ஆண் குழந்தை குல வாரிசு என்றும், வரவுக்குரிய செல்வம் என்றும், பெண் குழந்தைகள் குடும்பத்திற்குப் பாரம் என்றும், செலவிற்குரிய பொருள் என்றும் மதிக்கப்படுகிறார்கள். இத்தகைய சூழ்நிலையில் ஒவ்வொரு தாயும் உள்ளத்தாலும் உடலாலும் சித்தரவதைக்குள்ளாகும் நிலை நீடித்து வருகின்றது. பெண் குழந்தைப் பிறப்பிற்குப் பெண்தான் காரணம் என்னும் அடிப்படையில் அவர்களைச் சுற்றியிருக்கும் உற்றாரும் உறவினரும் கணவரும் குடும்பத்தின் இதரபிற அங்கத்தினரும் அவர்களைத் துன்புறுத்துகிறார்கள்.

பெண்குழந்தைப் பிறப்பை இழிவாகப் பார்க்கின்றது இச்சமுதாயம். ஆண்குழந்தைகளுக்கு இச்சமுதாயம் கொடுக்கும் முக்கியத்துவமும், பெண்குழந்தைபால் அது கொண்டிருக்கும் அலட்சியப்போக்கும் ஆண் - பெண் என்ற பாகுபாடு கொண்டு பார்க்கும் இச்சமுதாயத்தின் நேர்மைற்ற தன்மையைச் சுட்டிக்காட்டுவதாக அமைகின்றது.

## 4.2.பாலினப் பாகுபாடு

"ஐயிரண்டு திங்களாய் அங்கமெலாம் நொந்து பெற்றுப்
பையனென்றபோதே பரிந்தெடுத்துச் ~ செய்ய இரு
கைப்புறத்தில் ஏந்தி கனகமுலை தருபவள் தாய்"[1]

பெற்றது பெண் குழந்தை எனில், பெற்ற தாயும் முகம் சுளிக்கும் காலமாக இன்றைய காலம் இருக்கிறது. பெண்ணே அனைத்துச் செயல்களுக்கும் மூலமாக இருக்கிறாள் என்பதையும் மறுபடைப்புச் செய்யும் அதிசயத்தைப் பெற்றவள் என்பதையும் ஆணாதிக்க உலகம் மறந்து விடுகிறது. இயற்கை ஆணைவிட பெண்ணைப் பலம் குறைந்தவளாகவும் பாசம் மிக்கவளாகவும் படைத்துள்ளது என்று பல நூற்றாண்டுகளாகச் சமூகத்தால் வலியுறுத்தப்பட்டு வருகிறது. இதன்காரணமாக, இது உண்மையானது என்று நம்பப்படுகிறது. இதனால், இக்கருத்தைக் கதைகளிலும் காவியங்களிலும் மனுதர்மம் உள்ளிட்ட சட்ட நூல்களிலும் வெளிப்படுத்தியுள்ளனர். என்றைக்கும் ஆணும் பெண்ணும் வேறுபட்டவர்களாகத்தான் இருக்க முடியுமென்று ஏற்றுக்கொள்கிறோமோ அப்பொழுதே மனிதர்களுக்குள் இருவேறுபட்ட நடத்தை, எண்ணம், செயல், நெறிமுறைகள் இருக்க முடியுமென்பதை நாம் ஏற்றுக் கொண்டவர்களாகின்றோம்.

பையன்னா அப்படித்தான் இருப்பான், ஆம்பளையா, இலட்சணமா அதட்டிப் பேச கத்துக்க, என்று ஆண்களுக்குத் தனித்த அடையாளங்களை நாம் எப்பொழுது கற்பிக்கிறோமோ அப்பொழுதே பாலினப் பாகுபாடும் தொடங்கி விடுகிறது. என்னயிருந்தாலும் இவ பொம்பளதானே என்றும், இதெல்லாம் பொம்பளைங்க

1. ஆ. ஜெகதீசன், பாலின சமத்துவம், ப. 37.

சமாச்சாரம் என்றும் ஆணையும் பெண்ணையும் பிரித்து நோக்கும் இந்தக் கருத்தாக்கம் சக்தி வாய்ந்தது. ஒரு குழந்தை பிறந்தது முதற்கொண்டே இதன் தாக்கம் தொடங்கி விடுகின்றது என்கின்றார் ஆ.ஜெகதீசன்.[2]

கருவிலிருக்கும் குழந்தையின் பாலினத்தைக் கண்டறிவது சட்டத்தால் தடை செய்யப்பட்டிருந்த போதிலும், நடைமுறையில் செயல்பாட்டில் இல்லாமல் இருக்கிறது. இதனால், கருவிலிருக்கும் குழந்தையின் பாலினத்தைக் கண்டறிந்து பெண்குழந்தையாக இருந்தால் கொன்றுவிடும் கொடுமை இன்றும் தொடர்ந்த வண்ணம் உள்ளது. உயிர்வாழ அனுமதிக்கப்படும் குழந்தைகளுக்கோ வாழ்வின் ஒவ்வொரு காலகட்டத்திலும் ஒரு நோய் போலத் தொற்றித் தொடர்கிறது.

> "ஒரு குழந்தை பிறந்த உடனேயே குடும்பமும் சமூகமும் பாலினப் பாகுபாட்டோடு அக்குழந்தையை நடத்தத் தொடங்கி விடுகின்றது. இதனால் எதிர்காலத்தில் எது இயற்கை, எது சமூகக் கட்டமைப்பு என்பதை நிலைநாட்டுவது மிகவும் கடினமாக உள்ளது. அனேகத் தெற்காசியக் கலாச்சாரங்களில் ஒரு ஆண் குழந்தையின் பிறப்புக் கொண்டாடப்படுகிறது. பெண் குழந்தையின் பிறப்புக்குத் துக்கம் அனுசரிக்கப்படுகிறது. ஆண் குழந்தைகள் அன்பு செலுத்தப்படுகிறார்கள், மதிக்கப்படுகிறார்கள், நல்ல உணவு கொடுக்கப்பட்டு உடல்நலம் பேணப்படுகிறார்கள்"[3]

என்று பாலினப் பாகுபாடு ஏற்படுவதைப் பற்றி ஆ. ஜெகதீசன் எடுத்துரைப்பதை ஒப்புநோக்கலாம்.

ஆண்கள் முரட்டுத்தனமாக இருக்கவும், தான் நினைத்த இடங்களுக்குச் சென்று வரவும் அனுமதிக்கப்படுகிறார்கள். பெண் குழந்தைகள் அமைதியாக வீட்டிற்குள்ளேயே இருக்க வலியுறுத்தப்படுகிறார்கள். சைக்கிள் ஓட்டவும் மரம் ஏறவும் குட்டைக்கால் சட்டை அணியவும் தடையாக உள்ள எதுவும் ஒரு சிறுமியின் உடலில் இல்லை. வீட்டை சுத்தம் செய்யவும் சமையலில் உதவவும் குழந்தைகளைப்

---

2. ஆ.ஜெகதீசன், மு.நூ., பக். 37-38.
3. மேலது, ப. 38.

பாதுகாக்கவும் பராமரிக்கவும் பொம்மைகளுடன் விளையாடவும் தடையாக உள்ள எதுவும் சிறுவர்கள் உடலில் இல்லை. இந்த வேறுபாடுகள் எல்லாம் பாலினப் பாகுபாட்டால் சமுதாயத்தில் உருவாக்கப்பட்டவையாகக் கருதப்படுகின்றது.

## 4.3.பெண் குழந்தை பிறப்பு

பெண்களின் பிறப்பு பெருமைப்படத்தக்க ஒன்றெனப் புகழும் நடைமுறையில் பெண்ணாய்ப் பிறந்ததற்கு வருந்தும் கருத்தையும் சுட்டிக்காட்டி அதற்குச் சமாதானமும் கூறிச் செல்கின்றார்.

**"மங்கையராய்ப் பிறப்பதற்கே ~ நல்ல**
**மாதவம் செய்திட வேண்டுமம்மா!**
**பங்கயக் கைந்நலம் பார்த்தலவோ ~ இந்தப்**
**பாரில் அறங்கள் வளருமம்மா"**[4]

என்று பெண்பிறப்பைப் புகழ்ந்து பாடுகின்றார் கவிமணி. மேலும், பெண்ணின் பிறப்பினைப் புகழ்ந்து பாடும் விதமாக,

**"மங்கையராகப் பிறந்ததனால் ~ மனம்**
**வாடித் தளர்ந்து வருந்துவதேன்?**
**தங்கு புவியில் வளர்ந்திடும் ~ கற்பகத்**
**தாருவாய் நிற்பதும் நீர் அலவோ?"**[5]

என்று பாடுகிறார். இத்தகைய புகழ்ச்சிகளெல்லாம் பிறப்பிடமாய் உள்ளதாகக் கருதப்படும் பெண்கள், தாம் பெண்ணாய்ப் பிறந்த நிலைக்கு ஏன் வருந்த வேண்டும் என்ற வினாவிற்கு விடைகாண முற்பட்டால் நடைமுறை உண்மையிலிருந்த கவிதைகள் சற்று விலகியிருப்பது விளங்கும். பெண்களுக்கு ஏற்பட்டிருக்கும் வருத்தத்திற்கு மருந்தாக இத்தகைய புகழ்ச்சிகள் அமைகின்றன எனலாம். மேலும் அவர்,

**"செம்மையிற் பெற்ற குணங்களெல்லாம் ~ நீங்கள்**
**செய்வினையாலே திருத்துவீரேல்**
**இம்மைக் கடன்கள் முடித்திடவே ~ முக்தி**

---

4. கவிமணி, மலரும் மாலையும், பக். 148-150.
5. மேலது.

***எய்திச் சுகமாயிருப்பீரே"*** [6]

என்று பாடி நிறைவு செய்கிறார். பெண்ணாய்ப் பிறந்து பல இடர்களுக்கு ஆளாகித் துன்புற நேர்ந்ததே என்று வருந்தாமல், பெண்களுக்கு மறுமை இன்பத்தைக் காட்டி, இம்மையில் சகிப்புத்தன்மையோடு இருக்க வேண்டுமென அறிவுரை கூறுகின்றார்.

பெண்கள் தன்னையும் பிறரையும் பேணும் தன்மை கொண்டவர்கள். பெண்கள் சமுதாயத்தின் கண்கள் போன்றவர்கள். பெண்களால்தான் சமுதாயம் என்ற அமைப்பு உருவாக்கப்படுகின்றது. அவர்கள்தான் புதியதோர் உலகம் செய்யும் குழந்தைகளைப் பெற்றெடுக்கிறார்கள். அவ்வாறு பெற்றெடுக்கும்போது அக்குழந்தை பெண்ணாகப் பிறந்துவிட்டால் பெற்றோர்கள் மகிழ்ச்சி அடைவதில்லை. இன்றைய சமுதாயம் ஆண் குழந்தைக்குத் தரும் மதிப்பையும் மரியாதையையும் பெண் குழந்தைகளுக்குத் தருவதில்லை. ஆண் குழந்தை பிறந்தால் அடையும் மகிழ்ச்சியையும் மனநிறைவையும் பெண் குழந்தைகள் பிறந்தால் அடைவதில்லை என்பதை இதன்மூலம் உணரமுடிகின்றது.

## 4.4.ஆணை ஆணாகப் பாலினப்படுத்துதல்

குழந்தைகளுக்குப் பாலூட்டும் செயலிலிருந்தே இந்தப்பாகுபாடு தொடங்கி விடுகிறது. ஆண் குழந்தைகளுக்கு நீண்ட நாள் பாலூட்டுகின்றனர். ஆணின் விடலைப் பருவத்து நடை, உடை, பாவனை போன்றவற்றிலும் நீ ஓர் ஆணாக இருக்க வேண்டும் என்று பயிற்றுவிக்கப்படுகிறான். ஓர்ஆண் குழந்தைக்கான நடத்தை நெறிகளே வேறாகக் கற்பிக்கப்படுகின்றன. ஆண் முரட்டுத்தனமாகவும் நினைத்ததை நடத்தி முடிப்பவனாகவும் வளரவளரச் சிறு வயதிலேயே ஆணுக்குரிய செயற்பாடுகளை மட்டுமே செய்யத் தூண்டப்படுகிறான். இவ்வாறு, ஆண் குழந்தை பிறந்ததிலிருந்தே சமூகத்தில் பாலினப்படுத்தப்பட்டு வளர்க்கப்படுகின்றது.

## 4.5.பெண்ணைப் பெண்ணாகப் பாலினப்படுத்துதல்

---

6. கவிமணி, மலரும் மாலையும், ப. 150.

பெண் குழந்தைகளுக்குக் குறைந்த காலமே பாலூட்டத் தொடங்கி அவர்களின் நடை, உடை வரை பெற்றோர்களாலும் மற்றவர்களாலுமே தீர்மானிக்கப்படுகிறது. பெண்களின் உடை என்று எடுத்துக்கொண்டால் தேவை, வசதி, பயன்பாட்டிற்குத்தக்க அணிய வேண்டும் என்று கற்றுக்கொடுக்கப்படுகிறது. நடத்தை நெறிகள் என்று வரும்போது ஓடி ஆடி விளையாடுவதற்குப் பதிலாக அடங்கி ஒடுங்கி ஒரே இடத்தில் விளையாடும் தாயக்கட்டை, பல்லாங்குழி, கிச்சுக்கிச்சுத் தாம்பாளம், கல்லாங்காய், கண்ணாமூச்சி போன்றவற்றையே முதன்மைப்படுத்துகின்றனர். வளர்கின்ற பருவத்தில் வீட்டுப் பொறுப்புகளைச் சுமத்திச் சமைப்பது, சட்டிபானை கழுவுவது, குழந்தைகளைப் பராமரிப்பது போன்றவற்றில் ஆர்வத்தை ஏற்படுத்துகின்றனர்.

மேற்கண்ட அனைத்து செயற்பாடுகளிலும் ஆண் அல்லது பெண்ணின் பாலினம் எதையும் தீர்மானிப்பதில்லை. மாறாகப் பாலினம் என்பதே சமூகத்தால் உருவாக்கப்பட்ட கருத்தாக்கமாக விளங்குகின்றது. ஆடை அலங்காரம் தொடங்கி, விளையாட்டு வகைகள், பாலியல் பழக்க வழக்கங்கள், குறிப்பிட்ட பாலினத்திற்கான வேலைகள் என்று பல்வேறு நடைமுறைகளின் மூலமாக நாம் உயிரியல் ரீதியிலான ஓர் அடையாளத்தை முன்னிறுத்துகிறோம். பிறகு, அதனடிப்படையில் சமூக அடையாளங்களை உருவாக்குகிறோம். எனவே, உயிரியல் ரீதியாக நாம் எந்தப் பாலினத்தைச் சார்ந்தவர்கள் என்பது முக்கியமல்ல. சமுதாயத்தில் அச்சொல்லுக்கான பொருளைக் கொண்டே சமூக மதிப்பைப் பெறுகிறோம்.

### 4.6.பெண் சிசுக்கொலை

பெண்சிசுக் கொலை என்கின்ற சமூகக்கொடுமை 18ஆம் நூற்றாண்டிலிருந்தே இந்தியாவின் பல பகுதிகளில் நடந்து வந்ததாகத் தெரிகின்றது. ஆண் குழந்தை பிறந்தால் அதை வரவாகவும் பெண் குழந்தை பிறந்தால் அதைச் செலவாகவும் ஆண் என்பது சுகமானதாகவும் பெண் என்பது சுமையானதாகவும் கருதப்பட்டது.

ஆகவேதான் பெண்குழந்தை பிறப்பதற்கு முன்பும் பிறந்த பின்பும் பெற்றோரே அக்குழந்தையைக் கொல்லும் கொடுமை நடைபெறுகின்றது.

ஆணாதிக்கச் சமுதாயத்தின் மிகக் கொடுமையான வெளிப்பாடே பெண்சிசுக் கொலை. மக்கள் தொகைப் பெருக்கம், பொருளாதாரப் பற்றாக்குறை, ஆண், பெண் சமமற்ற சமுதாயம் ஆகிய பல்வேறு சிக்கல்கள் மிகுந்து காணப்படுகின்ற இச்சமுதாயத்தில் குழந்தையின் பிறப்பிலேயே போராட்டம் தொடங்குகிறது. பெண் குழந்தை என்பது பொருளாதாரச் சிக்கலாகவே கொள்ளப்படுகிறது. எனவே, பிறப்பிற்கு முன்னும் பின்னும் குழந்தைகளைப் பெற்றோரே கொல்லும் கொடுமை நடைபெறுகின்றது என்பதை,

**"வேர்தளரும் வேளையில்**
**விரல் நீட்டும் விழுதுகள்**
**இங்கே விழுதைத் தின்று**
**உயிர் வாழும் வேர்கள்"**[7]

என்று கவிதைப்படுத்தியுள்ளார் கவிஞர். வேருக்கு விழுதும் விழுதுக்கு வேரும் துணையாகின்றன. வேரை அரிக்கும் விழுதுகளும் விழுதைத் தின்னும் வேர்களும் குடும்ப அமைப்பின் சிதைவைக் காட்டுவதாக அமைகின்றது.

நவீனத் தொழில் நுட்பத்துடன் பெண்கருக் கொலை செய்வது இப்போது அதிகமாகப் பரவிவிட்டது. பிரமிக்க வைக்கும் வகையில் வளர்ந்துவிட்ட மருத்துவ விஞ்ஞானம் பெண்கரு, சிசுக்கொலை இன்றியே பெண்ணினத்தை ஒழித்துக்கட்ட புதிய தொழில் நுட்பம் அமைந்துள்ளது. ஆண்கருவை வளரவிடவும், பெண்கருவை அழிக்கவும் மேற்கொண்டுள்ள அறிவியல் வளர்ச்சி பெண்ணினத்தையே அழிக்கும் ஆயுதமாக மாறக்கூடும். இந்நிலை மாறுவதற்குப் பெண்கரு அழிப்புச் சட்டத்தைக் கடுமையாக அமல்படுத்த வேண்டும் என்பதை உணரமுடிகின்றது.

---

**7.** பர்வின் பானு, குமுதம் இதழ், 20.01.1997.

சமூகத்தில் பெண்ணின் உழைப்பு பொருளாதார மதிப்பற்றதாக ஆக்கப்பட்டுவிட்டச் சூழ்நிலையில், பெண்ணின் மதிப்பு பின்னுக்குத் தள்ளப்பட்டுவிடுகிறது. ஒவ்வொரு நிலையிலும் பெண் தொடர்பாகக் குடும்பம் சந்திக்க நேரிடுகின்ற பொருளாதாரச் சிக்கல்கள் பெண் குழந்தைப் புறக்கணிப்புக்குக் காரணமாக அமைகின்றன. மேலும், குடும்ப வழித்தோன்றலாக ஆண்பிள்ளைகள் மட்டுமே விளங்க முடியும் என்ற நம்பிக்கையும், ஈமச்சடங்கை ஆண்பிள்ளைதான் செய்ய வேண்டும் என்ற மரபு சார்ந்த கட்டுப்பாடுகளும் பெண் குழந்தைப் புறக்கணிப்பிற்குக் காரணமாகத் திகழ்கின்றன. இதனால், ஆண் குழந்தை வரவேற்பும் பெண் குழந்தைப் புறக்கணிப்பும் இச்சமூகத்தில் இன்றும் தொடர்ந்து வருகின்றது. இதன் உச்சகட்டக் கொடுமையே பெண் சிசுக்கொலை நடைபெறுவதற்குக் காரணமாக இருக்கலாம்.

> **"கர்ப்பத்தில் வளரும் பிண்டம் ஆணாக இருக்க வேண்டும் என்று, வேத மந்திரங்கள் தோன்றிய காலத்திலிருந்து, இன்று இந்த இருபதாம் நூற்றாண்டின் இறுதியாண்டுகள் வரை, பெண் மனித மதிப்பை இழக்கத் தொடங்கிச் சறுக்கிச் சறுக்கி ஒரு சூனியமாய்த் தன் இனத்தைத் தானே அழித்துக் கொள்ளும் அவலத்துக்கு வந்திருக்கிறாள்"**[8]

இவ்வாறு பழங்காலத்தில் இருந்து ஆண் குழந்தை என்றால் விரும்பிப் பெற்றுக் கொண்ட நிலையையும், பெண் குழந்தை என்றால் அந்தக் குழந்தையின் தாயே அழித்து விடுகின்ற நிலையினையும் காணமுடிகின்றது.

> **"வாழ்க்கையில் முதன் முறையாக முடிவெடுக்க சுதந்திரம்!**
> **இல்லை, எங்கள் முடிவு விதிக்கப்பட்டது**
> **எங்கள் சிசுக்களே, எங்களை மன்னியுங்கள்**
> **.......... .....................**
> **பல்லாயிரம் கருக்களை முளைக்குமுன் கிள்ள!**
> **வரிசையில் படுத்திருக்கிறோம்**
> **இதோ, என் முறை வந்து விட்டது"**[9]

8. ராஜம் கிருஷ்ணன், காலந்தோறும் பெண், ப.60.
9. வத்ஸலா, சுயம், ப. 76.

என்ற வரிகள், பெண்கள் தாமே முடிவெடுக்க இயலாமல் போனதால் பெண் சிசுக்கொலைக்குத் தாங்களே துணைபோகக் கூடிய நிலையில் உள்ளதாகக் கவிஞர் எடுத்துரைக்கின்றார். தன் கருவைத் தானே காப்பாற்றும் உரிமையில்லாதவளாகப் பெண் இருக்கின்றாள் என்பதையே இக்கவிதைவழி அறியமுடிகின்றது.

தமிழகத்தின் பல்வேறு மாவட்டங்களிலும் பெண் சிசுக்கொலை என்பது பரவலாகக் காணப்படுகின்றது. குறிப்பாக, உசிலம்பட்டி, கிருஷ்ணகிரி, தருமபுரி, சேலம், நாமக்கல் போன்ற பகுதிகளில் இத்தகைய போக்கு மிகுந்திருப்பதைக் கவிஞர்,

***"பெண்கள் கிளிகளாம்***
***உவமை சரி!***
***நெல்மணி?"***[10]

என்ற கவிதையின்வழி எடுத்துக்காட்டியுள்ளார். உசிலம்பட்டி, சேலம், தருமபுரி போன்ற பகுதிகளில் நெல்மணிகளைப் பயன்படுத்திச் சிசுக்கொலை நடைபெறுகின்றது. கிளிகள் என்று போற்றப்படுகின்ற பெண்களின் வாரிசுகளான பெண்சிசுக்கள் நெல்மணிகளால் கொலை செய்யப்படுகின்ற அவலத்தை இக்கவிதையானது படம்பிடித்துக் காட்டுகின்றது.

மனிதர்கள் உணவாகப் பயன்படுத்தும் நெல்மணிகள் பெண் சிசுக்களின் உயிரைப் பறிக்கப் பயன்படும் அவலத்தையும் நினைத்துப் பார்க்கத் தூண்டுகிறது.

***"தொடக்க விழாக்களுக்குத்***
***தூதாக வந்தவன்***
***அடக்க விழாவில்***
***ஐக்கிய மானதேன்***
***ஜனத்தின் சாட்சியைக்***
***கைது செய்தது***
***மரணத்தின் ஆட்சி"***[11]

---

10. மாலதி ஹரீந்திரன், மாலதி ஹரீந்திரன் ஹைக்கூ கவிதைகள், ப. 51.
11. மு.மேத்தா, ஊர்வலம், ப. 51.

என்று பெண் சிசுக்கொலை புரிவதைக் கவிஞர் தன் கவிதையின் வழிப் புலப்படுத்துகின்றார். பின் விளைவுகளைக் கணக்கில் கொள்ளாமல் செயல்படும் இச்சமுதாயத்தில், மருத்துவச்சியாகிய பெண்களின் கைகளாலேயே பெண் சிசுக்கொலைகள் நடைபெறுகின்ற அவலத்தை மேற்கண்ட கவிஞர்களின் கவிதைகள் எடுத்துக்காட்டுகின்றன.

## 4.7.சிசுக்கொலைக்கான முறைகள்

சிசுக்களை அழிப்பதற்காக எருக்கம்பால், கள்ளிப்பால், கோழி சூப், நெல்மணி, ஆகியவற்றை நஞ்சாகப் பயன்படுத்துகின்றனர். ஈரத்துணியால் சுற்றி வைத்துக் கொல்வதும் உண்டு. புகையிலைச் சாறு ஊற்றிக் கொல்வதாகவும் தெரிகிறது. இவை மட்டுமின்றி கத்தியால் குத்துதல், தண்ணீரில் மூழ்கச்செய்தல், பானைக்குள் இட்டு மூடுதல், கால்களைப் பிடித்துக் கொண்டு தரையில் அடித்தல் போன்ற பல்வேறு முறைகளைக் கல்நெஞ்சு படைத்த சிசுக்கொலையாளர்கள் பயன்படுத்துவதாகத் தெரிகிறது. இதனை,

***"கள்ளிப்பாலைக்***
***கடந்து வந்த மகிழ்ச்சி***
***அலைகளில்***
***நீந்த முடியவில்லை"***[12]

என்னும் இக்கவிதைவழி அறியலாம். மேலும்,

***"பெண்ணாய் உருவெடுத்தால்***
***கருவிலேயே நீளும் கொலைக் கரங்கள்***
***தவறினால் ~ கழுத்தை நெறிக்கவும்***
***தயங்குவதில்லை"***[13]

என்ற கவிதை, கருவில் இருக்கும் பெண்சிசு தப்பிப் பிறந்தாலும் கூட, பிறந்தவுடன் அந்தச் சிசு கழுத்து நெறித்துக் கொலை செய்யப்படுவதைக் கவிஞர் படம்பிடித்துக்

---

12. தமிழன்பன், பனிபெய்யும் பகல், ப. 31.
13. சுபத்ரா, எந்தன் தோழா, ப. 34.

காட்டுகிறார். இவ்வாறு பெண் சிசுக்கள் கருவிலேயே கொலை செய்யப்படுகின்றது என்பதை இக்கவிதை வரிகள் விளக்கி நிற்கின்றது.

## 4.8.அறிவியல் கண்டுபிடிப்பும் கருக்கலைப்பும்

இன்றைய அறிவியல் வளர்ச்சி ஆதிக்க வர்க்கத்தாருக்கு மட்டுமே பயனளிக்கக்கூடியது என்ற கருத்து பெண்கள் நிலையிலும் பொருந்துகிறது. ஏனெனில், நாகரிகமற்ற காலத்தில் பெண்கள் எத்தகைய நிலைக்கு ஆளாக்கப்பட்டார்களோ, அத்தகைய நிலை இன்றைய அறிவியல் காலத்திலும் தொடர்வதோடு தீவிரத்தையும் கொண்டுள்ளது. "அமினோசென்டஸிஸ்" என்ற கருக்கலைப்பு முறை இதற்குத் தக்க சான்றாகும். கருவிலேயே பெண்சிசுவைக் கண்டறிதல், குளோனிங் முறை கண்டுபிடிப்புகள், அண்மைக்கால அறிவியல் கண்டுபிடிப்புகள் முதலியன பெண் சமூகத்தையே கருவறுத்து விடுமோ என்று அஞ்சப்படுகிறது. இந்நிலையில் அறிவியல் கண்டுபிடிப்புகள் பெண்களின் எதிர்காலத்தைக் கேள்விக்குறியாக்குகிறது.

"அறிவியலாவது
அங்கீகரித்ததா பெண்ணை
பெண் குழந்தை என்றால்
கர்ப்பத்திலேயே கலைத்துப் போட
கண்டுபிடித்தது தானே
ஸ்கேன் மருத்துவ வசதி"[14]

என்று கூறும் கவிதை, கருவிலேயே பெண் குழந்தையை அழிக்கும் போக்கைக் கண்டிக்கிறது. இவ்வாறு, ஆக்கப்பூர்வமாகப் பயன்பட வேண்டிய அறிவியலும் பெண்களுக்கு எதிரான அழிவு வேலையைச் செய்வதைக் காணமுடிகின்றது.

"யார் கண்ணிலும் படாமல்
பெண்ணைத் தப்பிக்க வைத்தது
ஸ்கேன் பார்க்க வசதியில்லாத வறுமை"[15]

14. முகவை முத்து, புது(வை)க் கவிதைகள், ப. 41.
15. ஜெயந்தி குமார், இப்படிக்கு காதல், ப. 7.

எனும் கவிதை ஸ்கேன் பார்த்துக் கருவை அழிக்கும் வசதியற்றோர் சிசுக்கொலை புரிகின்றனர் எனும் நடைமுறைச் சிக்கலை உணர்த்துகின்றது. இவ்வாறான, அறிவியல் கண்டுபிடிப்பும் விஞ்ஞான வளர்ச்சியும் பெண் சிசுக்கொலை நடப்பதற்குக் காரணமாக அமைகின்றது என்பதை இக்கவிதை வரிகள் சுட்டிக்காட்டுகின்றன.

## 4.9.பெண்ணினத்தின் மீதான தாக்குதல்

பெண் சிசுக்கொலையை ஒரு சாதாரண சமூகச்சிக்கலாக எடுத்துக்கொள்ளாமல் பெண்ணினத்தின் மீதான ஒட்டுமொத்தத் தாக்குதலாகப் பார்க்கும் பார்வையும் கவிஞர்களிடம் வெளிப்படுகிறது.

***"இந்தக் கொலை***
***குழந்தையின் மீது மட்டுமல்ல***
***என்மீது - நீ குழிதோண்டிப்***
***புதைத்துவிட விரும்பும் ~ பெண்ணினத்தின்***
***மானம் கௌரவம்***
***உரிமை உயர்வு இவை***
***அனைத்தின் மீதான தாக்குதல்"***[16]

என்று கூறும் இக்கவிதை சிசுக்கொலை, பெண்ணினத்தை எவ்வாறு பாதிக்கின்றது என்பதை எடுத்துக்காட்டுகிறது. மேலும், ஆணாதிக்கத்தை எதிர்த்தெழும் பெண்விடுதலை முயற்சிகளைத் தொடக்கத்திலேயே குழிதோண்டிப் புதைக்கும் செயலே இப்பெண் சிசுக்கொலை என்பதையும் உணர்த்துகின்றது.

பெண் சிசுக்கொலையைத் தடைசெய்யும் பொருட்டுத் தமிழக அரசு "தொட்டில் குழந்தைத் திட்டம்" எனும் திட்டத்தினைக் கொண்டு வந்துள்ளது.

***"சமூகநல இயக்கங்கள் ஏற்படுத்திய விழிப்புணர்வால் அரசுகள் சில நடவடிக்கைகளை எடுப்பதைக் காணமுடிகிறது. எனினும், இத்தகைய நடவடிக்கைகள் மிகச்சிறிய விளைவையே ஏற்படுத்தியுள்ளன. பெண் சிசுக்கொலைத் தொடர்பான ஓர் அறிக்கையை ஒட்டி 1992 ஆம்***

---

**16.** சுபத்ரா, மு.நூ., ப. 34.

**ஆண்டில் தமிழக அரசு "தொட்டில் குழந்தை" என்ற திட்டத்தை அறிவித்தது. அதன்படி அநாதையாக விடப்படும் பெண் குழந்தைகள் மதிய உணவுக்கூடம், ஆரம்ப சுகாதார நிலையம் மற்றும் அனாதை இல்லங்கள் ஆகியவற்றில் பாதுகாக்கப்பட்டன."**[17]

இந்நிலைமாற, பெண்களைப் பற்றிய சமூக மதிப்பீடுகள் மாற்றியமைக்கப்பட வேண்டும். கருக்கலைப்பையும் சமூகக் குற்றமாகக் கொள்ள வேண்டும். இச்சிக்கலைத் தனிமனித மற்றும் குடும்பச் சிக்கலாகக் கருதாது, பெண்ணினத்தின் மீதான தாக்குதலாகக் கொண்டு பிற சமூகச் சிக்கல்களிலிருந்து பிரித்துப் பார்க்க வேண்டும். பெண்களின் தற்சார்பு நிலை வளர்ச்சியடையும்போது பெண் சிசுக்கள் மீதான வெறுப்பும் மாற்றம் பெறும் என்று கூறலாம்.

## 4.10.பெண் குழந்தை வளர்ப்பு

ஆணும் பெண்ணும் இணைந்தே இருக்கும் இச்சமூகத்தில் இருபாலருக்கும் இருவேறு மதிப்பீடுகள் நிலவி வருவதைக் காணமுடிகிறது. ஆண் குழந்தையைப் பற்றிப் பெருமிதம் கொள்ளும் மனம், பெண் குழந்தையை ஒரு சுமையாகக் கருதுகிறது. அதன் தொடர்ச்சியாகக் குழந்தைகளிடம் வளர்ப்பு நிலையிலேயே வேறுபாடு காட்டுவது இயல்பாகி விட்டது. இவ்வாறான போக்கால் குழந்தைப் பருவத்திலிருந்தே இருபால் குழந்தைகளின் மனநிலையிலும் அதற்கேற்ற வகையில் கருத்தாக்கங்கள் உருவாகி விடுகின்றன. ஆண், பெண் என்று குழந்தைகளைப் பிரித்துப் பார்க்காமல் குழந்தைகளாக மட்டுமே பார்க்கின்ற போக்கு அறவே இல்லாமல் போய்விட்டது.

## 4.11.விளையாட்டுகள்

இப்பாகுபாட்டுடன் ஆண்பிள்ளைகளுக்கென்றும், பெண்பிள்ளைகளுக்கென்றும் தனித்தனி விளையாட்டுகள் கற்பிக்கப்படுகின்றன. சிற்றிலக்கியங்களில் ஒன்றான பிள்ளைத்தமிழில் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி அகிய ஏழு பருவங்களும் இருபாலுக்கும் பொதுவானதாகவும் சிறுபறை, சிற்றில், சிறுதேர்

---

**17.** *Frontline, 04.02.2001,P. 73.*

ஆகிய மூன்று பருவங்கள் ஆண்களுக்குரியன என்றும், அம்மானை, நீராடல், ஊசல் ஆகிய மூன்று பருவங்களும் பெண்பாற்குரியன என்றும் வகைப்படுத்தியுள்ளனர். இவ்வாறு பிரிக்கப்பட்டுள்ளமை குழந்தையிலேயே இருபாலினத்தவரையும் பிரித்துப் பார்க்கும் நிலையை உருவாக்கி விட்டது எனலாம்.

ஆண்களுக்குரிய விளையாட்டுகள் வீட்டுக்கு வெளியே ஆடக்கூடிய வீரவிளையாட்டுகளாகவும், பெண்களுக்குரிய அம்மானை, நீராடல், ஊசல் போன்றவை பெரும்பகுதி வீட்டிற்குள் ஆடுகின்ற மென்மையான விளையாட்டுகளாகவும் அமைந்திருப்பது நோக்கத்தக்கது. அதிலும் குறிப்பாக, "சிற்றில் சிதைத்தல்" எனும் விளையாட்டு குழந்தைப் பருவத்திலேயே ஆணாதிக்கத்தை விதைக்கும் விளையாட்டாக இருந்து வந்துள்ளதை கவிதைகளில் படைக்கப்பட்டுள்ளன. இந்நிலையில் ஆண் குழந்தையின் இவ்விளையாட்டை எந்தவிதமான சலனமும் கேள்வியும் இன்றி அனைவரும் ஏற்றுக் கொண்டதை உணரமுடிகின்றது.

***"ஆற்று மணல் ஆவரங்காய் ~ நான்***
***ஆக்கி விளையாடையிலே***
***அத்தைமகன் நற்கொழுந்தன்***
***அழித்தான் சிறுவீட்டை"***[18]

என்ற நாட்டுப்புறப் பாடல்கூடச் சமூகத்தில் வழக்காகி விட்டதனை ஆண் குழந்தை விளையாட்டாக இதனைப் பதிவு செய்துள்ளது.

***"பெண்கள் சிறுவீட்டைப்***
***பேணாதழித்து அவர்தம்***
***கண்கள் சிவக்க வைக்கும்***
***கண்ணபிரான் நீதானோ"***[19]

என்ற அவதாரங்களும் கூடச் சிற்றில் சிதைத்தலில் ஈடபட்டதாகக் கவிதைகளில் படைக்கப்பட்டுள்ளன.

---

**18.** ஆறு.அழகப்பன், தாலாட்டுப் பாடல்கள், ப. 39.
**19.** கவிமணி, மு.நூ., ப. 38.

மேலும், உறவு முறையுடன் தொடர்புபடுத்தி இங்கே குறிப்பிடப்பட்டுள்ள கருத்து, வருங்காலக் கணவன் - மனைவி வாழ்க்கையின் முன் மொழிவாகவும் இடம் பெற்றுள்ளது எனலாம்.

*"அவன்*
*வீடு கட்டினான்*
*தட்டி அழித்தான்*
*அவன் சிரித்தான்*
*சிரித்துச் சிரித்து*
*மீண்டும் கட்டினான்*
*மணல் வீட்டை*
*இம்முறை கடல்*
*அள்ளிச் சென்றது*
*அழுதான்*
*அவன் அழுதான்"*[20]

என்ற வடிவத்திலும் உள்ளடக்கத்திலும் புதுமைகளைக் கொண்டு வருவதில் முனைப்புக் காட்டிய புதுக்கவிதையிலும்கூட, மேற்குறித்த விளையாட்டு எவ்வித மாற்றமுமின்றி சுவை கூட்டிக் காட்டப்பட்டுள்ளது. இதனை நோக்கும்போது, ஆணாதிக்க மனப்போக்கின் தொடர்ச்சியே இக்கவிதையின் கருப்பொருள் என்பதைப் புரிந்துகொள்ள முடிகின்றது. இவ்வகையில், குழந்தைகள் வளரும் நிலையிலேயே அவர்கள் விளையாடும் விளையாட்டுகளில்கூடப் பால்வேறுபாடு உணர்த்தப்படுவதால், குழந்தைகளின் உடல்நிலையிலும் உள்ளநிலையிலும் ஏற்றத்தாழ்வு விதைக்கப்படுகிறது என்பதை அறிய முடிகின்றது.

சிறு குழந்தைகளின் மழலை விளையாட்டானது காண்போரை மகிழ்ச்சியடையச் செய்யும் குழந்தைகளின் மழலைப் பேச்சை இரசித்துக்கொண்டே இருக்கலாம். வீடு பார்க்க வந்திருக்கும் ஒருவரிடம் அந்த வீட்டில் இருக்கும் மழலை புன்முறுவலோடு

**20.** விஷ்ணு நாகராஜன், புதிய நிலா, ப. 45.

வீட்டைச் சுற்றிக் காண்பிக்கும் விதத்தினைக் கவிஞர் பின்வருமாறு கவிதையாக வடிவமைத்துள்ளார்.

"கைப்பிடித்து விளையாட அழைத்த சின்னப் பெண்ணை
அதற்கு முன் பார்த்ததில்லை
சிரித்து சிரித்து வீடு முழுதும்
சுற்றிக் காட்டினாள்
தனக்குப் பிடித்த பாடல் பாடி
பாவாடை உயரச் சுழன்று ஆடினாள்
எங்க வீட்டை வாங்க வந்திருக்கீங்களா என
மேலும் கீழும் தலையாட்டி
சன்னமாய்க் கிசுகிசுத்தாள்
கலைந்து கிடந்த பொம்மைகளை
வரிசையாக்கி கதைகள் சொன்னாள்
கிழம்புகையில் தலைகவிழ்த்து
வேறு பக்கம் திரும்பிக்கொண்டாள்"[21]

என்ற கவிதை யாரென்று அறியாத நபர்களிடம்கூட மழலைச் செல்வங்கள் விளையாடுவதாக வடிவமைத்துள்ளார். அந்த நபர் கிழம்புவதைப் பார்த்த அந்த மழலை விளையாட யாருமின்றி வேறுபக்கம் திரும்பிக்கொள்கிறாள். இவ்வாறு, மழலைப் பருவத்திலேயே குழந்தைகளிடம் எந்த வேறுபாடுமின்றி விளையாடும் பழக்கம் தோன்றுகிறது. ஆனால், அந்த விளையாட்டிலும் கூட ஆண், பெண் என்ற பிரிவினையை உருவாக்கியிருக்கிறது இச்சமூகம்.

## 4.12.பாலியல் வன்முறை

சமுதாயத்தில் சமீப காலங்களில் பெண்குழந்தைகள் மீதான பாலியல் வன்முறைகள், தொல்லைகள் மற்றும் சீண்டல்கள் மிகவும் அதிகமாகக் காணப்படுகின்றன. தற்போது கோயம்புத்தூர் மாவட்டம், துடியலூரை அடுத்த பன்னிமடைப் பகுதியைச் சேர்ந்த திப்பனூரில் ஏழு வயதேயான பெண்குழந்தையைப்

21. அனிதா, கனவு கலையாத கடற்கன்னி, ப. 68.

பாலியல் வன்புணர்ச்சி செய்து, கழுத்து நெறிக்கப்பட்டு கொலைசெய்துள்ளனர்.[22] இதுபோன்ற நிகழ்வுகள் தொடர்ந்து நடந்துகொண்டுதான் வருகின்றன.

> **"துளிர் என்ற பாலியல் வன்முறைத் தடுப்பு மற்றும் தேற்றுதல் அமைப்பு மேற்கொண்ட ஆய்வில் ஏறக்குறைய 1000 குழந்தைகளில் 650 குழந்தைகள் ஏதோவொரு வடிவத்தில் பாலியல் ரீதியான சீண்டலுக்கு ஆளாகிறார்கள் என்பதும், அதிலும் 90 சதவீதத்திற்கும் மேல் தங்களுக்குத் தெரிந்த, நெருங்கிய உறவினர்கள் மற்றும் அறிமுகமானவர்களாலேயே வன்முறைக்கு ஆளாக்கப்படுகிறார்கள்"**[23]

என்பது மிகவும் சிந்திக்கவேண்டியதாக இருக்கிறது.

இவ்வாறு வீட்டிலும் வெளியிலும் பெண் குழந்தைகள் ஆடவர்களால் பெரிதும் பாதிப்பிற்கு உள்ளாகிறார்கள். பெண் குழந்தைகளுக்குப் பாதுகாப்பில்லா இடங்களிலும், குழந்தைத் தொழிலாளர்களாகப் பெண்கள் இருக்கும் இடங்களிலும் பெரும்பாலும் அவர்கள் வன்பகடிக்கு இலக்காகிறார்கள். பெண்கள் மீதான கற்பிதங்களும் பயமும் அவர்களை வாய் திறக்க முடியாதவர்களாக்கி விடுகின்றன. இவற்றையும் கவிஞர்கள் தங்கள் படைப்புகளில் சுட்டிக் காட்டியுள்ளதை அறியலாம்.

### 4.13.குழந்தை மணத்தின் கொடுமை

ஆணும் பெண்ணும் சேர்வதே தமிழ்த்திருமணத்தின் அடையாளமாக அமைகின்றது. இத்தகையச் சூழலில் சிறுகுழந்தைகளுக்குத் திருமணம் செய்து வைத்து அக்குழந்தைகள் அடையும் துயரத்தினைப் பாரதிதாசன் பின்வருமாறு கூறுகிறார்.

> **"ஏழு வயதே எழிற்கருங் கண்மலர்!**
> **ஒருதா மரைமுகம்! ஒருசிறு மணியிடை!!**
> **சுவைத் தறியாத சுவைதருங் கனிவாய்!**
> **இவற்றை யுடைய இளம்பெண் ~ அவள்தான்"**[24]

---

**22.** தி இந்து தமிழ் நாளிதழ், நாள்:28.03.2019.
**23.** பி.எஸ்.அஜிதா, சரிபாதி பெண்கள் சமமானவர்கள் தானா?, ப. 16.
**24.** பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப. 110.

என்ற வரிகள் ஏழு வயதேயான சிறு குழந்தைக்குத் திருமணம் செய்விப்பதால் அவளுக்கு ஏற்படும் மனவேதனையைக் கவிஞர் தெளிவாகச் சுட்டிக்காட்டியுள்ளார். அவ்வாறு சிறுவயதிலேயே மணம் முடித்த அந்தச் சிறுமியின் கணவன் இறந்து போனால், அந்தச் சிறுமி கைம்பெண் ஆகிவிடுகின்றாள். அதேசமயத்தில் தன் தாயையும் இழக்கிறாள் அந்தச் சிறுமி. ஆனால், தந்தையோ வேறு ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு மகிழ்ச்சியாக வாழ்கின்றான். அந்தக் காட்சியைக் கண்ட அந்தச் சிறுமி தன்பாட்டியிடம் கூறிப் புலம்புவதாகப் பின்வரும் கவிதை அமைகின்றது.

"தனியாய் ஒருநாள் தன் பாட்டியிடம்
தேம்பித் தேம்பி அழுத வண்ணம்
ஏழு வயதின் இளம்பெண் சொல்லுவாள்;
என்னை விலக்கி என்சிறு தாயிடம்
தந்தை கொஞ்சுதல் தகுமோ? தந்தை
அவளை விரும்பி, அவள் தலை மீது
பூச்சூடுகின்றார்; புறக்கணித்தார் என்னை!
தாமும் அவளும் தனியறை செல்வார்;
நான் ஏன் வெளியில் நாய் போற் கிடப்பது?
அவருக்கு நான் மகள்! அவர் எதிர் சென்றால்,
நீ போ! என்று புருவம் நெரிப்பதோ?
பாட்டி மடியிற் படுத்துப் புரண்டே
இவ்வாறு அழுதாள் இளம்பூங் கொடியாள்
இந்நிலைக்கு இவ்வாறு அழுதாள் ~ இவளது
பின்நிலை எண்ணிப் பாட்டி பெரிதும்
அழுத கண்ணீர் வெள்ளம், அந்தக்
குழந்தை வாழ்நாட் கொடுமையிற் பெரிதே"[25]

என்ற வரியின் வாயிலாகப் பாரதிதாசன் குழந்தை மணத்தினால் உண்டான அச்சிறுமியின் கொடுமையைப் படம்பிடித்துக் காட்டியுள்ளார்.

**25.** மேலது, ப. 111.

## 4.14.குழந்தைத் தொழிலாளர்கள்

இன்றையச் சமுதாயத்தில் தன்னலமும், சுயநலமும் பெருகிப்போன இக்காலக்கட்டத்தில் தீப்பெட்டித் தொழிற்சாலைகளில் சிறுவர்கள் குழந்தைத் தொழிலாளர்களாகப் பணியமர்த்தப்பட்ட அவர்களின் வாழ்க்கையானது நடைமுறைக்கு மாறாக அமைந்துள்ளதைக் காணமுடிகின்றது.

***"தீப்பெட்டி ஆபீஸ்***
***விட்டுத் திரும்பும்***
***சிறுசுகளின் சிரிப்பு"***[26]

என்று தமிழச்சி தங்கபாண்டியன் தன் கவிதைவழி, குழந்தைத் தொழிலாளர்களின் வாழ்க்கை தீப்பெட்டித் தொழிற்சாலைகளில் முடங்கிக் கிடப்பதாக உணர்த்துகிறார். இதேபோன்று குழந்தைகள் கற்றலை வெறுத்து, ஊரைவிட்டு ஓடி குழந்தைத் தொழிலாளர்களாக மாறிவிடுகின்றனர் என்பதை,

***"குழந்தைகள் வேலை செய்யக் கூடாது என்று***
***பள்ளியில் சேர்த்தனர்***
***'அவர்கள்'***
***அடுத்த பட்டத்துக்கும்***
***மீன் சோற்றுக்குமான***
***ஆசையில்***
***கற்றல் வெறுத்து***
***ஊரை விட்டோடிய அவன் முகம்***
***இப்பொருள் குழந்தைத் தொழிலாளியற்ற***
***நிறுவனத் தயாரிப்பு***
***என்ற விளம்பர அட்டை பார்த்து***
***வாங்கிய காப்பியில் மிதந்து***
***வாய்க்குள் கரைகிறது"***[27]

என்ற கவிதையின் வாயிலாக அறியமுடிகின்றது. ஏழைக்குழந்தைகள் வானில் பட்டம் விட்டு விளையாடுவதற்காகவும் மீன் சோறு சாப்பிடுவதற்காகவும் கற்றலை விட்டுவிட்டு

---

**26.** தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப் பெண், ப. 56.
**27.** கீதா சுகுமாரன், ஒற்றைப் பகடையில் எஞ்சும் நம்பிக்கை, ப. 32.

குழந்தைத் தொழிலாளிகளாக மாறிவிடுவதை இக்கவிதை வெளிப்படுத்தி நிற்கின்றது. இவ்வாறு, குழந்தைகள் தங்களின் குடும்பத்திற்கு ஏற்பட்டுள்ள வறுமையைப் போக்குவதற்காகப் பள்ளிப் பருவத்தைத் தொலைத்துவிட்டு, பள்ளியின் மணியோசை கேட்ட காதில், தொழிற்சாலைகளின் மணியோசையைக் கேட்கின்றனர் என்பதையும் பதிவு செய்துள்ளார் கவிஞர் சுகிதா.

**"பழைய தண்டவாளத் துண்டுகள்**
**தலைகீழாய்**
**கட்டித்தொங்க**
**ஆரவாரத்திற்கு இடையே**
**டிங்..டிங்**
**சத்தம் எழுப்பும்**
**பள்ளிகள்**
**அமைதியாகிவிட்டன**
**குழந்தைகள்**
**தொழிற்சாலைகளின்**
**சங்கொலி கேட்கும்**
**தொழிலாளிகள் போல**
**தலை கவிழ்ந்து**
**மௌனமாக நடந்து போகிறார்கள்"**[28]

என்று கவிஞர் தன் கவிதையின்வழி பள்ளிப் பருவக் குழந்தைகள் குடும்ப வறுமையின் காரணமாகப் பள்ளிப் படிப்பை பாதியில் நிறுத்திவிட்டு, குழந்தைத் தொழிலாளர்களாக மாறிவிட்டனர் என்பதை இக்கவிதை சுட்டி நிற்கின்றது. இவ்வாறு, பள்ளி செல்லக்கூடிய குழந்தைகள் குடும்ப வறுமையின் காரணமாகப் பள்ளிப் படிப்பைத் தொடரமுடியாமல் குழந்தைத் தொழிலாளர்களாக ஆகிவிடும் அவலத்தை மேற்கண்ட கவிதைகள் எடுத்துக்காட்டியுள்ளன.

---

**28.** சுகிதா, ஒரு காதலும் ஒரு செம்பு தண்ணீரும், ப. 42.

## 4.15.குழந்தையின் பணிச்சுமை

பெண் குழந்தைகளைப் பெரும்பாலும் படிக்க அனுமதிக்காத போக்கு இன்றும் கிராமப்புறங்களில் காணப்படுகின்றது. அவர்கள் வீட்டு வேலைக்காகவே பெரிதும் பயன்படுத்தப்படுகின்றனர். முதல் குழந்தையாகப் பிறக்கும் பெண் குழந்தையின் கல்வி நிறுத்தப்பட்டு, அடுத்துவரும் பிள்ளைகளுக்குத் தாயைப் போலவே பணி செய்ய வேண்டியவளாகிறாள். பல்வேறு நிலைகளிலும் பெண்களின் பயன்பாடு இன்றியமையாததாக இருந்தபோதிலும், சமூகத்தில் அவளுக்குச் சரியான உரிமையும், மதிப்பும் மறுக்கப்படுகின்றது. அதேநேரத்தில் பெண்களின் உழைப்பை ஏற்றுக் கொள்ளத் தவறுவதில்லை. பெண்கல்வி மறுப்பும், பெண்கள் சிறுவயதிலேயே குடும்ப வேலைகளில் மூழ்கடிக்கப்படுவதும், எங்கும் ஏற்றுக் கொள்ளப்பட்டுவிட்ட சமூக நடைமுறை என்பதை அறியமுடிகின்றது.

குடும்பச் சூழ்நிலையின் காரணமாகவும், வறுமையின் பொருட்டும் குழந்தைத் தொழிலாளர்களாகி விடுகின்றனர். அங்ஙனம் வேலை செய்யும் தளங்களில் பெண் குழந்தைகளுக்குப் பாலியல் வன்முறை ஏற்படுகின்றது.

> ***"சிறுவர்கள் மீதான தாக்குதல்கள் பலதுறை சார்ந்து விரிவாகிறது. பெரியோர்கள் தமது குழந்தை பற்றிய எதிர்மனப்பான்மையை இந்த ஜனநாயகப் பண்பாட்டால் உள்வாங்கிய போது மனிதனின் இயற்கை மீதான உயிராற்றல் சிதைக்கப்படுகின்றது. குழந்தையின் பராமரிப்பு பெற்றோரின் இயற்கைக் கடமைகள் நுகர்வுத் தளத்தில் சிக்கிச் சிதைக்கின்றது"***[29]

என்பதை இரயாகரனின் வரிகள் படம்பிடித்துக் காட்டுகின்றன. "அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு" என்ற பழமொழி நாடறிந்ததே. அதற்கேற்றார்போல் பெண் குழந்தையாகப் பிறந்த காரணத்தினால் அக்குழந்தையின் எதிர்காலக் கனவுகள் சிதைக்கப்படுகின்றன. இதனை,

> ***"அவள்***

---

**29.** பி.இரயாகரன், ஆணாதிக்கமும் சமூக ஒடுக்குமுறைகளும், ப. 364.

**இறக்கி வைக்கும்**

**இடுப்புக் குடத்தின் அடியே**

**நொறுங்கும்**

**ஆத்தி சூடிக் கனவுகள்”**[30]

என்று கவிதைப்படுத்தியுள்ளார் கவிஞர் தமிழன்பன்.

**“முதல் குழந்தை பெண் என்றால்**

**முழுமைக் கல்வி அவளுக்கில்லை**

**முழுப் பொறுப்பைத் தாங்கி நிற்கின்றாள்**

**பிள்ளை பெறாமலே தாயாய் ஆகின்றாள்”**[31]

என்னும் கவிதை, பெண்குழந்தையின் தலையில் சுமத்தப்படும் பொறுப்பு எத்தகையது என்பதையும், அதிலும் முதல் குழந்தையாகப் பிறக்கும் பெண் குழந்தைக்கு ஏற்படும் சிக்கலையும் இவ்வரிகள் தெளிவுபடுத்துகின்றன. முதல் குழந்தையின் கல்வி நிறுத்தப்படுகிறது. இக்குழந்தைக்கு அடுத்துவரும் பிள்ளைக்குத் தாயைப்போலப் பணிசெய்ய வேண்டியவள் ஆகிறாள். எனவே, இத்தகைய சிறுமிகள் குழந்தையைப் பெறாமலேயே தாய் நிலையை அடைவதாகக் கவிஞர் குறிப்பிடுகின்றார். இதனை,

**“கக்கத்தை**

**விட்டிறங்கினால்**

**வீலென அலறும்**

**தம்பியின்**

**மூக்குச் சளிக்காக**

**என் பாவாடை**

**வீடு பெருக்க**

**கந்தலை கசக்க**

**கஞ்சித் தண்ணி கிண்டிவிட**

**ஊதினாலும்**

**எரியாத**

**ஈரவிறகுகள்**

**நானும்”**[32]

---

30. தமிழன்பன், பனி பெய்யும் பகல், ப. 32.
31. கஸ்தூரி ராசா, கஸ்தூரி ராசாவின் கவிதைகள், ப. 10.
32. யுகபாரதி, மனப்பத்தாயம், ப. 80.

என்ற கவிதைவழி எடுத்துக்காட்டியுள்ளார் கவிஞர் யுகபாரதி.

"பத்தாங்கிளாஸ் படிப்போடு
பிறகு முழு நேரமும்
அம்மாவுக்கு ஒத்தாசை செய்வது
அடுப்பங்கரையில்தான்"[33]

என்ற வரிகள் பெண் கல்வி மறுப்பும், பெண்கள் சிறுவயதிலேயே குடும்ப வேலைகளில் மூழ்கடிக்கப்படுவதும், எங்கும் ஏற்றுக்கொள்ளப்பட்டுவிட்ட சமூக நடைமுறை என்பதை எடுத்துக்காட்டுகின்றன.

## 4.16.சுமையாகக் கருதும்போக்கு

பெண் குழந்தைகளைப் பெறுவதும் அவர்களை வளர்ப்பதும் பெரும் சுமையெனக் கருதும் போக்கு இன்றையச் சமூகத்தில் காணப்படுகிறது. இத்தகைய போக்கே பெண்களின் திருமணம், பாதுகாத்தல் போன்ற வாழ்வியல் சிக்கல்களாக உருப்பெறுகின்றன. இதனை,

"பெண்ணே
உன்னைப்
பத்துமாதம்
சுமந்தேன்
எனக்குப் பாரமாய்
இல்லையடி!
உன்னை
இந்தப் பூமியில்
இருபது வயதுவரை
சுமப்பதற்குள்
எனக்கேன்
இத்தனைப் பாரமடி"[34]

என்ற கவிதை வெளிப்படுத்துகின்றது. பெண் குழந்தைகளை வளர்ப்பது, பாதுகாப்பது கடினமான செயலாக உள்ளதை அறியமுடிகின்றது. பெண்ணின் வளர்ச்சியையொட்டி

33. ஹெச். ஜி.ரசூல், மைலாஞ்சி, ப. 25.
34. எம்.ஹெச்.ஹசீனாபர்வீன், வைகறைக் கோலம், ப. 33.

வளர்ந்துவரும் சமூக, பொருளாதாரச் சிக்கல்களே இதற்குக் காரணமாக அமைகின்றன.

துணியெடுத்தல், பிறந்தநாள் கொண்டாடுதல் போன்றவற்றில்கூட பெண்குழந்தைகள் தனித்துப் பார்க்கப்படுகின்றனர். பெரும்பாலான பெண் குழந்தைகள் புதுத்துணிகள் பெறும்போது, அவர்களது சகோதரர்களைவிடக் குறைவாகவே பெறுகின்றனர். அடுத்துத் துணிகளைத் தேர்ந்தெடுப்பதற்கு ஆண்குழந்தைகள் கடைகளுக்கே அழைத்துச் செல்லப்படுகின்றனர். மாறாக, பெண்குழந்தைகள் எது அவர்களுக்குக் கொண்டுவந்து தரப்படுகிறதோ அதோடு மட்டும் நிறைவடைபவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் விரும்பும் வண்ணத்தைக்கூட அவர்களால் தேர்ந்தெடுக்க முடிவதில்லை. இத்தகைய விருப்ப மறுப்புகள் பல முக்கியமான வாழ்க்கை அம்சங்களில் அவர்களின் சுயாட்சியை மறுப்பதற்கு வழியமைத்துக் கொடுப்பது தெளிவாகிறது. இவ்வாறு, பெண்ணின் அடிப்படை விருப்பங்களும் உரிமைகளும் பறிக்கப்படுவதைக் கவிதைகளும் சுட்டிக்காட்டுகின்றன.

"பரிவுடன் அணைத்தாய்
பொன் நகை பூட்டினாய்
பாட்டிசைத்துத் தாலாட்டினாய்
ஆனால்
எதற்கு ஊரைக் கூட்டி
பிறந்த நாள் கொண்டாட்டம்
நாளைக்கு இருக்கிறதே பெரியசெலவு
என்கிறாய்"[35]

எனும் கவிதைவழி, பெண்களின் திருமணச்செலவு பற்றிய சிந்தனை, பெண்ணின் பிறந்தநாள் முதலே பெற்றோர்க்குப் பாரமாக அமைந்து விடுதலும், அதன் காரணமாய் வளர்ப்பு நிலையில் பெண் குழந்தைகளின் விருப்பங்கள் பொருளாதாரக் காரணங்கள் காட்டிப் புறக்கணிக்கப்படுவதையும் இக்கவிதையின் வாயிலாக அறியமுடிகின்றது.

35. வத்ஸலா, மு.நூ., ப. 35.

இதைப்போன்றே பெண்களைச் சுதந்திரமாக வெளியில் செல்ல அனுமதிக்காத போக்கும் நிலவுகிறது. இதற்குப் பல்வேறு காரணங்கள் கூறப்படுகின்றன. குறிப்பாக, பெண் தன்னிச்சையாக வாழ்க்கைத் துணையைத் தேடிக்கொள்ளத் தகுதியற்றவள் என்று கருதுவதும், கற்பு என்ற கோட்பாட்டின் மீது சமூகம் கொண்டுள்ள ஆழமான பிடிப்புமே இதற்குக் காரணமாக அமைகின்றது.

## 4.17.இனிப்புப் பண்டம்

குழந்தைகள் விரும்பி சாப்பிடக்கூடிய இனிப்புப் பண்டங்களைத் தயாரிக்கும் குறு, சிறு நிறுவனங்களில் குழந்தைகளுக்குத் தேவையான அனைத்துப் பண்டங்களும் தயாரிக்கப்படுகின்றன. அந்த நிறுவனங்களிலும்கூட குழந்தைத் தொழிலாளர்கள் பணியமர்த்தப்படுகின்றனர். அதிலும் பெண் குழந்தைகளின் உழைப்பு அளவிடமுடியாத அளவிற்கு உழைத்துக் களைத்துப் போகும் போக்கினை,

> "மௌன மென்பது
> சொற்களற்ந்த மொழி
> மொழியென்பது
> உணர்வு ததும்பும் பார்வை
> நிறைவும் மௌனிப்பும்
> விரித்துக் காட்டிய குளவசீகரம்
> எதேச்சையான கேள்வி எறிய
> கலைந்து நிலைபெறும்
> அலுப்பான வாழ்வின் சோகம்
> கேள்வியாகும் மீண்டும்
> விடையில்லாத வசீகரம்
> தேய்ந்து நிறையும்"[36]

என்ற கவிதையின்வழி, படம்பிடித்துக் காட்டியுள்ளார் கவிஞர் குட்டிரேவதி.

குழந்தைகள் விரும்பி சாப்பிடக் கூடிய இனிப்புப் பண்டங்களை அம்மா செய்து கொடுக்கிறாள். குழந்தை அந்த இனிப்புப் பண்டத்தைத் தன் அம்மாவுக்கே ஊட்டி

---

**36.** குட்டி ரேவதி, முலைகள், ப. 53.

மகிழக் கூடிய காட்சியைத் தன்கவிதை வழி பின்வருமாறு தெளிவுபடுத்துகிறார் கவிஞர் மாதங்கி.

"அம்மா கொடுத்த இனிப்பைப் பிட்டு
அம்மாவுக்கே ஒரு துண்டு கொடுக்க
வாங்க மறுக்கும் அம்மாவிடம்
உம் என்று அதட்டி
விழிகளை உருட்டி
விரலை நீட்டி மிரட்டி
வாயில் திணிக்கிறாள்
அம்மாவை மிரட்டக்
குழந்தைகளுக்கு
வாய்ப்பு கிடைக்கிறது
அம்மாவும்
பயப்படுவது போல்
பாவனை செய்கிறாள்
பிறகு புன்னகைக்கிறாள்
திகட்டினாலும் கூட"[37]

என்ற கவிதை அம்மாவிற்கும் குழந்தைக்கும் இருக்கும் அன்பை வெளிப்படுத்துவதாக அமைகின்றது. இவ்வாறு குழந்தைகள் இனிப்புப் பண்டங்களை விரும்பி சாப்பிட்டாலும் அந்தக் குழந்தை தன் அம்மாவிற்கும் ஒருவாய் ஊட்டி மகிழும் காட்சியைக் கவிஞர் படம்பிடித்துக் காட்டியுள்ளார்.

## 4.18.பணிப்பெண்

குடும்ப வறுமையின் காரணமாக பெண் குழந்தைகள் வசதிபடைத்தோரின் இல்லங்களில் சிறு குழந்தைகளைப் பார்த்துக்கொள்ளும் பணிக்கு அமர்த்தப்படுகின்றார்கள். வேலை செய்யும் இடங்களில் வீட்டு எஜமானியால், மனக்காயங்களுக்கும் உடற்காயங்களுக்கும் ஆளாகின்றனர் என்பதை,

---

**37.** மாதங்கி, நாளை பிறந்து இன்று வந்தவள், ப. 37.

"குளிரூட்டப்பட்ட தொடர்வண்டிப் பெட்டியில்
குறுக்கும் நெடுக்குமாக அலையும்
குழந்தையைத் துரத்திச் சென்று
பிடித்துவரும் குட்டிப்பெண்
எஜமானியின் விலையுயர்ந்த
திருத்தப்பட்ட பழைய உடைக்குள்
அவள்தன் சிறிய உருவத்தை
ஒட்டி வைத்துள்ளாள்
தூண்டிலில் சிக்கிய மீனென
அவளது விழிகள் துடித்துக் கொண்டிருந்தன
அந்நீண்ட பயணம் முழுவதும்
அவளுடலின் மறைவிடங்களில்
பதுங்கியிருக்கும் சூட்டுக் காயங்கள்
அடிப்பட்டப் பாம்பெனச் சுருண்டிருந்தன"[38]

என்று மாலதி மைத்ரி, ஒரு பெண் குழந்தையின் இரணத்தைச் சுட்டிக் காட்டியுள்ளார். குழந்தைத் தொழிலாளர்களைப் பணியில் அமர்த்துவது சட்டப்படி குற்றமாகும். அரசு விதி 1986இன் படி குழந்தைகளை வேலையில் அமர்த்துவது குற்றமாகக் கருதப்பட்டாலும், குடும்பச் சூழ்நிலையின் காரணமாக வசதிபடைத்த இல்லங்களில் குழந்தைகளைப் பராமரிக்கும் பணியைச் செய்யும் ஏழைப் பெண்குழந்தைகள் இன்றும் இருந்து வருவதை அறியமுடிகின்றது.

## 4.19.போர்க்களம்

ஆணாதிக்கச் சமுதாயமானது பெண் குழந்தைகள் மீது உடல் ரீதியாகவும் மன ரீதியாகவும் தொடர்ந்து தாக்குதலை நடத்திக் கொண்டே இருக்கிறது. எண்ணற்ற குழந்தைகள் இந்தத் தாக்குதலுக்கு ஆளாகின்றனர். பெண் குழந்தைகள் உரிமை மீறல்களையும், தங்களுக்கு ஏற்படும் இன்னல்களையும் மௌனமாக ஏற்றுக் கொள்கிற மனநிலையில்தான் வளர்க்கப்படுகிறார்கள் என்பதை,

38. மாலதி மைத்ரி, எனது மதுக்குடுவை, ப. 48.

"படுக்கையறையில் குழந்தைகள் மைதானத்தில்
நீல ஆகாயத்தில்
புல்வெளியில் திறக்கிறது ஒரு போர்க்களம்
எங்கோ பூப்போன்றதொரு சிறுமியின் உறுப்பு
நகங்களால் கிள்ளி யெடுக்கப்படுகிறது
எங்கோ எனது தோழி புதியதொரு வீட்டில்
எரிந்து கொண்டிருக்கிறாள்
குவி ஆடியில் பீறிடும் ஒளியின் வீச்சு என
இங்கே நிதம் ஒரு மன வெளியில்
சிறகுகள் உதிர்க்கிறது
எனது பருவ உடல்"[39]

என்று குட்டி ரேவதி, தன் கவிதை வழி சிறுமிகளுக்கு ஏற்படும் அவலத்தைச் சித்தரித்துக் காட்டுகிறார்.

## 4.20.பூனை இரவு

ஆண்களின் வன்பிடியில் சிக்கித் தடுமாறும் பெண் குழந்தைகள் மனரீதியான அச்சத்திற்கு உள்ளாகின்றனர். ஆண்கள் தன்னிலை விடுதலைக்காக அச்சுறுத்திப் பெண்களின் வாழ்க்கையைச் சிதைக்கின்றனர். இளஞ்சிறுமி ஒருத்திப் பாலியல் அச்சம் நிறைந்து ஒளிந்திருப்பது அதிர்ச்சியளிப்பதாகத்தான் இருக்கிறது.

"தெரு நாய்கள் குரைத்த
பூனை இரவில் ருசித்த
குற்ற உணர்வின் நகக் கீறல்கள் பதித்த
ஒரு பெண்ணின் உடல்
கனன்று கிடக்கிறது இன்னமுமதில்
துவண்ட விரல்களாய் உனக்கும்
இரகசியத்துடன் படபடப்புடன்
துரோகத்தினை அறியும்
துயரமானதொரு அந்திச் சிவப்பாய் அவர்களுக்கும்"[40]

39. குட்டி ரேவதி, முலைகள், ப. 60.
40. தமிழச்சி தங்கபாண்டியன், வணப்பேச்சி, ப. 78.

என்று தமிழச்சி தங்கபாண்டியன், சிறுவயதிலேயே பெண் குழந்தைகள் உடல் ரீதியாகவும் மன ரீதியாகவும் பாதிக்கப்படுவதை எடுத்துரைத்துள்ளார்.

## 4.21.ஆண்களின் மிருகச்செயல்

பெண்கள் மென்மையானவர்கள்; பூப்போன்றவர்கள் என்றெல்லாம் ஆண்களால் வருணிக்கப்படுகிறார்கள். வருணித்துக் கொண்டே பெண்கள்மீது கொடூரமான செயல்களை நடத்துகின்றனர். பெண்கள் இன்று சக உயிராகக்கூட மதிக்கப்படுவதில்லை. பெண்களின் நிலை இதுவென்றால், பெண் குழந்தைகளின் நிலைமை அதைவிடக் கொடுமையானது. கருவிலிருக்கும் போதே கொல்லுதல், பாலியல் பலாத்காரம், கொலை போன்ற வக்கிரமானச் செயல்களை ஆண்கள் பலவகைகளில் நிகழ்த்துகின்றனர். இந்நிலையைத் தாமரை,

> "மிருகங்கள் நேர்மையானவை
> எதிரே நின்று தாக்கும்
> பலாத்காரம் செய்து
> கொன்று புதைத்து விட்டு
> எதுவுமே நடவாதது போல்
> நகராது என்று சொல்"[41]

என்று ஆதங்கத்துடன் கூறுகிறார். அதாவது, ஆண் வர்க்கமானது மிருகங்களைவிட மிகவும் மோசமான வர்க்கம் என்று இக்கவிதைவழி சுட்டிக்காட்டுகிறார். மேலும், வக்கிர குணம் படைத்த ஆண்வர்க்கத்தின் உலகினைப் பற்றிக் கூறவந்த கவிஞர் ஔவை,

> "வாழ்வின் முழுமைக்கு
> பெண் குழந்தை வேண்டுமென்று
> பேரவாக் கொண்டிருந்த என் தாய்மை
> பிறந்த நாள் முதலாய்
> இளஞ்சிவப்பு வர்ணத்தில்
> சட்டை தைத்து
> பொட்டு வைத்து காது குத்தி

41. தாமரை, மு.நூ., ப. 42.

**பெண்ணாய் அவளை நினைத்த**
**என் தாய்மை’**
**பெண்ணென்று பிறந்ததற்காய்**
**பெருமைப்பட வேண்டுமென்று**
**கனவுகளில் திளைத்திருந்த**
**என் தாய்மை**
**சிறகொடிக்கப்பட்ட ஒரு**
**ஒற்றைத் தும்பியாய்**
**திகைத்துப் போய் மிரண்டு கிடக்கிறது”**[42]

என்று கவிதைப்படுத்தியுள்ளார். இச்சமூகத்தில் நிலவும் ஆண்வர்க்கத்தின் வக்கிர புத்தியை எண்ணிய தாய், தவமாய்த் தவமிருந்து பெற்ற தன் பெண் குழந்தைக்கு இவ்வுலகை எவ்வாறு காண்பிப்பது என்று வருந்துவதாக இக்கவிதை அமைகின்றது. மேலும்,

**“வக்கிரம் நிறைந்த விலங்குணர்வின்**
**குரூரம் நிறைந்த கயமையின் முன்னால்**
**சிதறிப் போயிற்று சில்லம் பல்லமாய்**
**சிதறிப் போயிற்று**
**என் மகளுக்கு**
**எப்படிக் காட்டுவேன்**
**இந்த உலகை”**[43]

என்று பெண் குழந்தையை ஈன்றெடுத்த தாயின் உள்ளக் குமுறலை வெளிப்படுத்துகிறார் கவிஞர்.

**“மூன்று வயதிலும்**
**பால் முலையருந்தும் பவளவாய்க் குருத்துகள்**
**கொஞ்சிக் குலவி**
**நிலாக் காட்டச் சிரிக்கும்**
**சின்ன வயதிலும்**
**ஆண் குறிகளால் துளைக்கப்படுவதை**
**எப்படிக் காட்டுவேன்”**[44]

---

**42.** ஔவை, எதை நினைந்தழுவதும் சாத்தியமில்லை, ப. 62.
**43.** ஔவை, எதை நினைந்தழுவதும் சாத்தியதில்லை, ப. 63.
**44.** மேலது.

எனப் புலம்பும் தாயின் குரலைக் காணமுடிகின்றது. மூன்று வயதுப் பெண் குழந்தைகள் கூட காமவெறியர்களால் இச்சிக்கப்படும் இச்சமூகத்தை என் குழந்தைக்கு எப்படிக் காட்டுவேன் எனப் புலம்பும் தாயின் வேதனையைக் காட்சிப்படுத்துகிறார் கவிஞர் ஔவை.

*"அள்ளி அணைக்கின்ற அப்பாவோ*
*ஆசையுடன் கொஞ்சுகின்ற மாமாவோ ஆயினும்*
*அடிவயிற்றில் துளையிடும்*
*ஆண்குறியர்களாகிப் போய்விடக் கூடிய*
*இந்த உலகை*
*எப்படிக் காட்டுவேன்"*[45]

என்ற கவிதை வரிகள் அள்ளி அணைக்கின்ற அப்பாவும், ஆசையுடன் கொஞ்சுகின்ற மாமாவும் கொஞ்சம் கூட இரக்கமின்றி பிஞ்சுக்குழந்தைகளையும் பாலியல் வன்புணர்வு செய்பவர்களாக உள்ளனர் என்பதைச் சுட்டிக்காட்டி, இச்செயலைக் கண்டிக்கின்றார் கவிஞர் ஔவை.

## 4.22.துரத்தும் விரல்கள்

பெண் குழந்தைகளைப் பலவந்தமாக வன்புணர்ச்சிக்கு உள்ளாக்குதல் காலம் காலமாகத் தொடர்ந்து வருவது பெண் குழந்தைகளுக்கெதிரான வன்முறைக் கொடுமையின் உச்சக்கட்டம் ஆகும். ஆணாதிக்கச் சமூகத்தின் அத்து மீறல்களின் காரணமாகவே இக்கொடுமையானது நிகழ்த்தப்படுகிறது. வீட்டு வேலை செய்வதற்காகச் சிறுமிகள் பிற மாநிலங்களுக்கு அனுப்பப்படுகின்றனர். அங்கு "வேலியே பயிர்களை மேய்ந்தது போல" என்ற பழமொழிக்கு ஏற்ப வீட்டு எஜமான்களே அச்சிறு குழந்தைகளை வன்புணர்வு செய்து, கொன்று விடுகின்றனர். இதனைக் கண்டுகொள்ளாத சமூக அமைப்பே இன்று காணப்படுகிறது.

*"மரச்சீனிக் கிழங்கு*
*வாசமடிக்கும் வீடுகளுக்குள்*

---

45. மேலது.

**நான் குறிக்கப்படாத**
**மரண தண்டனைக் கைதியாய்**
**அடைபட்டுக் கிடக்கும்**
**சிறுமிகளின் உடல்கள்**
**சித்தரவதைகளுக்குப் பின்**
**சில வேளை ரணங்களுடன்**
**பிணவறையில் கண்டெடுக்கப்படலாம்**
**தமிழகத்து அடிமாடுகளைவிட**
**சற்றுக் கூடுதல் விலைக்கு விற்கப்படும்**
**சிறுமிகளைக் குறித்து**
**தேசியவாதிகள் யாரும்**
**சாலை மறிக்க முன்வருவதில்லை"**[46]

என்று மாலதி மைத்ரியின் கவிதை வறுமையின் பொருட்டு விற்கப்படும் சிறுமிகள் பல்வேறு இன்னல்களுக்குப் பிறகு, பிணமாகக் கண்டெடுக்கப்படுவதைப் படம்பிடித்துக் காட்டுகிறது.

## 4.23.குழந்தைகளைப் புரியாமை

இன்றைய சமூகத்தில் குழந்தைகளை அன்போடும் பண்போடும் வளர்க்கும் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளின் தேவையை முழுமையாகப் பூர்த்தி செய்ய நேர்கின்றனர். குழந்தைகளுக்காக தங்களையே மாற்றிக்கொள்கின்றனர். குழந்தையின் எதிர்காலத்தை எண்ணி நல்ல பள்ளியில் சேர்க்கின்றனர். எல்லா நிலைகளிலும் குழந்தையின் உள்ளத்தைப் புரிந்த பெற்றோர் குழந்தை முரண்டுபிடிப்பதற்கும், முரண்படுதலுக்கும் உள்ள வித்தியாசத்தை அறியாமல் இருப்பதைக் கவிஞர் கவிதைபடுத்தியுள்ளார்.

**"பிள்ளைகளை அடிக்கும் பெற்றோர்களுக்குச்**
**சொக்காய் வாங்கத் தெரிகிறது**
**பிடித்த உணவைத் தருவிக்கத் தெரிகிறது**
**முட்டிமோதி பள்ளியில்**
**இடந்தேடத் தெரிகிறது**

46. அ.வெண்ணிலா, இசைக்குறிப்புகள் நிறையும் மைதானம், ப. 18.

சொட்டும் வியர்வையும் பிள்ளைக்கு
என்று உள்ளத்தின் துடிப்பு
புரிகிறது
புரிதலின்றித் தவிக்கிறது
முரண்டுபிடிப்பதற்கும்
முரண்படுதலுக்கும்
உள்ள வேறுபாட்டை மட்டும்
ஏன் அறியாமல் போயினர்
என்பது"[47]

என்ற கவிதை குழந்தைகளுக்காகப் பார்த்துப் பார்த்துச் செய்யும் ஒவ்வொரு பெற்றோரின் அன்பினையும் வெளிப்படுத்துகிறது.

## 4.24.பெண்ணின் பல பெயர்கள்

ஆணுலகையும், பெண்ணுலகையும் தோற்றுவிக்கும் மிகப்பெரிய சக்தியாக விளங்கக்கூடியவள் பெண்தான். அப்படிப்பட்ட பெண்ணினத்திற்கு இச்சமூகம் பல்வேறு பெயர்களைக் கொடுப்பதாகக் கவிஞர் கூறுகிறார்.

"நான் மகள்
குழந்தை
மாணவி
தோழி
ஃபிகரு
காதலி
மனைவி
தேவிடியா
நடத்தை கெட்டவ
குடிகெடுக்கிறவ
சமூகசேவகி
டீச்சர்
தாதி
வேலைக்காரி
இலக்கியவாதி

---

47. மாதங்கி, மு.நூ., ப. 30.

நடிகை
குலுக்கல் நடிகை
போராளி
தலைவி
உழைப்பாளி
நகை ஸ்டாண்டு
பக்தியானவள்
தீண்டத்தகாதவள்
தெய்வம்
தெய்வத்தின் பிரதி
இன்னும்
கடல், நதி, மண், வானம்
முடிவில்லாதவள் நான்
ஆனால் ~
நான் ஒரு உடல்”[48]

ஒரு தாயின் கருவறையில் இருந்து வெளியே வரும் ஒரு பெண் குழந்தை சமூகத்தின் பார்வையில் இயற்கையாக, தெய்வமாக எனப் பல்வேறு கதாப்பாத்திரங்களை ஏற்று வருவதை இக்கவிதை உணர்த்தி நிற்கின்றது.

## 4.25.குழந்தைகளின் கொஞ்சுமொழி

தாயின் கருவறையில் இருந்து வெளியே வந்த குழந்தையைப் பெற்றோர்களும் உறவினர்களும் கொஞ்சும் மொழிகளைக் கவிஞர் பின்வருமாறு கூறுகிறார்.

“கொஞ்சும் நேரங்களில்
குட்டிப் பாப்பா
சுட்டிப் பாப்பா
புஜ்ஜிக்குட்டி
அம்முக்குட்டி
செல்லப் பாப்பா
வெல்லக்கட்டி
பட்டுக்குட்டி
சிட்டுக்குருவி

48. ப்ரேமா ரேவதி, யாக்கையின் நீலம், ப. 30.

**ரெட்டைவால் குருவி**
**கோபப்படும் நேரங்களில்**
**குட்டிச் சாத்தான்**
**பாம்புக்குட்டி**
**லூசு**
**பிசாசு**
**குட்டிப்பிசாசு**
**குரங்கு**
**இவனே சமயங்களில் அழைக்கப்படுகிறான்"**[49]

என்ற கவிதை வரிகள் குழந்தைகளின் கொஞ்சு மொழியாகவும் பெற்றோர்களும் உற்றோர்களும் கோபப்படும் பொழுது செல்லமாகத் திட்டும் மொழியாகவும் விளங்குவதைக் காட்சிப்படுத்துகிறார் கவிஞர்.

## 4.26.பெண்குழந்தையின் ஆதங்கம்

இன்றையச் சமுதாயத்தில் பெண் குழந்தை மீதான வன்முறைகள் எல்லா இடங்களிலும் பல்வேறு வடிவங்களில் நிகழ்த்தப்படுகின்றன. இதன் விளைவாகப் பெண் குழந்தைகள் மன ரீதியாகவும், உடல் ரீதியாகவும் பாதிக்கப்படுகின்றனர் என்பதைக் கவிஞர் சுட்டிக்காட்டியுள்ளார்.

**"மரத்திலிருந்து விடுபட்டுப் பறந்த பூவைப்போல்**
**ஏதும் பயனிலாது ஒரு விதையாகக் கூட மாறாத**
**அவள் பாட சாலையின் பருவம் ஆனால்**
**ஆண்களின் உடலோடு உறவு கொண்டு உறவு கொண்டு**
**வல்லியதொரு விதையாக மாறினாள்"**[50]

என்ற குட்டி ரேவதியின் கவிதை பெண் குழந்தையின் மனக்குமுறலைப் படம்பிடித்துக்காட்டுகிறது. பெண்குழந்தை மீதான பாலியல் கொடுமை என்பது ஆணாதிக்கச் சமூகத்தில் நிலவிவரும் ஒரு கொடுஞ்செயலாக உள்ளது.

---

**49.** கார்த்திகா, இவளுக்கு இவள் என்றும் பேர், ப. 65.
**50.** குட்டி ரேவதி, உடலின் கதவு, ப. 121.

பெண் குழந்தைகளுக்குப் பாதுகாப்புச் சட்டம் இருப்பினும், குற்றங்கள் நடந்து கொண்டுதான் இருக்கின்றன என்பதை,

**"எழுத்தறியாத**
**குழந்தைகளின்**
**உச்சரிப்புகளில்**
**கை கூடி வருகிறது**
**உயிர்ப்பதற்கான**
**இடைவெளி,**
**பாலியல் பலாத்காரம்**
**செய்யப்பட்ட**
**சிறுமியின் முனகலை**
**உச்சரிக்க முடிந்ததேயில்லை"**[51]

என்ற கவிதையில் பதிவு செய்துள்ளார் கவிஞர் வெண்ணிலா. பெண்குழந்தைகளுக்கு எத்தனையோ பாதுகாப்புச் சட்டங்கள் இருந்தாலும்கூட பெண்குழந்தையின் மீதான தாக்குதலும், பாலியல் பலாத்காரமும் நடந்தேறிய வண்ணம்தான் இருக்கிறது. சட்டங்களைவிட மனிதர்களின் மனம் மாறினால்தான் இதுபோன்ற இழிநிலை பெண்குழந்தைகளுக்கு ஏற்படாமல் பாதுகாக்க முடியும் என்பது தெளிவாகின்றது.

## 4.27.முடிவுரை

- பெண் குழந்தைகள் பிறப்பு முதல் இறப்புவரை பல இன்னல்களுக்கு ஆட்பட்டு துன்பப்படுவதை அறியமுடிகின்றது.
- சமூகத்தில் பெண் குழந்தைகள் வரவேற்பின்மையால் கருவிலேயே அழிக்கப்படுவதையும், அழிக்கப்படும் முறைமைகள் குறித்தும் கவிஞர்களின் கவிதைகள் படம்பிடித்துக்காட்டியுள்ளன.

---

**51.** அ.வெண்ணிலா, மு.நூ., ப. 18.

- ❖ அறிவியல் கண்டுபிடிப்புகளால் கருவில் வளரும் குழந்தை ஆணா? பெண்ணா? எனக் கண்டறியப்பட்டு கருக்கலைப்பு செய்யப்படும் நவீனத் தொழில் நுட்பத்தை இச்சமூகம் எதிர்பார்ப்பதைக் காணமுடிகின்றது.

- ❖ பெற்றோரின் வறுமையைப் போக்குவதற்காகக் குழந்தைகள் இனிப்புப் பண்டகசாலைகளிலும், தீப்பெட்டித் தொழிற்சாலைகளிலும் குழந்தைத் தொழிலாளர்களாகத் தங்களின் வாழ்க்கையை அர்ப்பணித்துக் கொள்வதை அறிய முடிகின்றது.

- ❖ வீட்டு வேலை என்ற பெயரில் குழந்தைத் தொழிலாளர்களாகப் பெண் குழந்தைகள் பணியமர்த்தப்படுகின்றனர். அங்கு அவர்களுக்குப் பாலியல் ரீதியான கொடுமைகள் இழைக்கப்படுவதைக் கவிஞர்களின் கவிதைகளின்வழி காணமுடிகின்றன.

- ❖ சிறு வயதிலேயே குழந்தைத் திருமணம் செய்து வைப்பதால் அவர்களுக்கு நேரிடும் துன்பத்தினைக் கவிஞர்களின் கவிதைகள்வழி அறியமுடிகின்றது.

- ❖ பெற்றோர்களின் பொறுப்பின்மையால் பெண் குழந்தைகளுக்கு ஏற்படும் பல்வேறு இன்னல்களைக் கவிஞர்களின் கவிதைகள் சுட்டிக்காட்டுகின்றன.

- ❖ சிறு வயதிலேயே பெண்ணைப் பெண்ணாகவும், ஆணை ஆணாகவும் பாலினப்படுத்தப்பட்டு, விளையாட்டிலும்கூட இது பெண்களுக்கான விளையாட்டு, இது ஆண்களுக்கான விளையாட்டு என்று பாலினப்படுத்தும் பாகுபாட்டினை அறிய நேரிடுகிறது.

- ❖ பெண்குழந்தை பிறப்பு என்பது இச்சமூகத்தின் சாபக்கேடாகக் கருதப்படுவதைக் கவிஞர்களின் கவிதை வரிகள் சுட்டிக்காட்டுகின்றன.

- **பெண் குழந்தைகள் ஆணாதிக்கத்தின் மிருகச் செயல்களால் மன ரீதியாகவும் உடல் ரீதியாகவும் பாதிக்கப்பட்டு, பல்வேறு இன்னல்களுக்கு ஆளாகின்றனர் என்பதைக் கவிதைகள் எடுத்துக்காட்டியுள்ளன.**

- **பெண் குழந்தைகள் சிசுவிலிருந்தே சமூகத்தினரால் புறக்கணிக்கப்பட்டு சிசுவிலேயே கொலைசெய்யப்படுவதைக் கவிதைகளில் காணமுடிகின்றது.**

- **பெண் குழந்தைகளின் மீதான தாக்குதல்களும், பாலியல் வன்முறைகளும் சமூகத்தில் இன்றும் அரங்கேற்றப்பட்டு வருவதைக் காணமுடிகின்றது.**

- **இவ்வாறு பெண் குழந்தைகளுக்குப் பல்வேறு வடிவங்களில் தாக்குதல்கள் நடந்திருப்பதை மேற்கண்ட கவிஞர்களின் கவிதைகள் ஆதங்கமாகவும், பெண் குழந்தைகளின் குமுறல்களாகவும் காட்சிப்படுத்தப்பட்டிருப்பதை அறியமுடிகின்றது.**



# இயல் - 5

# பெண்களின் மீட்பியற் சிந்தனைகள்

## 5.0.முன்னுரை

பெண்ணியம் என்பது பெண் விடுதலை இயக்கங்களை நெறிப்படுத்திச் செல்வதற்காக உருவாக்கப்பட்ட உலகத் தத்துவம் ஆகும். இத்தத்துவம் கி.பி. பதினெட்டு, பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் இங்கிலாந்து, பிரான்ஸ், அமெரிக்கா போன்ற மேலை நாடுகளில் தோற்றுவிக்கப்பட்டது. ஆசிய நாடுகளில் குறிப்பாக இந்தியாவில் பெண்ணியம் என்ற சொல்லாடல்தான் புதியதே தவிர, பெண்ணிய உணர்வுகள் மிகத் தொன்மையானவையாகும். இந்தியாவில் தொன்மைத் தாய்வழிச் சமுதாயத்தில் நிலவிய “மூலப்பிரகிருதி” என்னும் பெண்மைத்தத்துவம் இன்றைய பெண்ணியத்திற்கு மூல வேராக விளங்குவதைக் காணலாம்.

பெண்ணியத் தத்துவம் என்பது தொன்மையானது; உலகப் பொதுமையானது. அதன்வழி உருவாக்கப்படும் கருத்தியல்கள் வேண்டுமானால் காலத்துக்குக் காலம், தேசத்துக்குத் தேசம் மாறுபடுமே தவிர அடிப்படையாய் விளங்கும் பெண்ணியத்தத்துவம் உலகம் முழுமைக்கும் பொதுமையானதே. அதன் அடிப்படையில் இவ்வியலில் இந்தியாவில் குறிப்பாக தமிழகத்தில் வேரோடிக் கிடக்கக்கூடிய பெண்ணியச் சிக்கல்களுக்குத் தமிழ்ப் புதுக்கவிதையின் மூலம் வெளிப்படும் பெண்களின் மீட்பியற் சிந்தனைகளைக் காண்பதே இவ்வியலின் நோக்கமாக அமைகின்றது.

## 5.1.பெண்ணியம்-தத்துவப்பார்வை

பெண்ணியம் ஓர் உலகத் தத்துவமாக உலகெங்கிலும் உள்ள பல்கலைக்கழகங்களிலும் கல்லூரிகளிலும் கற்பிக்கப்பட்டும் ஆராயப்பட்டும் வருகின்றது. இருந்த போதிலும், பெண்ணியம் பற்றிய புரிதல்கள் எதிர்மறையாகவே நிலவுகின்றன. பெண்ணியம் என்பது முழுக்க முழுக்க அந்நியக் கருத்தமைவு என்றும், அது சமூகத்தில் கலாச்சாரச் சீரழிவை ஏற்படுத்திவிடும் என்றும் விமர்சனம் நிலவுகிறது. இந்த விமர்சனத்திற்குக் காரணம் "தத்துவம்" பற்றிய புரிதல் இன்மையே என்று கூறலாம்.

பெண்ணியம் என்பது பெண்ணின் மகத்துவத்தை உள்ளடக்கமாகக் கொண்ட ஓர் உலகத்தத்துவமாகும். இத்தத்துவம் அடிப்படையானது; நிலைப்புத் தன்மை கொண்டது; உலகம் முழுமைக்கும் பொதுமையானது. இத்தத்துவத்தின் அடிப்படையில் உருவாக்கப்படும் கருத்தியல்கள்தான் காலத்துக்குக் காலம் தேசத்துக்குத் தேசம் மாறுபடும் தன்மை கொண்டதாக அமைகின்றது. குறிப்பாக, அந்தந்த தேசத்தின் மக்களினம், பொருளாதாரம், அரசியல், கலாச்சாரப் பின்னணியில் பலதரப்பட்ட பெண்ணியக் கருத்தியல்கள் தோற்றம்பெற்று, பெண்களின் எழுச்சிக்குக் காரணமாக அமைந்திருக்கலாம்.

பெண்களின் வழியே வெளிப்பட்டுத் தெரிகிற தாய்மை காந்தி - மார்க்ஸ் - ஏசு - வள்ளுவர் முதலிய சான்றோர்களுக்குள் இயங்கியது. சமூக வாழ்வின் மேம்பாட்டுக்காகத் தம்மை இணைத்துக் கொள்கிற அனைவர்க்குள்ளும் இயங்குவது இந்தத் தாய்மைதான். இயற்கையை, உயிர்களை, மனிதவாழ்வை இன்று காப்பாற்றக்கூடியது இந்தத் தாய்மைப் பண்புதான். படைப்புத் திறன்மிக்க கவிஞர்கள், படைப்பாளிகள் இந்தத் தாய்மையைத் தமக்குள் இயல்பாக உணர்ந்திருக்கிறார்கள். பெண்ணியம் தன்னை ஆழத்தோண்டிச் செல்லும்பொழுது தன் ஆதார சக்தியாக இந்தத் தாய்மைப் பண்பைத்தான் கண்டுபிடிக்கிறது. இந்தத் தாய்மைதான் இன்று

**உலகைக் காப்பாற்றும் என்ற தத்துவத்தை முன்வைக்கிறார் ஞானி.[1] இத்தகைய தத்துவத்தைப் பார்க்கும்போது சில பெண்ணியக் கருத்தியல்களில்தான் குறைபாடு உள்ளதே தவிர அடிப்படைப் பெண்ணியத் தத்துவத்தில் குறைபாடு இல்லை என்பது தெளிவாகிறது.**

## 5.2.பெண்ணியம் - மீட்பியற்சிந்தனை

**நிலவுடைமைத் தோற்றம் பெற்றதும் முதலாளித்துவத்தின் செயற்பாடும் ஆணாதிக்கப் போக்கும் தொடர்ந்து அடக்குமுறையைப் பெண்களின்மீது செலுத்தி வருவதை வழக்கமாகக் கொண்டுள்ளன. இதனால், ஓர் ஆண் ஆணாகவோ, ஒரு பெண் பெண்ணாகவோ வாழ முடியாதபடி அதிகாரமும் அதிகாரத்தின்கீழ் அடங்குதலும் இருந்து வருகின்றது. இவ்வதிகாரத்தின் பிடியிலிருந்து பெண்கள் மீண்டு வருவதையே மீட்சி எனக் கொள்ளலாம்.**

**மீட்சி என்பதற்கு, பெண்கள் மீதான கட்டுப்பாடுகளிலிருந்து அப்பெண்கள் விடுதலை பெறுவது எனப் பொருள் கொள்ளலாம்.**

> ***"பெண்ணியக் கோட்பாடானது, பெண்கள்மீது செலுத்திவரும் குடும்ப, சமூக வன்முறைகளை நீக்கி விடுவிப்பதாகப் பொருள் கூறுகிறது. பெண்ணியநோக்கில், மீட்சி என்பது, குடும்ப-சமூக நிறுவனங்கள் பெண்ணை அடக்கி ஆளும் அடக்கு முறைகளிலிருந்து மீட்டெடுப்பது எனப் பொருள் கொள்ளப்படுகின்றது"[2]***

**என்கின்றார் அரங்க மல்லிகா.**

**உலகலாவிய ரீதியில், மிகவும் அநீதியான முறையில் காட்டப்படும் பாகுபாடு பால் பாகுபாடேயாகும். தன்னை ஒத்த இன்னொரு மனிதப் பிறவியான பெண்ணுக்குச் சம அந்தஸ்து வழங்காமல், ஒருவித அடிமை நிலையில் இச்சமூகம் அவளை வைத்துள்ளது. மேலாண்மைமிக்க ஒரு பிறவியாக ஆணையும், அவனுக்காக வாழும் ஒரு பிறவியாகப்**

1. ஞானி, எதிர் எதர்க்கோணங்களில் தத்துவம், மதம், மானுடம், ப. 173.
2. அரங்க மல்லிகா, தமிழ் இலக்கியமும் பெண்ணியமும், ப. 133.

பெண்ணையும், இச்சமூகம் வரையறுத்து வைத்துள்ளது. எந்த ஒரு விடயத்திலுமே ஆணின் நலன்களே முன்னுரிமைப்படுத்தப்பட்டுள்ளமையைச் சகல அம்சங்களிலும் காணமுடிகின்றது. இவ்வாறு கட்டமைக்கப்பட்டுள்ள ஆணாதிக்கச் சமூகத்தில் பெண் என்பவள் தங்களுக்கான உரிமைகளை இழந்தவளாக எண்ணிலடங்காத் துன்பங்களை அனுபவித்து வருகிறாள்.

பிறப்பிலிருந்தே, ஏன் பிறப்பதற்கு முன்னர் கருவிலிருக்கும் போதே ஆரம்பிக்கும் ஒடுக்கு முறைகள் மரணம் வரை தொடர்கிறது. இதனால் ஆற்றலும் ஆளுமையும் கொண்ட பெண்ணைத் தலையெடுக்க விடாமல் ஆணாதிக்கச் சமூகம் ஏதோ ஒரு வகையில் அவர்களைப் பின்தள்ளிக் கொண்டிருக்கிறது. காலங்காலமாகப் பண்பாட்டுப் போலி எனும் மாயைக்குள் பெண்கள் பற்றி வலியுறுத்தப்பட்டு வருகின்ற கருத்துக்கள் பெண்களுடைய அளப்பறிய ஆற்றல்களைக்கூட அங்கீகரிப்பதைப் பின்தள்ளி விடுகின்றன. சமுதாயத்தின் வாழ்க்கை முறை, பண்பாடு, கலாச்சாரம், மதக்கோட்பாடு, அரசியல் நிலைமை என்பவை பெண்ணுக்குப் பாதகமாகவே அமைந்துள்ளன.

சமூகச் சுழற்சிக்கு உந்து சக்தியாக விளங்குகின்ற பெண், பரஸ்பர உடல் மற்றும் உளத் தேவைகளுக்காகவே ஆணாதிக்கச் சமூகத்தால் பயன்படுத்தப்படுகிறாள். படைப்பியல் ரீதியாகப் பால் வேறுபாடு மட்டுமே இருக்கின்ற பெண்ணை இந்தச் சமூகம் சமமாக ஏற்றுக்கொள்ளாமல் இருப்பது துரதிஷ்டமே எனக் கொள்ளலாம்.

குடும்பத்திற்கு உள்ளேயும் சமூகத்திலும் பெண்ணின் நிலை கீழ்ப்படுத்தப்பட்டே உள்ளது. வீட்டுப்பணி, வேலை வாய்ப்பு, சம்பளம், சுதந்திரமாகச் செயல்படல், கல்வி, சொத்துரிமை, திருமணம், பாலியல் விவகாரங்கள், மதம், அரசியல், பொருளாதாரம் என்று பல்வேறு அம்சங்களிலும் பெண் சுதந்திரமற்றவளாக, உரிமை இழந்தவளாவே இருக்கிறாள். மேலும், பெண்ணானவள் குடும்பம், பணி என்று இரண்டு சுமைகளைச் சுமக்க முடியாமல் தவிப்பதைக் காணமுடிகின்றது.

பெண்களை அழுத்தும் பிரச்சினை அவர்களை மட்டும் பாதிக்கவில்லை, அவளது குடும்பத்தையும், சமூகத்தையும் பாதிக்கின்றது. இது சமூகத்தால் உணரப்படவில்லை. பெண்களின் நிலை, அவர்களின் பங்கு, அனுபவிக்கும் உரிமை என நோக்கும்போது பல விடயங்கள் முன்னிலைப்படுத்தப்பட வேண்டியுள்ளன.

பெண்களின் அடிப்படை உரிமைகள் எவை என்பதை வரையறுப்பதில், பெண்ணியச் சிந்தனையாளர்கள் பல விடயங்களில் ஒத்த கருத்தினைக் கொண்டுள்ளனர். கல்வி உரிமை, தொழில் உரிமை, திருமண உரிமை, சொத்துரிமை, அரசியல் உரிமை, பாலியல் உரிமை, சுதந்திரமாக முடிவெடுக்கும் உரிமை என்பவை முக்கியமானதாகக் கருதப்படுகின்றன.

## 5.3.பெண்ணுரிமைச் சிந்தனைகள்

உரிமை என்பது உலக உயிர்கள் அனைத்திற்கும் பொதுவானதாகும். ஒவ்வோர் உயிரினமும் தான் விரும்புவதைத் தன் விருப்பத்தின்படி செய்யும் அதிகாரத்தைப் பெற்றிருக்கிறது. ஆனால், மனித உயிரினத்தில் சரிபாதியாகக் காணப்படும் ஆணும் பெண்ணும் சமநிலையில் உரிமை பெற்றிருக்கவில்லை. இவ்ஏற்றத்தாழ்வுகள் கல்வி, சமூகம், அரசியல், பொருளாதாரம், கலை, மதம், பண்பாடு போன்ற அனைத்துப் பிரிவுகளிலும் காணப்படுகின்றன. பெண்களைச் சுரண்டும் ஆணாதிக்கக் கருத்தாக்கம் பால் வேறுபாடின்றி ஆண்களும், பெண்களும் ஏற்றுக்கொள்ளும் வகையில் சமூகக் கொள்கையாக நிலைநிறுத்தப்பட்டுள்ளது. எனவே, பெண்களை இரண்டாம் நிலையில் வைத்துப் பார்க்கும் ஆணாதிக்கக் கருத்தியலில் இருந்து முற்றிலும் விடுபடுவதே பெண்ணுரிமை எனலாம்.

பல்வேறு செயற்பாடுகளையும் பரிமாணங்களையும் கொண்டவற்றை ஒரு குறிப்பிட்ட வடிவிற்குள்ளோ வரையறைக்குள்ளோ கொண்டுவர இயலாது. இது கவிதைக்கும் பெண்ணுரிமைக்கும் பொதுவான பண்பாகும். கவிதை அவ்வப்போது மனித உணர்வில் புரட்சிகளை ஏற்படுத்துகிறது. கவிதை தொன்று தொட்டு வரும்

மதிப்பீடுகளை உடைத்தெறிகிறது. கவிதை புத்தம் புதிதான உலகைக் காணுமாறு மக்களைச் செய்து விடுகிறது. இவ்வகையில் தமிழ்க் கவிஞர்களில் பெண்விடுதலையை முன்னெடுத்துச் சென்ற முன்னோடிகளில் பாரதி குறிப்பிடத்தக்கவராகிறார்.

"*மாதர் தம்மை இழிவு செய்யும்*
*மடமையைக் கொளுத்துவோம்*"[3]

என்று பாரதி தொடங்கி வைத்த பெண்ணுரிமைச் சிந்தனை பின்வந்த கவிஞர்களால் வளர்த்தெடுத்துச் செல்லப்பட்டது என்பதை இக்கவிதையின் மூலம் அறியமுடிகின்றது.

## 5.4.தமிழகத்தில் பெண்ணுரிமைச்சிந்தனைகள்

உலகெங்கும் இருந்ததுபோலவே ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக உரிமை மறுக்கப்பட்டச் சூழலிலேயே தமிழ்ப்பெண்ணுலகமும் விளங்கி வந்தது எனலாம். தொடர்ந்து இலக்கியங்களின் மூலமும் பழமொழிகள், சொலவடைகள் மூலமும் இந்நிலை கட்டிக் காக்கப்பட்டதையே தமிழ் இலக்கியங்கள் காட்டுகின்றன. பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஆங்கிலக்கல்வி ஒரு சாளரமாய் அமைந்து பார்வை வட்டத்தை விரிவு செய்ததன் விளைவாக இலக்கியம் உட்படப் பல்வேறு துறைகளிலும் மாற்றங்கள் நிகழ்ந்தன.

மேலைநாட்டுத் தாக்கத்தால் தமிழில் உரைநடை இலக்கியம் வளரத் தொடங்கியதும் புதின இலக்கிய அறிமுகமும் சமூக மாற்றத்திற்குக் காரணமாக அமைந்தது எனலாம். தமிழில் முதல் புதினமாகக் கருதப்படும் "பிரதாப முதலியார் சரித்திர"த்தை எழுதிய மாயூரம் வேதநாயகம் பெண்கல்வியின் இன்றியமையாமையைப் "பெண்மதிமாலை" என்ற கவிதை நூலில் வெளிப்படுத்தினார். மேலும் "பெண்கல்வி" "பெண்மானம்" என்ற உரைநடை நூல்களையும் எழுதி பெண்ணியச் சிந்தனையை வேரோடச் செய்தார். அதனைத் தொடர்ந்து பாரதியார், பாரதிதாசன், கவிமணி எனத் தமிழ்ப் புதுக்கவிதைகளின் மூலமாகப் பெண்ணிய மீட்சி குறித்த சிந்தனையை உலகறியச் செய்தனர் எனக் கூறலாம்.

---

3. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப.355.

## 5.5.பெண்களின் நால்வகைப்பண்புகள்

ஆண்களைப் போன்றே பெண்களும் சமூக உயிரிகளே என்னும் எண்ணப்போக்கு இல்லாத நிலை உள்ளது. எனவே, ஆண்களுக்கென்றும் பெண்களுக்கென்றும் தனித்தனியான பண்புநலன்கள் சொல்லப்பட்டன. இதனடிப்படையில் மனிதர்களை இரண்டு கூறாகப் பிரித்துப் பார்க்கும் போக்கும் சமூகத்தில் நிலைபெற்றுவிட்டதைக் காணமுடிகின்றது.

அவ்வகையில் பெண்களுக்கு அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்ற நால்வகைப் பண்புகள் இன்றியமையாப் பண்புகளாக வகுக்கப்பட்டு வழக்கத்தில் இருந்து வருகின்றன. பெண்கள் தங்களுக்கு இயல்பாக உள்ள அறிவைப் புலப்படுத்திக் கொள்ளக் கூடாது என்றும், மறைபொருளாக வைத்திருப்பதே பெண்மைக்கு அழகு என்றும் கற்பிக்கப்பட்டது. மடமை அல்லது பேதைமைகூடப் பெண்களுக்கு அணிகலனாகவும், அடங்கி அஞ்சி நடத்தலே பண்பாட்டை மீறாத்தன்மை என்பதால், இளமை முதல் இத்தகைய குணங்களைப் பழக்கப்படுத்திக் கொள்ள வேண்டும் என்றும் பெண் அறிவுறுத்தப்பட்டாள். மேலும், இப்பண்புகளைத் தன் அடுத்த தலைமுறைக்கும் கடத்திச் சென்று சேர்க்க வேண்டியது அவளுடைய கடமையாகிறது. இதுவே பெண்மைப் பண்பு என்றும் கருதப்படுகிறது.

**"பெண்மை என்பது மண்ணடிப் பெருவேர்**
**ஆண்மை மேலே அசையும் பசுங்கிளை**
**பெருவேர் வாடினால் மானுடம் வாடும்"**[4]

என்ற வரிகள், பெண்மைப் பண்புகள் உயர்ந்தால்தான் மானுடம் சிறக்கும் என்ற உட்குறிப்பினை உள்ளுறையாகக் கொண்டுள்ளதை அறியமுடிகின்றது.

4. மலையமான், மலையமான் கவிதைகள், ப. 32.

## 5.6.தாய்மைச்சிறப்பு

பெண்களைப் போற்றிப்பாடும் கவிஞர்கள் பெண்களிடம் உள்ள தாய்மைப் பண்பைச் சிறப்பித்துப் பாடுவதில் நிறைவு அடைகின்றனர். ஒரு பெண் தாயாக நின்று தன் குழந்தைக்கு ஆற்றும் செயல்களையெல்லாம் ஒரு குழந்தையின் நிலையில் இருந்து பட்டியலிடும் கவிஞர் இறுதியில்,

**"உன்னைப் போல வளர்த்திடவே**
**உலகில் உண்டோ வேறொருவர்**
**என்னைக் காக்கும் அம்மாவே**
**எனக்குத் தெய்வம் நீதானே"**[5]

என்று குழந்தை கூறுவதாக அமைத்துள்ளார் அழ. வள்ளியப்பா. குழந்தை முதலே தாயைத் தெய்வமாகப் பார்க்கக் கூடிய மனநிலையை வளர்க்க இத்தகைய கவிதைகள் பயன்படுகின்றன. பிள்ளை வளர்ப்பு என்னும் பெரும்பொறுப்பை நிறைவேற்றும் தாயானவள் தெய்வமாகப் போற்றப்பட வேண்டியவள் என்று போதிப்பதன் மூலம் பெண்ணடிமைக் கொடுமைகள் மறையக்கூடும் என்று கவிஞர்கள் கருதினர். ஆனால், பெரும்பங்கான குடும்பக் கடமைகளை ஆற்றும் பெண்ணைத் தெய்வமெனப் போற்றிப் பாராட்டுவதோடு மனநிறைவு கொண்டு விடும் போக்கே இன்று அனைவரிடமும் காணப்படுகிறது.

## 5.7. குழந்தை மீட்பியற் சிந்தனைகள்

அந்தக்காலத்தில் இருந்து இன்றுவரை பெண் சிசுக்கொலை தொடர்ந்து கொண்டுதான் இருக்கின்றது. அன்று பெண் குழந்தை பிறந்தவுடன் குழந்தையின் வாயில் கள்ளிப்பால் ஊற்றிக் கொன்றார்கள். இன்று பெண் என்று தெரிந்தவுடன் கருவிலேயே அழித்துவிடுகின்றார்கள். இதனைத் தடுக்க அரசு எத்தனைத் திட்டங்கள் கொண்டுவந்தாலும் பெண் சிசுக்கொலை குறைந்திருக்கின்றதே தவிர, முற்றிலும் ஒழியவில்லை. பெண் சிசுக்கொலை நடைபெற்று வருவது குறித்து

5. அழ. வள்ளியப்பா, மலரும் உள்ளம், பக்.49-50.

மருத்துவர் கமலா செல்வராஜ் பின்வருமாறு கருத்துத் தெரிவித்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

**"பெண் என்பவள் வீட்டு வேலைகள் செய்யவும், கணவனை கவனிக்கவும், குழந்தைகளைப் பெற்றெடுத்து வளர்ப்பதற்கு மட்டும் பிறந்தவள் அல்ல. இன்று எல்லாத் துறைகளிலும் பெண்கள் கால் ஊன்றி சாதனை படைத்து வருகிறார்கள். இனிவரும் காலங்களில் நிறைய சாதனைகள் படைப்பது பெண்களாகத்தான் இருக்கும். இதை எல்லாம் நினைக்கும்போது என் மனதில் தோன்றுவதெல்லாம் எத்தனை சாதிக்கக் கூடிய பெண்கள் கள்ளிப்பாலிலும் கருவிலும் அழிக்கப்பட்டாரளோ என்று மனது வலிக்கிறது. கண்களில் கண்ணீர் வடிகிறது.**

**இந்த பெண் சிசுக்கொலை முற்றிலும் ஒழிய வேண்டும். ஆண் குழந்தை மட்டும்தான் குடும்ப வாரிசு, பெண்குழந்தை குடும்பத்தின் பாரம் என்று சொல்லும் எண்ணம் மாறவேண்டும். அந்த ஆண் குழந்தையைச் சுமப்பவளும் பெண்தானே. அப்படி இருந்து ஏன் இப்படி பெண்கள்மீது வெறித்தனமான கோபம். தயவு செய்து சொல்கிறேன். பெண்களைப் பாரதி கண்ட புதுமைப் பெண்ணாய் வாழ விடுங்கள். பூமித்தாயும் ஒரு பெண்தான். நதிகளுக்குப் பெண்கள் பெயர் மட்டும் வைத்தால் போதாது. பெண்களைப் போற்றவும் செய்ய வேண்டும். தென்னிந்திய முதல் சோதனைக்குழாய் குழந்தையை உருவாக்கி சாதனை படைத்த நானும் ஒரு பெண்தானே? அதேபோல் எனது சகோதரிகளும் ஒவ்வொரு துறையிலும் சிறந்து விளங்குகிறார்கள். அதனால் பெண்மையைப் போற்றுவோம். பெண் சிசுக்கொலையைத் தடுப்போம். சாதனைப் பெண்களை உருவாக்குவோம். பெண்கள் இந்நாட்டின் கண்கள்."[6]**

6. தினத்தந்தி, "தலையங்கக் கட்டுரை", 06.02.2019, ப. 4.

## 5.8.பெண் அடிமையில்லை

பெண் என்பவள் தாயாக, மனைவியாக, மகளாக இருந்தபோதிலும் ஒரு பெண் என்ற மதிப்பீட்டில் அடிமையாகவே கருதப்படும் போக்கு நிலவுகின்றது. உளவியல் அடிப்படையில் ஆணுக்கும் பெண்ணுக்கும் இத்தகைய மனப்போக்கு அடிமனதில் உள்ளது என்பதை,

"கண்களும் ஒளியும் போலக்
கவின்மலர் வாசம் போல
பெண்களும் ஆண்கள் தாமும்
பெருந்தமிழ் நாடு தன்னில்
தண்கடல் நிகர்த்த அன்பால்
சமானத்தர் ஆனார் என்ற
பண்வந்து காதிற் பாய
பருகுநாள் எந்த நாளோ?"[7]

என்று பாடும் பாரதிதாசன், ஆணும் பெண்ணும் சமம் என்ற உணர்வைப் பெறுவதே இச்சிக்கலுக்குத் தீர்வு என்கிறார். கண்களும் ஒளியும், மலரும் மணமும் எப்படி இயல்பாக உள்ளதோ அதுபோலவே ஆணும் பெண்ணும் சமஉரிமையோடு இணைந்திருப்பதே இயல்பானது என்கிறார். ஏற்றத்தாழ்வு கற்பிப்பதே இயல்புக்கு மாறானது என்பதும் அறியத்தக்கது. இதையே "ஆணுக்குப் பெண் அடிமையில்லை" என்று கூறுவதன் மூலம் உறுதிப்படுத்துகிறார் பாவேந்தர் பாரதிதாசன்.

## 5.9.ஆவதும் பெண்ணாலே

"ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே" என்ற பழமொழி வழங்கிவருவதைக் காணலாம். இதுபோன்ற பழமொழிகள் பெண்களைத் தாழ்வு மனப்பான்மையில் வைத்திருக்கவே பயன்படுவதும் கண்கூடு,

---

7. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப. 81.

"தீரர் விளைவதும் பெண்ணாலே ~ கலைச்
செல்வம் செழிப்பதும் பெண்ணாலே
பாரில் அழகும் சுவையும் அமுதும்
பரந்து தழைப்பதும் பெண்ணாலே"[8]

எனும் கவிதை, பெண்ணடிமைச் சமுதாயத்தில்கூடப் பெண்கள் எத்துணை சக்தி வாய்ந்தவர்களாக இருக்கிறார்கள் என்று பாராட்டுவதுபோல அமைந்திருந்தாலும் இங்கு கலையும் அழகும் சுவையும் பெண்களால் தழைத்து வளர்வதாகப் பாடியிருப்பது கவனிக்கத்தக்கது. தீரர்களைப் பெற்று உருவாக்குவதும், கலையாலும் அழகாலும் சமூகத்திற்கு இன்பம் அளிப்பதும் பெண்களால் முடியும் என்பதுபோலப் பேசும் இக்கவிதை பெண்ணின் பெருமை பற்றிப் பேசுகிறது என்பதை அறியமுடிகின்றது.

## 5.10.பெண் கல்வி

"கல்வியில்லாத பெண்கள் களர்நிலம்" என்ற பாரதிதாசனின் வரி, கல்வியறிவு பெற்ற பெண்களைத் திருந்திய கழனி என்றழைத்து, அங்கேதான் நல்லறிவுடைய மக்கள் எனும் நெல்மணிகள் விளைய முடியும் என்று பொருள் கூறுகிறார். கல்வியானது இருபாலருக்கும் பொதுவானது. ஆனாலும், பெண்ணுக்குக் கல்வி என்பது ஆயுதம் போன்றது என்கின்றார் கவிஞர் ஹசீனாபர்வீன். அறிவை விரிவாக்கும் கருவி கல்வியே எனும் வள்ளுவரின் கருத்தையொற்றி,

"அடிமை விலங்கை
உடைத் தெறியும்
ஆயுதம் உங்கள்
கல்வியே"[9]

என்று பெண்கல்வியின் சிறப்பைப் போற்றியுள்ளார் கவிஞர். இவ்வாறு பெண்கல்வியின் அவசியத்தை உணர்ந்த பொற்கோ,

8. சுத்தானந்த பாரதி, உலகப்பாட்டு, ப. 73.
9. ஹெச்.ஜி. ஹசீனாபர்வீன், வைகறைக் கோலம், ப. 24.

"இனிக் கல்லாத பெண்ணில்லை கல்வி நமதென்று
கைகொட்டிப் பாடி அடியுங்கடி"[10]

என்று பெண்கல்வியின் மேன்மையைப் பாடுகிறார். இவர் வீட்டைக் கவனித்து வீட்டுக்கு அரசியாய் விளங்கும் பெண்குலம் நாட்டுக்கு அரசாகவும் விளங்க வேண்டும் என்று பாடி கல்லாத பெண்களையும் கல்வி கற்கத் தூண்டுகிறார். கல்வி கற்றால்தான் பெண்கள் தங்களுக்கான உரிமைகளைப் பெற்று அனைத்துத் துறைகளிலும் சிறந்து விளங்க முடியும் என்பது மேற்கண்ட கவிதையின்வழி அறியமுடிகின்றது.

எல்லார்க்கும் கல்வி வழங்க வேண்டும் என்ற பொதுவுடைமை நாட்டம் உடைய பாரதிதாசன், பெண்களின் அறிவை வளர்த்தால் உலகின் அறியாமை ஒழிந்துவிடும் என்ற பாரதியின் கருத்தைத் தழுவிப் பெண்கல்விக்கான அவசியத்தை எடுத்துரைக்கிறார். கல்வி பெற்ற பெண்கள் விளைநிலம் போன்றவர்கள். அவர்கள் பெறும் பிள்ளைகள் அறிவுபெற்ற பிள்ளைகளாக விளங்குவார்கள். இத்தகு கல்விதான் பெண்களுக்கு அணிகலனாக விளங்கும் என்பதை,

"கல்வியில்லை உரிமையில்லை பெண்களுக்குக்
கடைத்தேற வழியின்றி விழிக்கின்றார்கள்!
புல்லென்றே நினைக்கின்றீர் மனைவி மாரைப்
புருஷர்களின் உபயோகம் பெரிதென் கின்றீர்!
வல்லவன் பேரறிஞன்ஷா வார்த்தை கேட்டீர்
மனோபாவம் இனியேனும் திருந்த வேண்டும்
இல்லையெனில் எது செயலாம்? பெண் ஆண் என்ற
இரண்டுருளை யால் நடக்கும் இன்பவாழ்க்கை"[11]

எனப் பெண்கல்வியின் அவசியத்தை உணர்த்துகின்றார் கவிஞர் பாரதிதாசன். மேலும், பெண்கல்வியின் மகத்துவத்தைப் பற்றி அறிந்த பாவேந்தர் பாரதிதாசன் பெண்கள் கல்வி கற்றால்தான் குடும்பத்தை மேம்படுத்த முடியும் என்ற சிந்தனையைப் பின்வருமாறு கூறுகின்றார்.

---

10. பொற்கோ, பொற்கோவின் கவிதைகள், ப.34.
11. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப. 81.

"பெண்கட்குக் கல்வி வேண்டும்
குடித்தனம் பேணு தற்கே!
பெண்கட்குக் கல்வி வேண்டும்
மக்களைப் பேணு தற்கே!
பெண்கட்குக் கல்வி வேண்டும்
உலகினைப் பேணு தற்கே
பெண்கட்குக் கல்வி வேண்டும்
கல்வியைப் பேணு தற்கே"[12]

என்ற வரிகள், பெண் கல்வி கற்றால்தான் வீடு, குடும்பம், கணவன், பிள்ளைகள், உலகம் ஆகிய அனைத்தும் உயர்வு பெறும் என்பதைப் பட்டியலிடுகின்றார் பாவேந்தர். இவ்வாறு, பெண்கல்வியின் அவசியத்தை உணர்ந்த கவிஞர்கள் மேற்கண்ட கவிதையின் வாயிலாகப் பெண்கல்வியின் இன்றியமையாமையை எடுத்துரைக்கும் பாங்கு போற்றுதற்குரியதாகும்.

### 5.10.1.கல்வியினால் ஏற்படும் விடுதலை

பெண்ணடிமை ஏற்பட்ட சூழலைப் புரிந்துகொண்டு, பெண்விடுதலைக்கான சூழலை ஏற்படுத்த வழிகாட்டும் கவிதைகளும் பரவலாகக் காணப்படுகின்றன.

"நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்"[13]

என்று கூறுகிறார் திருவள்ளுவர். அவ்வகையில், பெண்ணடிமை என்னும் நோய்க்கு மூலகாரணியாக விளங்குவனவற்றை உய்த்தறிந்து அதனைக் களைவதற்குப் பெண்களை நெறிப்படுத்த வேண்டும் என்பதை,

"கல்வியில் விடி
அரசியல் தெளி
சட்டங்கள் செய்
ஊர்வலம் போ
முழக்க மிடு

12. புரட்சிக்கவிஞர் பாரதிதாசன், குடும்ப விளக்கு, ப. 69.
13. குறள். 948.

**பெண்ணைப் பேசப்**

**பெண்ணே எழு"**[14]

என்று கூறுகின்றார் அறிவுமதி. இக்கவிதை வரிகள், பாரதியின் அடியொற்றி பெண்ணடிமைக்கான காரணங்களைக் கண்டறிந்து பெண்ணுரிமைக்கான வழிமுறைகளை எடுத்துரைப்பதாக அமைகின்றன.

பெண்களுக்குக் கல்வி உரிமை, அரசியல்அதிகாரம், சட்டங்கள் இயற்றும் துறையில் இடம், தம் கோரிக்கைகளுக்காக வீட்டைவிட்டு வெளியில்வந்து போராடும் ஆற்றல் ஆகியவை கிடைத்துவிட்டால் சமூகத்தில் பேசப்படும் நிலைக்குப் பெண்கள் உயர்வார்கள் என்பதைப் பெண்களின் மீட்பியற் சிந்தனையாக எடுத்துக்காட்டுகின்றார் கவிஞர் அறிவுமதி.

பெண்கள் விடுதலை பெற வேண்டுமெனில் கல்வியில் சிறந்து விளங்க வேண்டும். அவ்வாறு கல்வி கற்கவில்லையெனில் நல்ல புதல்வர்களை விளைவிக்க முடியாது என்னும் கருத்தை,

**"நிலத்தின் தன்மை பயிர்க்குள தாகுமாம்**

**நீசத் தொண்டும் மடமையும்கொண்ட தாய்**

**தலத்தில் மாண்புயர் மக்களைப் பெற்றிடல்**

**சால வேயரி தாவதொர் செய்தியாம்"**[15]

என்று எடுத்துரைத்துள்ளார் பாரதியார். இதே கருத்தைப் பாவேந்தர் பாரதிதாசனும்,

**"கல்வியில்லாத பெண்கள்**

**களர்நிலம்! அந்நிலத்தில்**

**புல்விளைந் திடலாம் நல்ல**

**புதல்வர்கள் விளைதல் இல்லை!**

**கல்வியை உடைய பெண்கள்**

**திருந்திய கழனி, அங்கே**

**நல்லறிவுடைய மக்கள்**

---

**14.** அறிவுமதி, அறிவுமதி கவிதைகள், ப. 165.

**15.** பாரதியார், பாரதியார் கவிதைகள், ப. 237.

**விளைவது நவில வோநான்?"**[16]

என்று தெளிவுபடுத்தியுள்ளார். இதன்மூலம் பெண்கல்வியின் அவசியத்தை அறிந்துகொள்ள முடிகின்றது.

தரிசு நிலங்கள் எவ்வாறு பண்படுத்தப்பட்டு விளைநிலங்களாக மாற்றப்படுகிறதோ, அதுபோலப் பெண்களுக்கான விடுதலையைப் பெறவும், நல்ல சமுதாயத்தை உருவாக்கவும் பெண்கல்வி முக்கியம் என்பதைக் கவிஞர் வலியுறுத்துகிறார். இவ்வாறு, பெண்களுக்கான உரிமைகளைப் பெற பெண் விடுதலைக்கான உரிமைக்குரல் தரணியெங்கும் ஒலிக்க வேண்டும் என்பதை இக்கவிதைகளின்வழி அறிய முடிகின்றது.

## 5.11.பெண்ணிய ஊன்றுகோல்

ஆணும் பெண்ணும் இணைந்தே இருக்கும் இச்சமூகத்தில் இருபாலருக்கும் இரு வேறு மதிப்பீடுகள் நிலவி வருவதைக் காண முடிகின்றன. ஆண் குழந்தையைப் பற்றிப் பெருமிதம் கொள்ளும் மனம், பெண் குழந்தையை ஒரு சுமையாகக் கருதுகிறது. பெண், திருமணம் முடிந்து புகுந்த வீட்டிற்குச் சென்று விடுவதால், பெற்றோருக்கு ஊன்றுகோலாக ஆண் மகன் இருக்கின்றான் என்ற காரணத்தால் மரபு வழியாகவே ஆண் குழந்தை வரவேற்பிற்கு உரியதாகக் கருதப்படுகிறது. இதனை,

***"அன்னை வயிற்றில் பிறந்த எனக்கு***
***நெஞ்சில் பிறந்த பிள்ளை***
***நீ! நெஞ்சில் பிறந்த பிள்ளை***
***திசுப்பைக்குள் சிசுவாய்***
***கருக்கொண்டு உருக்கொண்டு***
***வளர்ந்தவன் நான்***
***கண்ணுக்குள் வளர்வது நீ!***
***கருத்துக்குள் ஒளிர்வது நீ! நீ! நீ!***
***சொல்வது 'பைத்தியம்'***

16. புரட்சிக்கவிஞர் பாரதிதாசன், குடும்ப விளக்கு, பக். 69-70.

***சொல்லாமல் கொல்வது நித்தியம்***
***இருந்தும்***
***சத்தியம்***
***உனக்கு நான் கால்***
***எனக்கு நீ கோல்”*** [17]

என்று மீனாட்சி தன் கவிதையின் மூலம் சித்தரித்துக் காட்டுகிறார்.

பெண்களின் உரிமைகள் தழைக்கவும், பெண் விடுதலை நிறைவேறவும், பெண்களின் சமூக மதிப்பு உயரவும், ஆண்களின் ஆதரவு அவசியம். ஒவ்வோர் ஆணும் பெண்ணின் வாழ்க்கைப் பாதையில் துணையாகப் பயணம் செய்தால் பெண்ணியம் வெற்றி பெறும் என்று "ஆலாபனை" என்னும் கவிதையில் அப்துல் ரகுமான் வெளிப்படுத்தியுள்ளார். பெண்களை அழவைக்காமல், ஆளவைக்கும் தகுதியைப்பெற உறுதுணையாக ஆண்கள் இருக்க வேண்டும். அப்போதுதான் பெண்ணியம் விடியும் என்பதை இக்கவிதை அறிவுறுத்துகின்றது.

## 5.12.பெண்ணுரிமையே மண்ணுரிமை

பெண்களை உயர்வாகக் கருதும் போக்கும், குடும்ப விளக்காகப் போற்றிப் பாதுகாப்பதே அந்த உயர்வை அவர்களுக்கு வழங்கும் என்ற எண்ணப்போக்கும் மண்ணில் வழங்கி வந்திருக்கிறது. இதனைக் கண்டறிந்த கவிஞர்கள் பெண்களின் முழுஉரிமை என்பது எட்டப்படாத நிலையில்தான் இன்னும் இருக்கிறது என்பதையும் கண்டறிந்தனர். கல்விக் கடவுளாகப் பெண்களைப் படைத்துப் பார்த்த மண்ணில் "அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு" என்ற பழமொழியும் உலவுவதை உணர்ந்த கவிஞர்கள் இந்நிலை மாறத் தம் எழுதுகோளைத் தாராளமாகவே பயன்படுத்தி வந்துள்ளனர்.

***"பெண்ணடிமை தீருமட்டும் பேசுந் திருநாட்டு***
***மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே***
***ஊமையென்று பெண்ணை உரைக்குமட்டும் உள்ளடங்கும்***

17. இரா.மீனாட்சி, மீனாட்சி கவிதைகள், ப. 47.

***ஆமை நிலைதான் ஆடவர்க்கும் உண்டு"***[18]

என்று கூறும் பாரதிதாசன் பெண்விடுதலை அடைந்தால்தான் நாடு உண்மையான விடுதலை பெறும் என்கின்றார். நாட்டுக்கு வந்துவிட்டதாகச் சொல்லப்படும் சுதந்திரம், பெண்ணுரிமையில் முழுமை பெறாமல் நிறைவடையாது என்பதையும், அடிமைப்பட்ட பெண்கள் உள்ளவரை மானுட வாழ்வு முழுமையடையாது என்பதையும் தெளிவாகக் கூறுகிறார் பாரதிதாசன்.

## 5.13.பெண்ணின் போர்க்குணம்

"பழையன கழிதலும் புதியன புகுதலும்" எனும் நன்னூலாரின் கூற்று, பழமையைப் போக்கிப் புதுமையை விளைவிக்க வேண்டுமெனில், பெண்களுக்குப் போர்க்குணம் தேவை என்று கூறுவதை,

***"புண்ணான பழமைகளைப்***
***போக்கிநற் பயிர்விளைவிக்கப்***
***போர்க்குணம் வேண்டுமடி தோழி ~ இனிப்***
***போர்க்குணம் வேண்டுமடி தோழி"***[19]

என்ற பொற்கோவின் கவிதைவழி அறியலாம். பொறுமைக் குணத்தில் புதைந்து கிடக்க வேண்டும் என்று காலங்காலமாகக் கற்பிக்கப்பட்ட பெண்களுக்குப் போர்க்குணம் தேவை என்பதையும் உணர்த்துகின்றது.

பெண்ணுரிமைக்கானப் போர்க்குணம் குறித்துக் கூறவந்த கவிஞர் இளையபாரதி,

***"நீ***
***பட்டுக்கும் ஜரிகைக்கும்***
***மனத்தை அலைபாய விடுபவள் அல்ல!***
***போருடை அணிந்து***
***புறப்பட வேண்டியவள்"***[20]

**18.** பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப. 44.
**19.** பொற்கோ, மு.நூ., ப. 39.
**20.** இளையபாரதி, விசாரணைகள், ப. 79.

என்கின்றார். இவ்வாறு, இன்றைய கவிஞர்கள் பெண் விடுதலைக்காகவும் பெண்ணுரிமைக்காகவும் அப்பெண்கள் பட்டாடை விடுத்துப் போருடை உடுத்தித் தமக்கு எதிரான தடைகளைத் தகர்த்தெறியப் புறப்பட வேண்டும் என்றும் அழைப்பு விடுப்பதை மேற்காணும் கவிதைவழி அறியமுடிகின்றது.

இந்தியப் பெண்களை விடுதலைக்குத் தூண்ட வெளிநாட்டுப் பெண்களின் போர்க்குணத்தைக் கவிஞர்கள் எடுத்துக்கூறியுள்ளனர்.

*"வீரம் விளையாடும் வியட்நாமில் பெண்கள்*
*தீரமிகு தோள்களிலே துப்பாக்கி தொங்கியதை*
*அழகுப் போட்டிக்கும் அணிவகுக்கும் நேரத்தில்*
*கியூபாவின் பெண்கள் பிஸ்டல் சுழற்றியதைச்*
*சோவியத்துக் கவிஞரெலாம் சொக்க வைக்கும் கவிதைகளாய்*
*பார்வியக்கப் பாடியுள்ளார்"*[21]

என்று இங்குள்ள பெண்களுக்கு விழிப்புணர்வைத் தூண்டி, பெண்ணுரிமைக்கானப் போராட்டக் களத்துக்குத் தயார் செய்யும் முயற்சியில் கவிஞர்கள் ஆர்வம் காட்டுவதைக் காணமுடிகிறது. அழகுப் போட்டிக்கு அணிவகுப்பதைவிட, பெண்ணுரிமைக்கானக் குரல் கொடுக்க அணி திரளுங்கள் என்கிறார் கவிஞர். உடலழகுக்கு முக்கியத்துவம் தராத வீரப் பெண் உருவாக வேண்டுமென்பதை,

*"நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும்*
*நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகளும்*
*நிமிர்ந்த ஞானச் செருக்கும் இருப்பதால்*
*செம்மை மாதர் திறம்புவ தில்லையாம்"*[22]

என்ற பாரதியார் பாடல்வழி காணமுடிகின்றது.

## 5.14.பெண்ணின்றி ஆணில்லை

பெண்களே ஆண்களின் உற்றதுணையாவர் என்று கவிஞர் பலரும் பாடியுள்ளனர். பெண்துணை இல்லா உலகம் தடம்புரண்டு ஆழ்கிடங்கில் இறங்கிவிடக்கூடும் என்கின்றார் சாலை இளந்திரையன்.

21. குருவிக்கரம்பை சண்முகம், குருவிக்கரம்பை சண்முகம் கவிதைகள், ப. 58.
22. பாரதியார், பாரதியார் கவிதைகள், ப. 237.

***"ஆண்மை அருமை பேசுகிறோம் ~ அதன்***
***ஆண்மையில் பெண்மை இல்லாவிடிலோ***
***கேண்மைத் தடங்கள் புரண்டுவிடும் ~ புவி***
***கேட்டுக் கிடங்கில் இறங்கிவிடும்"***[23]

என்று ஆண்களை எத்தனை உயர்வாகப் பேசினாலும் பெண்துணை ஆணுக்குக் கட்டாயம் தேவை என்று கூறுவதன் காரணம் ஆணை நெறிப்படுத்தும் சக்தியாகப் பெண்ணே இருக்க முடியும் என்பதே ஆகும். இவரைத் தொடர்ந்து அண்ணல் தங்கோ எனும் கவிஞரும் பெண்மக்கள் இல்லாவிட்டால் ஆண்களுக்குப் பேறும் இல்லை, பிறப்புமில்லை என்று கூறுவது நினைவில் கொள்ளத்தக்கதாகும்.

***"எவ்வழிப் பெண்டிர் இருப்பாரோ***
***அவ்வழி சிறக்கும் ஆடவர் உலகம்"***[24]

என்று கூறும் கவிஞர்,

***"எவ்வழி நல்லவர் ஆடவர்***
***அவ்வழி நல்லை வாழிய நிலனே"***[25]

என்னும் சங்க இலக்கியப் பாடலை மாற்றியமைத்துக் கவிதை புனைந்துள்ளார். பெண்கள் எவ்வாறு உள்ளனரோ அதனடிப்படையிலேயே ஆடவரின் சிறப்பு அமையும் என்பதை எடுத்துக்காட்டியுள்ளார் கவிஞர் கோவேந்தன்.

## 5.15.ஜீவாவின் பாடல்களில் பெண்கள்

பெண்ணினத்தின் மீட்சிக்காகவும் எழுச்சிக்காகவும் பல்வேறு சிந்தனைகளைத் தம் படைப்பில் ஜீவா வெளிப்படுத்தியுள்ளார். "ஜனசக்தி" இதழில் பெண்களின் முன்னேற்றத்திற்காக ஜீவா எழுதிய கடிதங்கள், "ஜீவாவின் புதுமைப்பெண்" என்ற தலைப்பில் 1968ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. இத்தொகுப்பு நூலில் பெண்ணியம் குறித்த ஜீவானந்தத்தின் சிந்தனைகளை அறியமுடிகிறது.

---

**23.** சாலை இளந்திரையன், அன்னை நீ ஆடவேண்டும், ப. 82.
**24.** த.கோவேந்தன், புதுநானூறு, ப. 77.
**25.** புறம். பா. 187.

**"பொதுவாக நாட்டின் அரசியல் வாழ்விலும் சரி, சமுதாயப் பொது வாழ்விலும் சரி. பெண்கள் தங்களுக்குரிய நியாயமான நிலையான இடத்தைப் பெறவேண்டும். அது ஏற்படாத வரையில் சமதர்மத்தைப் பற்றிப் பேசுவதிருக்கட்டும், ஜனநாயகத்தைப் பற்றிக்கூட பேச்சின்றி முழுமையாகப் பேசுவது முடியாது"**[26]

என்ற தந்தை பெரியாரின் கருத்தினை எடுத்துக்காட்டுகின்றார் ஜீவா. உண்மையான சமத்துவம் என்பது சமூக, அரசியல் வாழ்வில் பெண்கள் பெறுகின்ற உயர்வினைப் பொறுத்தே அமைகிறது என்பது ஜீவா கொண்டிருந்த கருத்தாகும். இக்கருத்தினை வெளிப்படுத்தும் வகையில் பாடலொன்று கவிதை நூலில் இடம்பெற்றுள்ளது.

### 5.15.1.ஆண் - பெண் சமதர்மம்

"சமதர்மக் கிளிக்கண்ணி" என்ற தலைப்பில் அமைந்த பாடலில் ஆண், பெண் சமத்துவத்துவத்தைக் குறித்து,

***"சமதர்மக் கொடியின்கீழ்***
***தையல ரின்வாழ்வு***
***அமையும் உறுதியடி~கிளியே***
***ஆண்பெண் பிரிவேதடி?***
***சாண்பிள்ளை யானாலும்***
***ஆண்பிள்ளை யென்னும்ஜம்பம்***
***வீண்பிள்ளா யெனமுழங்கும் ~ கிளியே***
***வீரசம தர்மமடி"***[27]

என்று குறிப்பிடுகிறார். இப்பாடல் 1935ஆம் ஆண்டு இயற்றப்பட்டதாகும். இந்தியச் சுதந்திரத்திற்குப் பின்னர் அமைகின்ற சமதர்ம ஆட்சியில் ஆண், பெண் சமத்துவம் உறுதியாக அமைந்திடும் என்று தீர்க்கதரிசனம் கூறும் ஜீவா, "சாண்பிள்ளை ஆனாலும் ஆண்பிள்ளை" என்று மக்களிடையே வழங்கி வருகின்ற வழக்கத்தையும் சாடுகிறார். வீர சமதர்மம் என்பது ஆண், பெண் ஏற்றத் தாழ்வு நீங்கிய நிலையிலேயே அமையும் என்பதை இப்பாடல் வாயிலாக வலியுறுத்துகிறார்.

---

**26.** ப. ஜீவானந்தம், ஜீவாவின் புதுமைப்பெண், ப. 11.
**27.** ப. ஜீவானந்தம், ஜீவாவின் பாடல்கள், ப. 25.

## 5.15.2.ஜீவாவின் பெண் விடுதலைச்சிந்தனை

பெண்ணினம் படுகின்ற துயர்கண்டும் கண்ணற்றோர்போல் வாழ்ந்திருந்த ஆடவர் சிலரால் பெண்கள் அடிமை உணர்வுடன் வாழ்ந்து வந்தனர். பெண் என்றால் பேயும் இரங்கும் என்பர். ஆனால், பெண்களுக்காக ஆடவர் மனம் இரங்கிட வில்லை என்று ஜீவா தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

*"பெண்ணெனக் கூறிவிட்டால்*
*பேயுமிரங்கு மென்பார்*
*கண்ணற்ற ஆடவரால் ~ கிளியே*
*கட்டுண்டுப் பெண்கள் நைந்தார்"*[28]

என்று பெண்களின் அவல நிலையைப் பதிவு செய்த ஜீவா, சமூக வாழ்வில் ஆண்களுக்கெனத் தனிச் சட்டம் வகுத்த சமூகத்தையும் சாடுகிறார். இத்தகைய பாகுபாடு காட்டும் உலகத்தைக் "கோணல் உலகம்" என்றும் குறிப்பிடுகிறார்.

*"ஆணுக்கோர் வகைச்சட்டம்*
*அரிவையர்க் கொருசட்டம்*
*கோணல் உலகத்திலே~ கிளியே*
*கொடுமை கொடுமையடி"*[29]

என்ற பாடலின் வழி பெண் விடுதலைக்கான மீட்பியற் சிந்தனையைக் காணமுடிகின்றது.

## 5.16.தன்கையே தனக்குதவி

பெண்களைப் பேய், பிசாசு என்றெல்லாம் இழித்துப் பாடும் பழைய கவிதைகள் பல இருப்பதைக் காணமுடியும். ஆசைப்படக்கூடாத பொருள்களாகச் சொல்லப்பட்ட மண், பொன் ஆகியவற்றோடு பெண்ணும் சேர்க்கப்பட்ட நிலையைக் காணமுடிகின்றது. மண்ணும் பொன்னும் உயிரற்ற பொருள்கள் ஆகும். அவற்றோடு உயிருள்ள பெண்ணையும் சேர்த்து எண்ணிய மனப்போக்கு இன்று நிலவி வருகின்றது.

---

**28.** ப.ஜீவானந்தம், ஜீவானந்தம் பாடல்கள், ப. 101.
**29.** மேலது, ப. 102.

ஒவ்வொருவரின் வாழ்க்கையிலும் தவிர்க்கமுடியாத பெண்ணை ஆசைப்படக்கூடாத பொருளாகச் சித்தர்களும் துறவிகளும் படைத்துக்காட்டினர். ஆண்கள் பெண்களை மட்டம் தட்டித் தாழ்வுமனப்பான்மையில் வைத்திருக்க இந்த உத்தியைப் பயன்படுத்தி வருகின்றனர்.

பெண்களுக்கான சிக்கல்களைப் புரிந்துகொண்ட கவிஞர்கள் பலரும் இத்தகைய பழமையான போக்கிலிருந்து முற்றிலும் மாறுபடுகின்றனர். பழமையான கோட்பாட்டை மறுத்துக் கவிதைகள் செய்கின்ற நிலையையும் இன்றைய கவிஞர்களின் கவிதைகளில் காணமுடிகின்றது.

**"பெண்ணென்றால் பேயென்று சொல்வார் தம்மை**
**பேயர்களாய் ஆக்கிடுவீர் பெண்கள் உம்மை**
**மண்ணென்றும் மரமென்றும் எண்ணி நாளும்**
**மடையரிலும் கடையராய் வதைப்பார் தம்மைத்**
**திண்மையுடன் எதிர்த்திடுவீர் பெண்கள் அன்னோர்**
**திருந்துமட்டும் போராடி வெற்றிக்காண்பீர்"**[30]

என்று கூறும் கவிஞர், பெண்களை இழிவு செய்யும் போக்கைக் கண்டிக்கிறார். மேலும், பெண்கள் தங்கள் உரிமைகளைத் தாங்களே போராடி வெல்ல வேண்டும் என்றும் கூறுகின்றார்.

எனவே, பெண்களுக்கான போராட்டத்தைப் பெண்களாலேதான் சரியாக நடத்த முடியும் என்னும் கருத்து நிலவுவதைக் காணமுடிகிறது. அனைத்துத் தரப்பினரின் உதவியோடு போராட வேண்டிய நிலை இருந்தபோதிலும் பெண்களளவுக்கு அவர்களுக்கானச் சிக்கலை அறிந்து பிறரால் போராட முடியாது என்னும் கருத்து பரவிவருவதை,

**"பெண்ணின் இனத்திலுக்கு நாளும் இழைக்கப்படும்**
**பீடைக் கொடுமைகளை வீழ்த்தி முறியடிக்கும்**
**கண்ணே உனைப் பெரிதும் நம்பினேன் உன்**

30. வா.மு.சேதுராமன், நெஞ்சத் தோட்டம், பக்.88-89.

***கையின் வலிமைதனை நம்பினேன்”***[31]

என்னும் கவிதை வரிகள் உணர்த்துகின்றன. பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளைப் பீடை என்று இழித்துக் கூறி அத்தகைய பீடைச் செயல்களை வீழ்த்தி முறியடிக்க வேண்டும் என்ற குரல் ஒலிப்பதைக் காணமுடிகின்றது. அதற்குப் பெண்கள் தாமே முன்வர வேண்டும் என்றும், அவர்களை நம்பியே இப்போராட்டம் இருக்கிறது என்றும் இக்கவிதை வெளிப்படுத்துகின்றது.

கவிஞர் இன்குலாப், பெண்களின் போராட்டத்திற்குப் பெண்களே முன்னிற்க வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தும் வகையில்,

***"ஆடவர் சொன்ன அசைவில் அல்லாது***
***உனது கால்களின் இயல்பில் நீ நட!***
***மனசிலும் உடம்பிலும் ஆடவர் பூட்டிய***
***தளைகள் அனைத்தையும் தகர்த்தெறி***
***ஆடவர் சொன்ன தருமங்களைத் துப்பு***
***உனது சொல்லை நீ உச்சரி”***[32]

என்று தன் கவிதைவழி பெண்ணுரிமைச் சிந்தனையை விதைத்துள்ளார். இந்தியாவில் பெண்விடுதலையானது சீர்திருத்தவாதிகளால் நடத்தப்பட்டது. அவர்களில் பெரும்பகுதியினர் ஆடவர்களே. அவர்கள் விதவைக்கொடுமை, சாதி போன்ற சீர்திருத்தங்களை மட்டுமே செய்ய முன்வந்தனர். அத்தகைய சீர்திருத்தவாதிகள் பத்தொன்பதாம் நூற்றாண்டில் பெண்களுக்காகக் குரல் கொடுக்கத் தொடங்கினர். அரசிடமிருந்து சில சலுகைகளையும் பெற்றுத் தந்தனர். ஆனால், அவை பெண்களுக்கான முழு உரிமையையும் பெற்றுத்தரப் போதுமானதாக அமையவில்லை. அத்தகைய ஆடவர்கள் தலைமை தாங்கிய போராட்டங்கள் ஓர் எல்லைக்குமேல் போக இயலவில்லை.

---

**31.** பொற்கோ, மு.நூ., ப. 41.
**32.** இன்குலாப், ஒவ்வொரு புல்லையும், ப. 216.

ஆடவர்களின் அத்தகைய இயக்கத்திற்கேற்ப நடந்த நிலையை மாற்றி, பெண்களைச் சுயமாக நடக்கச் செய்ய வேண்டும் என்கிறார் கவிஞர். அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு, கற்பு என்றெல்லாம் மனத்துக்கு ஆடவர்கள் பூட்டிய விலங்குகளையும் கழற்றி எறியச் சொல்கிறார். சொல்லப்பட்ட தருமங்கள் ஆடவர்கள் தங்கள் வசதிக்கேற்பச் சொல்லிக் கொண்டவை என்பதால் அவற்றையும் நீக்கிவிட்டு, பெண்கள் தங்களுக்கான சொல்லைக் கண்டறிந்து தாங்களே உச்சரிக்க வேண்டும் என்ற கருத்தையும் கவிஞர் முன் வைக்கிறார்.

பெண், ஆண் வர்க்கத்திற்கு அடங்கிய நிலை, பாலியல் பாவையாகக் கருதப்படும் நிலை ஆகியவை இக்கவிதையில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. மனித உயிரின் தனிச்சிறப்புப் பண்பான சுயசிந்தனையையும் அதனடிப்படையில் தங்களது உரிமைப் போராட்டத்திற்கான செயல் தந்திரத்தையும் வகுக்க வேண்டிய கட்டாயம் பெண்களுக்கே உரித்தானது என்பதையும் கவிஞர்களின் வரிகள் உணர்த்துகின்றன.

## 5.17.மூடத்தனம் ஒழியச்செய்தல்

பெண்ணடிமைத்தனத்தைத் தூக்கிப் பிடித்துக் காத்துவருவதில் மூடத்தனத்திற்கு முழுப்பங்கு உண்டு என்பதை அறியலாம். மூடநம்பிக்கைகள் பெண்களால்தான் பெரிதும் காப்பாற்றப்பட்டு வருவதாக நம்பப்படுகிறது. அதுவே அவர்களுக்கு எதிராக அமைந்துள்ளதாகவும் எண்ணமுடிகின்றது.

***"வானக்கடல் கப்பலை<br>இயக்கிய<br>முதல் பெண்மணி வாலண்டினா<br>இந்தியப் பெண்களே<br>கோயில் பூசையால் இயக்கியே<br>வானக்கடவுளரைச் சந்திக்க<br>மனப்பயணம் செய்வது அஞ்ஞானம்!<br>மூடத்தனங்களுக்கு முடிவு கட்டுவதே***

***சுதந்திரப் பெண்கள் விஞ்ஞானம்”***[33]

என்ற கவிதை வரிகள் மூடத்தனத்தை முழுமையாகக் கைவிட்டு விட்டு, அறிவியல் அடிப்படையில் செயல்படவும் விடுதலை பெறவும் பெண்களுக்கு அழைப்பு விடுப்பதாக விளங்குகின்றன.

## 5.18.ஆண் - பெண் ஏற்றத்தாழ்வு

ஆண், பெண் ஆகியோரிடையே ஏற்றத்தாழ்வு ஏற்படுத்தப்பட்ட நிலையே பெண்ணிய ஒடுக்குமுறையின் இன்றியமையாக் கூறாக உள்ளது. அதற்கு மேலாக இந்நிலையை ஆண் நடைமுறைப்படுத்தவும், பெண் மறுமொழி கூறாமல் ஏற்றுக்கொள்ளவுமான சூழலை ஏற்படுத்திவிட்டது. இந்நிலையே பெண்விடுதலை பெறுவதில் பெரும் சிக்கலாக உள்ளது.

***“ஆண் உயர்வென்பதும் பெண் உயர்வென்பதும்***
***நீணிலத் தெங்கணும் இல்லை***
***வாணிகம் செய்யலாம் பெண்கள் ~ நல்***
***வானூர்தி ஓட்டலாம் பெண்கள்”***[34]

என்று பாடும் பாவேந்தர் ஆண், பெண் உயர்வு தாழ்வுச் சிக்கலை வெளிப்படுத்தி, அதைத் தீர்க்க வழியும் கூறியுள்ளார். ஆண்களுக்கு இணையாக எல்லாப் பணிகளையும் பெண்கள் செய்ய வேண்டும், ஊதியம் பெற வேண்டும் என்பதே அவ்வழி என்கிறார். பெண்கள் தொழிற்கல்வி பயில இயலாது என்றிருந்தவற்றை மனத்தில் கொண்டே, பாரதிதாசன் பெண்கள் ஆண்களுக்கு இணையான கல்வி கற்றுத் தொழில் செய்தல் வேண்டும் என்கிறார். இதனைப் பெண் ஒடுக்குமுறைக்குத் தீர்வாக முன்வைக்கிறார் என்றே கூறலாம்.

## 5.19.வருக்கப்போர்

ஆண், பெண்ணை ஒடுக்கும் செயல்பாட்டை வருக்க முரணாகப் பார்க்கும் போக்கு உள்ளது. அவ்வகையில் வரலாற்றில் தோன்றிய முதல் வருக்கப் பகைமை

---

**33.** இளங்கலைமணி, விடியல் கீதம், ப. 62.
**34.** பாரதிதாசன், இசையமுது, முதல் தொகுதி, ப. 50.

ஒருதார மணத்தில் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையில் பகைமை வளர்வதுடன் பொருந்துகிறது. முதல் வருக்க ஒடுக்குமுறை பெண்பாலை ஆண்பால் ஒடுக்குகின்ற ஒடுக்குமுறையுடன் பொருந்துகிறது என்று ஏங்கல்ஸ் கூறும் கருத்து ஆயத்தக்கது. எனவே, திருமண முறையில் ஏற்பட்டுவிடுகின்ற கட்டுப்பாட்டில் ஆணாதிக்க முறை தொடங்கியது என்றும் கூறப்படுகிறது. ஆனால்,

**"ஆணைன்று எதிரி**
**வர்க்கத்தைக் கவனி"**[35]

என்று அறிவுமதி கூறுகின்றார். நடைபெற்றுக் கொண்டிருக்கும் வருக்கப் போரில் சமதர்ம சமுதாயம் அமையும்போது பெண்களுக்கான விடுதலையும் சேர்த்தே பெறப்பட்டுவிடும். ஆணாதிக்கத்தை எதிர்ப்பதாகக் கருதி ஆண்களை மட்டும் எதிரியாக நிறுத்திப் போரிடுவதைவிட, ஆணோடு சேர்ந்து வருக்கப் போரில் ஈடுபடப் பெண்ணை அழைப்பதாக இக்கருத்து அமைந்துள்ளதைக் காணமுடிகின்றது. எனவே, பெண்ணியப் போரைப் பரந்துபட்ட அளவில் வருக்கப் போரில் உள்ளடக்கிக் காண நினைக்கும் பொதுவுடைமைப் போக்கும் கவிதைகளில் வலியுறுத்தப்படுவதை அறியமுடிகின்றது.

## 5.20.போர்முரசு

பெண் விடுதலைக்காகப் போராடுவோர் போர்க்குணம் மிக்கவராய் விளங்கி, வீரத்தோடு போரிட வேண்டும் என்ற ஆர்வத்தைக் கவிஞர்கள் வெளிப்படுத்துகின்றனர். இதனை,

**"வில்லார்க்கும் நல்ல நுதல் மாதர் எல்லார்க்கும்**
**விடுதலையாம் என்றே மணிமுரசம் ஆர்ப்பீரே"**[36]

என்று பாரதிதாசன் முரசறைந்து போராடச்சொல்லி அழைப்பதன்மூலம் அறியமுடிகின்றது. ஆண்டாண்டு காலமாக அடிமைப்பட்டுக் கிடக்கும் பெண்களுக்கான

---

**35.** அறிவுமதி, அறிவுமதி கவிதைகள், ப. 167.
**36.** பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப. 55.

உரிமைப்போரை விரைவுபடுத்த வேண்டும் என்ற வேட்கை வெளிப்படுவதை இக்கவிதை வெளிப்படுத்தி நிற்கின்றது.

பெண்களுக்கான உரிமைகளைப் பெண்களே மீட்க வேண்டும் என்ற நோக்கத்தில் புதுயுகப் பெண்கள் கிளம்பிவிட்டதாகக் கவிஞர் கனிமொழி கூறுகின்றார்.

"புதுயுகப் பெண்கள் நாங்கள்
கேள்விகள் கேட்போம்
கொடி பிடிப்போம்
கோஷம் போடுவோம்"[37]

என்னும் கவிஞர் கனிமொழியின் கவிதை, இன்றைய பெண்கள் தங்களுக்கான உரிமையைப் போராடிப் பெறுவதற்குத் தயாராகிவிட்டனர் என்பதை எடுத்துரைக்கின்றது.

## 5.21.சங்கம் அமைத்துப்போரிடுக

இன்றைய நிலையில் பாதிப்புக்கு ஆளானோர் தனித்தனியே முயற்சி செய்வதைவிட ஒன்றிணைந்து போராடத் துணிவதே சிறந்ததாக அமையும். பாதிக்கப்பட்டவர்கள் தனித்தனியே போராடும்போது அவர்களது முயற்சி முறியடிக்கப்படலாம். ஆனால், ஓர் அமைப்பாக இணைந்து போரிட்டால் போராட்டம் நீடித்தும் நிலைத்தும் நடக்க வாய்ப்பு ஏற்படும். போராடும் சக்தியும் கூடுதலாகக் கிடைக்கும்; வெற்றியும் பெறலாம். எனவே, பெண்ணுரிமை பேசுவோர் வெறும் பேச்சளவில் நிற்காமல் ஓர் அமைப்பாகத் திரளவேண்டும் என்கிறார் கவிஞர்.

"சரித்திரப் பழக்கம் தள்ளிவிட்டு புது
சமதர்மச் சரித்திரம் படைத்திடுங்கள்
பறித்திட்ட உரிமைகள் பெறுவதற்கே
படைக்கலமாய்ச் சங்கம் அமைத்திடுங்கள்"[38]

---

**37.** கனிமொழி, அகத்திணை, ப. 32.
**38.** திருச்சி தியாகராஜன், செங்கீதம், ப. 115.

என்று கூறும் பாடல் அடிமைப்பட்டுக் கிடக்கும் பெண்களின் வரலாற்றை மாற்றியெழுத அழைப்பு விடுப்பதாக உள்ளது. புதிய சமதருமச் சரித்திரம் படைக்க வேண்டுகிறது. பெண்களுக்கான உரிமைகள் புதிதாகத் தரப்பட வேண்டியவை அல்ல என்றும் அறிவுறுத்துகிறது. அந்த உரிமையை மீட்டெடுக்கும் போரில் பயன்படும் படைக்கலமாக விளங்குவது சங்கம் என்றும், அச்சங்கத்தை அமைத்து ஒற்றுமையுடன் போரிட்டால் பெண்களுக்கான உரிமைகளை மீட்டெடுக்க முடியும் என்றும் இப்பாடல் வலியுறுத்துகின்றது.

## 5.22.அழுகை - புறக்கணிப்பு

இயற்கையிலேயே பெண்கள் பலவீனமானவர்கள் என்ற கருத்து திணிக்கப்பட்டுள்ளது. அதனைப் பெண்களும் ஏற்று, மனதளவில் தங்களைப் பலவீனமானவர்களாகக் கருதிக்கொள்ளும் போக்கு உள்ளது. இந்நிலையில் பெண்களுக்கான சிக்கலை வெளிப்படுத்தவும், அதனைத் தீர்க்கவும் பல்வேறு விதங்களில் வழியினை ஏற்படுத்திக்கொண்டு சுயபச்சாதாபம் என்னும் தன்னிரக்கத்தின் மூலம் தீர்வு கூறும் போக்கினைத் தங்களின் பிறவிக் குணமாகப் பெண்கள் கொண்டுள்ளனர்.

சுயபச்சாதாபம் என்ற நிலை மிகவும் ஆபத்தான ஒன்று. எப்போதும் அதற்கு ஆட்படவே கூடாது. எப்படி நம்முடைய அறிவை மற்றவர்களுக்கு அடிமைப்படுத்துவது என்பது மிக ஆபத்தான ஒன்றோ அதேபோல சுயபச்சாதாபமும் ஆபத்தானது. அதற்கு அடிமையாகிவிட்டால் எப்போது பார்த்தாலும் அது ஒரு போதைப் பொருள் மாதிரி ஆகிவிடும். மது அருந்துபவர்களையும் அல்லது போதை மருந்துகள் சாப்பிடுபவர்களையும் எப்படி அந்தப் பழக்கம் அடிமைப்படுத்தி விடுகிறதோ அதேபோல் சுயபச்சாதாபம் என்பது அடிமைப்படுத்துகிற ஒன்று. அது சரியான முறையல்ல. அதற்கு ஒருமுறை கட்டுப்பட்டுவிட்டால் அதற்குப்பிறகு அது தொடர்ந்து கொண்டே இருக்கும்.

எப்போது பார்த்தாலும் ஆறுதல் சொல்ல யாராவது வேண்டும் என்பர்[39]. இத்தகைய போக்கை வெளிப்படுத்தும் விதமாக,

"பிரச்சினைகளைத்
திசை திருப்ப மட்டும்
தெரிந்திருக்கிறது
அதன்
வேர்களைத் தேடி
வேந்நீர் ஊற்றும்
இதயங்கள் இல்லாமல்
இப்படி...... இப்படி
வேண்டாம் பெண்ணே
அழாதே"[40]

என்று கவிதைப்படுத்தியுள்ளார் கவிஞர். சிக்கல்களின் வேரைத் தேடி வெந்நீர் விட்டு முற்றிலுமாக அதை அழிக்கத் தூண்டுகிறது. அழுகை என்பது சிக்கலைத் தீர்ப்பதற்குப் பதிலாகத் தள்ளிப்போடும் அல்லது தற்காலிகமாகத் தீர்க்கும். பெண்களின் அழுகைக்கான மூலத்தைக் கண்டறிந்து முழுவதும் அழித்தால்தான் சிக்கலுக்கான நிரந்தரத் தீர்வு கிடைக்கும். அதற்கான போராட்டக் களத்தைப் பெண்கள் தேர்வு செய்து போராட வேண்டும் என்றும், அழுவது பெண்கள் வழக்கம் என்ற பழைய நிலையை மாற்ற வேண்டும் என்றும் இக்கவிதை உணர்த்துகின்றது. பெண்களைப் பற்றி உருவாக்கப்பட்ட தவறான கருத்துக்குப் பெண்களே அடிமையானதால்தான் பெண்ணடிமைப் போக்கு இன்றும் தொடர்கிறது என்பதை இதன்மூலம் அறியமுடிகின்றது.

## 5.23.வரதட்சணைக்கானத் தீர்வுகள்

வரதட்சணையால் ஏற்படும் சிக்கலைக் கூறுவதோடு வரதட்சணை வாங்குவோரை ஏளனப்படுத்தி, எதிர்க்கத் தூண்டும் கவிதைகளும் காணப்படுகின்றன.

---

39. நா.சோமசுந்தரம், அறிவே தெய்வம், பக். 20-21.
40. அறிவுமதி, அறிவுமதி கவிதைகள், ப. 122.

"... என் கணவன் வரதட்சணை
என்ற பெயரில் உங்களுக்கு விற்கப்பட்டவன்
இவ்வுலகில்
அடிமைப்பட்டு கிடப்பது பெண்ணினமல்ல பணவெறி
பிடித்த ஆணினங்கள் தான்!
மணமகன் என்ற போர்வையில்
வரதட்சணை என்ற வார்த்தையில் நமக்கு
விற்கப்பட்டவர்கள்!
இனி அவர்களை
வழி நடத்திச் செல்வதுதான் பெண்ணினம்"[41]

என்ற வரிகள் வரதட்சணை வாங்குவதால் ஆண் அல்லவா பெண்ணுக்கு அடிமையாகக் கருதப்பட வேண்டும் என்கிறார் கவிஞர். இக்கவிதை வரதட்சணைக் கொடுமையையும் ஆணாதிக்கத்தையும் எதிர்ப்பதற்காகக் கிளம்பியுள்ள பெண்களின் மனநிலையைத் தெளிவாகக் காட்டுகிறது. பணம் கொடுத்து அடிமைகளை விலைக்கு வாங்கிய சமூகநிலை பண்டைக்காலத்து இருந்தே தொடர்கிறது. ஆனால், வரதட்சணை கொடுப்பவர் அடிமையாகவும் வரதட்சணை வாங்குபவர் முதலாளியாகவும் இருக்கும் இன்றைய சமூகநிலையை மாற்ற வேண்டும் என்கிற சிந்தனையைத் தூண்டுவதாக இக்கவிதை அமைகின்றது.

வரதட்சணைக் கொடுமையால் இல்லற வாழ்க்கையை இழந்த பெண்கள் கணவனை விட்டுப் பிரியவும், மங்கள நாணைத் துறக்கவும் தயங்கமாட்டார்கள் என்னும் எச்சரிக்கையையும் கவிஞர்களின் கவிதைகள் வெளிப்படுத்துகின்றன.

"உன்
புன்னகையைப் பறிமுதல் செய்தது வரதட்சணையல்ல
வாழும் சமூகச் சுரண்டல் அமைப்புகள்.....
வரதட்சணை ஒழிப்புக் கவிதைகள்
வேர்களில் சீழ் பிடித்திருக்கும் போது கிளைகளில்
மருந்து தெளிக்கும் கிறுக்குத்தனம்"[42]

---

41. ஆர்.மதுரைவீரன்(தொகு.ஆ.), எழிலரசு, தமிழருவி, 2000, ப. 363.
42. தமிழன்பன், அந்த நந்தனை எரித்த நெருப்பின் மிச்சம், ப. 38.

என்னும் வரிகள் சிக்கலில் ஆணிவேரைத்தேடி மருத்துவம் செய்தால்தான் சிக்கல் தீரும் என்கின்றன. மேலும், கவிதைக்கும் செயல்பாட்டுக் களத்துக்குமான இடைவெளி தகர்க்கப்பட வேண்டும் என்கிறது இக்கவிதை. கவிதைகள் படைப்பதன் மூலம் பெண்களுக்கான சிக்கல்கள் தீர்ந்துவிடாது . மாறாக, படைப்பவர்களும் படிப்பவர்களும் ஒன்று சேர்ந்து போராட வேண்டும் என்பதை இவ்வரிகள் உணர்த்தி நிற்கின்றன.

## 5.24.மணமுறிவுக்கான உரிமை

"ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணம் செய்யலாம்" என்பர் நம் முன்னோர்கள். அவ்வாறு செய்து வைக்கக்கூடிய திருமணங்கள் மணமுறிவை ஏற்படுத்தி விடுகின்றன. கணவன்மார்களின் கொடுமையைச் சகிக்க முடியாமல் விவாகரத்து செய்து விடுகின்ற பெண்களையும் இச்சமூகத்தில் காணமுடிகின்றது.

> **"ருதுவான பிறகு பெண்ணுடைய இஷ்டப்படி கலியாணம் செய்ய வேண்டும். புருஷன் கொடுமையைச் சகிக்க முடியாமலிருந்தால் ஸ்திரீ சட்டப்படி அவனை த்யாஜம் செய்துவிடச் சட்டமும் இடம் கொடுக்க வேண்டும். ஊர்காரரும் தூஷனை செய்யக் கூடாது"**[43]

(த்யாஜம்-விவாகரத்து, மணமுறிவு) எனக் கொடுமைப்படுத்தும் கணவனிடமிருந்து மணமுறிவு பெறப் பெண்களுக்கு உரிமை வேண்டுமென்று பாரதி குரல் கொடுத்துள்ளார்.

இக்கருத்து நிலவிய தொடக்க காலத்தில் இவ்வுரிமையளிக்கப்பட்டால் பெண்கள் ஒழுக்கமற்றுப் போய்விடுவார்கள் என்பன போன்ற விவாதங்கள் தோன்றின. அதற்குப்பதில் கூறிய பெரியார்,

> **"விவாகரத்து சட்டமானால் எல்லாப் பெண்களும் தங்கள் கணவன்களை விட்டு ஓடிப்போவார்கள் என்றும் 'கற்புநிலை' அடியோடு கெட்டுப்போகுமென்றும் பலர் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். பாதுகாப்பிற்கும் அவசியத்திற்கும் ஒரு சட்டம் செய்தால் பொது**

---

43. பெ.மணியரசன், மா. வளவன், பாரதி ஒரு பரம்பரைப் பாடல்கள், ப. 44.

ஜனங்கள் எல்லோரும் அதே வேலையாய் இருப்பார்களென்பது நியதியல்ல. அவசியமான சந்தர்ப்பத்தில் தான் அதைக் கையாளுவர்”[44]

என்று விளக்கம் தருகின்றார்.

கணவனின் வக்கிரமான பாலுணர்வு, மனைவியைத் துன்புறுத்தித் தான் இன்பம் காணமுயலும் குரூரமான நடவடிக்கைகள் போன்றவை மணமுறிவுக்கு வழிவகுக்கின்றன. மனைவியை உயிருள்ள பொருளாகக் கருதாமை, மனைவியின் நடத்தையைச் சந்தேகிக்கும் பண்பு, கணவன் குடும்பத்தாரின் துன்புறுத்தல் முதலியனவும் மணமுறிவின் காரணிகளாக அமைவதைக் கவிஞர்கள் தத்தம் கவிதைகளின் பாடுபொருளாகக் கொண்டனர்.

“மனச்சுமைகள்
அதிகமாகும் போது
தாங்கமுடியாத
தாலிப் பாலங்கள்
தகர்ந்து போகின்றன”[45]

என்னும் கவிதை மனச்சுமைகள் மணமுறிவுக்குக் காரணமாக அமைவதைக் கூறுகின்றது. அவ்வாறு மணமுறிவு ஏற்பட்டால் எத்தகு முடிவை எடுக்கவேண்டும் என்பதை,

“காதல்
உடையார் தம் வாழ்வில்
உளம் வேறுபட்டால்
மடவார் பிறனை
மணக்க விட வேண்டும்
ஆடவனும் வேறோர்
அணங்கை மணக்கலாம்”[46]

44. பெரியார், பெரியார்க் களஞ்சியம், ப.146.
45. மு.மேத்தா, கண்ணீர்ப் பூக்கள், ப.40.
46. பாரதிதாசன், குடும்ப விளக்கு, ப. 65.

என்னும் கவிதை மூலம் பாரதிதாசன் தீர்வினை எடுத்துக் கூறுகின்றார். மணமுறிவுக்குப்பின் மறுமணம் மேற்கொள்ளலாம் என்ற கருத்தை முதன்மைப்படுத்துகிறார். பாமர மக்களிடையே மணமுறிவு ஒரு சிக்கலாக அமைவதில்லை. வெட்டிவிடுதல், அறுத்துக்கட்டுதல் எனும் வழக்கங்கள் அவர்களிடம் உள்ளன. ஆனால், இதைப் பெண்கள் பயன்படுத்த உரிமையற்ற நிலை இருந்ததால் விவாகரத்து உரிமையளித்து சட்டமியற்றப்பட்டது. அதனை அரசு நடைமுறைப்படுத்தியும் உள்ளது.

குடும்பத்தில் மனஒருமைப்பாடின்மை, பெண்ணைக் குறைகூறிப் பழிபோடும் போக்கு முதலானவை மணமுறிவுக்கான காரணங்களாகின்றன. எனினும், மணமுறிவு மட்டுமே மேற்கண்ட சிக்கலுக்கு நிரந்தரத் தீர்வாகாது. மாறாகப் பெண்கள் தனித்துநின்று பொருளாதாரத்தைப் பெருக்கிக் கொள்ளும் நிலை உருவாக வேண்டும். அதுமட்டுமின்றிக் கல்வியில் முன்னுரிமை கொடுப்பதும் பெண்களின் தனிப்பட்ட வாழ்க்கைக்குப் பாதுகாப்பாக அமையும் என்பதைக் கவிஞர்களின் கவிதைகள் உறுதிசெய்கின்றன.

## 5.25.மறுமணம் - ஒரு தீர்வு

உடன்கட்டை ஏறுதலையும் கைம்மையையும் எதிர்த்துக் குரல் எழுப்பிய சீர்திருத்தவாதிகள் இச்சிக்கலைத் தீர்க்கும் முக்கிய வழியாகக் கைம்பெண் மறுமணத்தை முன் வைத்தனர். நிலவுடைமை, ஆணாதிக்கச் சமூகத்தின் உடன்கட்டை ஏறுதல், கைம்மைக் கொடுமை முதலானவற்றைச் சமூக மாற்றத்தின் மூலம் மட்டுமே முற்றிலுமாக ஒழிக்க முடியும். எனினும், மறுமணம் போன்ற நடவடிக்கைகளாலும் இச்சிக்கலுக்குத் தீர்வு காண முடியும் என்று கவிஞர்களும் கருதுகின்றனர். தமிழ்ப் புதுக்கவிதைகளில் விதவை மறுமணத்தைத் தொடக்க நிலையில் முழு மனத்தோடு வரவேற்றவர்கள் பாரதியும், பாரதிதாசனும் ஆவர்.

பாரதியார் விதவை மறுமணம் குறித்து முழுப்புரட்சியைப் பரிந்துரைக்கிறார். இதற்காகத் தாம் உயர்வாக மதித்த மகாத்மா காந்தியுடன்கூட முரண்பட்டு நிற்பதை அறியலாம்.

**"பால்ய விதவைகள் புனர்விவாகம் செய்து கொள்ளலாமென்று ஸ்ரீமான்காந்தி சொல்கிறார். ஆனால் அதைக்கூட உறுதியாகச் சொல்ல அவருக்கு தைரியம் இல்லை மழுப்புகிறார். எல்லா விதவைகளுக்கும் மறுமணம் செய்து கொள்ள இடம் கொடுப்பதே இந்தியாவில் மாதருக்குச் செய்யப்படும் அநியாயங்கள் எல்லாவற்றிலும் பெரிதான இந்த அநியாயத்திற்குத் தகுந்த மாற்று. மற்ற பேச்செல்லாம் வீண்கதை"**[47]

என்று பாரதியார் மறுமணம் என்பது கைம்பெண்களுக்கு நியாயம் வழங்குவதாக அமையும் எனக் குறிப்பிடுகிறார்.

கணவனை இழந்த பெண்கள் உயிர்வாழ மட்டுமே அனுமதிக்கப்படலாம். வேறு சுகங்களை மனத்தாலும் நினைக்கக்கூடாது என்று கருதும் போக்கு இயற்கைக்கு முரணானது என்றும், மறுமணம் என்பது ஒரு இயற்கைத் தேவை என்றும் வலியுறுத்திக் கவிஞர்கள் பாடியுள்ளனர்.

**"வாடாத பூப்போன்ற மங்கை நல்லாள்**
**மணவாளன் இறந்தால்பின் மணத்தல் தீதோ?**
**பாடாத தேனீக்கள் உலவாத் தென்றல்**
**பசியாத நல்வயிறு பார்த்ததுண்டோ?"**[48]

என்னும் பாரதிதாசனின் கவிதைவரிகளை இங்குக் குறிப்பிடலாம். இந்தக் கொடுமையை நீரூற்றி வளர்ப்பது வைதீகம் என்று உணர்ந்த பாரதிதாசன்,

**"அடஞ்செய்யும் வைதீகத்தைப் பொருட்படுத்தாது ஆசைக்குரியவனை நாடிமணம் செய்துகொள்"**[49]

47. பாரதியார், பாரதியார் கட்டுரைகள், ப. 317.
48. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப. 72.
49. மேலது, ப. 91.

என்று கைம்பெண்களுக்கு அறிவுரை கூறுகின்றார். பல்வேறுவிதமான ஒழுக்கக் கேடுகளுக்கும் மறுமணமறுப்பே காரணமாகிறது என்றும் பாரதிதாசன் கருதுகிறார். எனவே, குறையைத் திரைபோட்டு மறைப்பதைவிட அதனைத் தீர்க்க முயல்வதே அறிவுடைமை என்கிறார்.

> **"துணை இழந்த பெண்களுக்கும் காதல் உணர்வு வருவதுண்டு அவருடைய மனமும் சுகம் தேட முனைவதுண்டு. ஆனால் அவர் உள்ளம் அறியாமல் காதலை அழிக்க முயன்றால் இயலாது. அணைகடந்தால் தடைகள் என்ன செய்யும்?"**[50]

என்று கைம்பெண்களின் மன இயல்புகளைக் கவிஞர்கள் தத்தம் கவிதைகளின் வழி வெளிப்படுத்தியுள்ளனர்.

**"மறுமணத்தின் மூலம் கைம்பெண்கள் மறுவாழ்வு பெற வேண்டும்"**[51] என்ற கருத்தை முன்வைக்கிறார் கண்ணதாசன்.

> **"விதவைகளுக்கு உடனே மணம் செய்ய வேண்டும். இல்லையென்றால் உண்மையான ஜீவ காருண்யத்தை உத்தேசித்துப் பழைய உடன்கட்டை ஏறும் வழக்கத்தையாவது புதுப்பிக்க வேண்டும் என்பதுதான் எனது அபிப்ராயம். ஏனெனில் விதவைத் தன்மையை நினைத்தால் வயிறு பற்றியெரிகிறது"**[52]

என்று பெரியார் கூறுகிறார். மேலும் அவர்,

> **"இக்கொடிய பழக்கத்தை ஒழிக்க ஆங்காங்கே விதவா விவாக சபைகள் ஏற்படுத்தியும் பிரசங்கங்கள் செய்தும் துண்டுப் பிரசுரங்கள் வெளியிட்டும் விதவைத் தன்மையின் கொடுமையை ஒழிக்க மக்கள் முன்வர வேண்டும்"**[53]

என்று பெரியார் கேட்டுக் கொண்டுள்ளார்.

---

50. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப. 92.
51. கண்ணதாசன், கண்ணதாசன் கவிதைகள், தொகுதி-5, ப. 201.
52. பெரியார், பெரியார்க் களஞ்சியம், ப. 140.
53. பெரியார், பெண் ஏன் அடிமையானாள்?, ப. 69.

**"விதவையை மணக்க இளைஞர்கள் முன்வர வேண்டும் என்று கூறிப் பல கவிஞர்கள் கவிதைகளை எழுதியுள்ளனர். விதவைகளை மணக்க அணியமாய் உள்ளோம் என்று கூறும் வகையில் கவிதைகளை அமைத்து மனமாற்றத்தை ஏற்படுத்த முடியரசன் முயன்றுள்ளார்"**[54]

என்பது குறிப்பிடத்தக்கது.

விதவைநிலை நீடிக்காதிருக்கத் தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமென்று கூறும் கவிஞர்கள், மேலோட்டமான கருத்துப் பரப்புதலால் இந்நிலை மாறிவிடாது என்றும் கருதுகின்றனர். இவ்வகையில் "அழிக்கப்பட்ட திலகம்" எனத் தலைப்பிடப்பட்ட பொன். செல்வகணபதியின் கவிதை,

**"ஒரு புரட்சித் திருநாளில்**
**ஓடும் குருதியிலிருந்து**
**குங்குமம் திரட்டிக்**
**கொண்டு வந்து**
**விதவை நெற்றியில்**
**வெற்றித்**
**திலகம் இடும்வரை"**[55]

என்று சமூகமாற்றத்தை ஏற்படுத்தக்கூடிய புரட்சியே ஒருதலைச் சார்பான இக்கைம்மைக் கொடுமையை ஒழித்துவிடும் என்கிறது.

**"கற்புக்குப் புதிய பொழிப்புரை எழுத வேண்டும் என்றும் மறுமணம் என்ற புதிய அத்தியாயம் தொடங்க வேண்டும்"**[56]

என்று கூறுகிறார் கவிஞர் பாப்ரியா.

**"மனைவியை இழந்தவர் மட்டும் மறுமணம் செய்யலாமென்றால் கணவனை இழந்த மனைவிக்கு அது பொருந்தாதா?"**[57]

எனக் கேள்வி எழுப்புகிறார் கவிஞர் அருண்மொழி.

---

54. முடியரசன், முடியரசன் கவிதைகள், ப. 65.
55. பொன். செல்வகணபதி, கைது செய்யப்பட்ட நியாயங்கள், ப. 83.
56. பாப்ரியா, ஜன்னல் கைதிகள், பக். 108-109.
57. அருண்மொழி, இசை முழக்கம், ப. 160.

**"பெண்களைப் பூவென்று கூறுவோரைப் பார்த்துப் பூக்களில் விதைப்பூ உண்டா?"**[58]

என்று ஏளனம் செய்கிறார் ரமண கங்கா.

இவ்வாறு, பலநிலைகளில் கைம்பெண் கொடுமைக்கு எதிராகக் கருத்துரைக்கும் கவிஞர்கள் மரபைமீறி வந்தால்தான் தீர்வு கிடைக்கும் என்று கூறுகின்றனர். இதனை,

**"அணிகிற பொழுதே மூன்று**
**உடைந்தது**
**துணி துவைக்கையில் ஒன்று**
**உடைந்தது**
**கணவனின் மிருக உந்துதலால்**
**இரண்டு உடைந்தது**
**பேருந்து நெரிசலில் இரண்டு**
**உடைந்தது**
**மாமியாரின் மரவிரல்கள் பட்டு**
**மூன்று உடைந்தது**
**மீத வளையல்களை**
**மரபு உடைத்துவிட்டது**
**மரபை உடைக்கப் பழகு"**[59]

என்னும் கபிலனின் கவிதை, பெண்கள் மீது சுமத்தப்பட்டிருக்கின்ற கைம்மைக் கொடுமை உட்பட அனைத்துப் பெண்ணடிமைச் சித்தாந்தங்களையும் தகர்க்க வேண்டும் என்பதன் குறியீடாக விளங்குகின்றது. இவ்வகையில் கவிஞர்களில் பலரும் இத்தகையப் பெண்ணடிமைச் சீர்கேடுகளைக் களைய, பெண்கள் போராட்டங்களில் ஈடுபட வேண்டும் என்று வலியுறுத்தியுள்ளார்கள்.

## 5.26.சமநிலைச் சிந்தனை

தீவிரவாதப் பெண்ணியம் பேசுவோர் ஓர் எல்லையில் நின்றால், சமநிலையாகச் சிந்திக்க முனைவோர் இருக்கிற நிலைக்கேற்ப நடந்து கொள்ள வழிகாட்டுகின்றனர்.

---

**58.** ரமண கங்கா, சின்ன சின்ன இழைகள், ப. 29.
**59.** கபிலன், தெரு ஓவியம், ப. 13.

குறிப்பாகப் பெண்களில் பலரும் இவ்வகை நோக்குடையவர்களாக உள்ளனர். வீட்டுப் பணிச்சுமையில் சினமுறும் பெண்களைப் பார்த்து அறிவுரைகூறும் கவிஞர் பொன்மணியின் கவிதையொன்று பெண்ணைச் சமாதனப்படுத்த முயல்கிறது. அலுவலகம் சென்று அதிகாரிக்குக் கைகட்டி சேவகம் செய்யும் பெண், கணவனுக்கு அவ்வாறு செய்தால் அடிமைத்தனம் ஆகாது. குடும்பத்தை நேசித்து அன்புகாட்டு, கடமை சுமையல்ல, இல்லறம் இனிய சோலை என்றெல்லாம் கூறும் கவிஞர்,

***"குடும்பத்துக்கு நீ***
***உன்னை அழித்து உரமாக்க வேண்டாம்***
***உன் அன்பெனும் அமுதை***
***வரமாக்கினால் போதும்"***[60]

என்று அறிவுறுத்துகிறார். உரிமை கேட்பதால் குடும்பத்தில் குழப்பம் வந்துவிடக் கூடாது என்னும் எண்ணத்தால் சிலர் இத்தகைய அறிவுரைப் போக்கை மேற்கொள்கின்றனர். பழமையின் பிடியிலிருந்து மீள இயலாத நிலையில் சிலர் தியாகக் கோட்பாட்டைத் திணிக்க முயல்வது தெரிகிறது. ஆனால், பெண்ணுரிமை இயக்கம் இத்தகைய காலகட்டங்களைத் தாண்டி வெகுதூரம் வந்துவிட்டது எனலாம். தொடக்க நிலையில் பேசப்பட்ட கருத்துநிலை என்றே இவற்றைக் கொள்ளலாம். "ஆணுக்கிங்கே பெண் இளைப்பிள்ளை" என்று பாரதி தொடக்க நிலையிலேயே சுட்டியுள்ளதைக் காணமுடிகின்றது. எனினும், இன்றும்கூட பழமைக் கோட்பாட்டை வழிமொழிந்து நிலைநாட்டும் போக்கினர் இருக்கின்றனர் என்றே உணர முடிகின்றது. உரிமையோடு கடமையையும் நினைவுபடுத்துவதாக இத்தகைய கவிதைகள் அமைகின்றன.

## 5.27.அரசியலில் பெண்கள்

எந்தச் சமூக அமைப்பிலும் மக்கள் உரிமைகளை அதிகாரத்தோடு நிலைநிறுத்தவது அரசு என்னும் நிறுவனமேயாகும். அவ்வரசின் வழி நடைமுறைப்படுத்தப் படுவனவற்றை மக்கள் ஏற்றுக்கொள்ளக் கூடியவர்களாக

---

60. பொன்மணி வைரமுத்து, பொன்மணி வைரமுத்து கவிதைகள், ப. 73.

**உள்ளனர். இந்நோக்கிலேயே பெண், தங்களுக்குரிய உரிமைகளையும் செயற்பாடுகளையும் அரசுவழி வெளிப்படுத்துவதற்காக அவ்வரசுடன் தன்னையும் இணைத்துக் கொள்ள வேண்டியவளாகின்றாள். ஏனெனில்,**

> **"ஒரு குறிப்பிட்ட சமூகக் குழுவின் பொருளியல் நலன்கள் எப்போதும் அதன் அரசியலோடு தொடர்பு கொண்டிருக்கும். இதனையே அரசியல் என்பது பொருளாதாரத்தின் செறிந்தவடிவம்** ***(Politics is the Concentrated form of Economics)*** **என்பர்"**[61]

**அதனால்தான் பெண்விடுதலைக்கான வழிமுறைகளில் முதன்மையானதாகவும் இன்றியமையாததாகவும் பெண்கள் பணிக்குச் செல்லுதல், பொருளீட்டுதல் என்பன முன்வைக்கப்பட்டிருக்கின்றது.**

**இப்பொருளாதாரத் தற்சார்பு ஒன்றே முழுமையான விடுதலையைப் பெற்றுத்தரும் எனக் கொள்ளலாகாது. பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டு அதனை நிருவகிக்கும் ஆற்றல் பெற்ற அரசியலே அரசின் (*State*) துணைகொண்டு சமூகத்தை இயக்குகிறது. எனவே, ஆண், பெண் உள்ளிட்ட சமூகம் முழுமையையும் கட்டுப்படுத்துகின்ற, காப்பாற்றுகின்ற அரசியலில் பெண்களின் பங்கேற்பு (பிரதிநிதித்துவம்) மிகவும் அவசியமானது என்று பெண்ணியச் சிந்தனையாளர்கள் கருதுகின்றனர். எனவே,**

> **"அரசியல் என்பது பல்வேறு வகைப்பட்ட சமூகக் குழுக்களின் நலனுக்கான திட்டவட்டமான கருத்துகள், செயற்பாடுகள் ஆகியவற்றின் செறிவாகும்"**[62]

**அதனால் ஏற்றத்தாழ்வற்ற சமுதாயம் அமையவும் பெண்களின் அரசியல் பங்களிப்பு அவசியமாகின்றது.**

---

**61.** கோ.கேசவன், பாரதியம், ப. 98.
**62.** மேலது, ப. 97.

அவ்வகையில் பெண்களின் அரசியல் ஈடுபாட்டிற்கான இன்றியமையாத்தேவை, அரசியல் ஈடுபாட்டைத் தடுக்கும் காரணிகள், இந்தியச் சூழலில் பெண்ணரசு பற்றிய சிந்தனைகள் முதலானவை குறித்தும், கவிஞர்கள், பெண்களின் அரசியல் பங்கேற்பு குறித்துப் பதிவுசெய்துள்ள கருத்துகள் பற்றியும் அறிதலும் ஆய்தலும் தேவையாகின்றன.

> **"பெண்கள் அரசியலில் ஈடுபடுவதன் இன்றியமையாமை கற்பனையில் அவள் மிகஉயர்ந்த இடத்தில் இருக்கிறாள். நடைமுறையில் அவள் ஒன்றுமில்லை. கவிதையில் அவள் முன்அட்டைமுதல் பின் அட்டைவரை பரவியிருக்கிறாள். வரலாற்றிலோ அவள் எங்கும் இல்லை"**[63]

என்ற கூற்று, பெண் என்பவள் நடைமுறை வாழ்க்கையிலும் வரலாற்றிலும் ஒதுக்கப்பட்டிருக்கிறாள் என்கிறது. இதற்கான காரணம் பெண், சமூகப் பொறுப்புகளில், அரசியலில் பங்கேற்காததே ஆகும். அவள் குடும்பம் என்னும் வட்டத்துக்குள் உழன்று உழன்று சமூகத்தில் பெண்ணுக்கான அடையாளத்தைப் பதிவுசெய்யாமல் இருந்திருக்கிறாள். நடைமுறையில் அவள் ஒன்றுமில்லாத நிலையில் இருந்ததே வரலாற்றில் அவள் வெற்றிடமாகக் கருதப்படக் காரணமாயிற்று. அவ்வெற்றிடத்தை நீக்கவும், பெண் தனக்கான இடத்தைத் தன் சமூகத்தில் நிலைநிறுத்தவும் வேண்டியுள்ளது. இவற்றோடு பெண்ணினத்தின் தேவை அவர்களின் முன்னேற்றம் ஆகியவற்றிற்காக அரசியலில் பங்கேற்பது இன்றியமையாததாகும்.

## 5.28.பெண்களை அரசியல் போராட்டத்திற்கு அழைக்கும் ஆணின் குரல்கள்

பெண்களின் அரசியல் தொடர்பு குறித்த கவிதைப் பதிவுகளில் இரண்டு முக்கியப் பிரிவுகளைக் காணமுடிகின்றன. ஒன்று, உலகளாவிய நிலையில் ஏற்பட்ட பொதுவான அரசியல் விழிப்புணர்வு காரணமாக ஆண் - பெண் பாகுபாடின்றி நடைபெற்ற அரசியல் போராட்டங்களைப் பாராட்டியும் அவற்றைப் பின்பற்றும்படி அறிவுறுத்தியும் வெளிவரும் கவிதைகளாகும். இரண்டாவதாகப் பெண்கள் தங்களின்

---

***63.*** *Woolf, Women's writing, P. 1.*

விடுதலை என்பது அகம் சார்ந்த கட்சிகளிலிருந்து தங்களை விடுவித்துக் கொண்டு புறவய அரசியலில் பங்கெடுப்பதில்தான் முழுமைபெறும்.

"மாறிவரும் மகத்தான சமுதாயத்தில்
சீறிவரும் செந்தமிழின் பிழம்பாய்
மீறிவரும் பிரளயாக் கினியாய்
சுரண்டலைச் சுட்டெரிக்கும்
கனலியே! நீயே புரட்சிப்பெண்"[64]

என்ற கவிதை சமுதாயத்தின் சுரண்டல் சக்திகளை அழிப்பவள் புரட்சிப்பெண் என்கிறது. இதன்மூலம் சுரண்டல் சக்திகளை அழிக்க வருமாறு பெண்களுக்கு அறைகூவல் விடுக்கிறார் கவிஞர் இ.சு.முத்துசாமி. இவரது கருத்துக்கு அரண் செய்யும் வகையில் உலகின் பல பாகங்களிலிருந்து வெளிப்படும் பெண் போராளிகளைப் பற்றிய செய்திகளும் தமிழ்ப் புதுக்கவிதைகளில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

"நெருப்பில் மலர்ந்த வியட்நாமில் எழுந்த
வீரப் பெண்ணைப் பார்
புரட்சியில் வெற்றிப் பூமியிலே புதுமைப்
பெண்ணாய் வாழ்வது பார்"[65]

என்று வியட்நாம் பெண்ணின் வீரத்தைப் பாடுகிறார் கவிஞர். இதேபோன்று நீக்ரோ இனப் போராட்டத்தைப் பதிவு செய்யும் வகையில்,

"ஆஞ்சலோ டேவிஸ் புகைகின்றாள் ~ வெள்ளை
ஆதிக்க முகத்தில் உமிழ்கின்றாள்"[66]

என்கிறார் கவிஞர் இன்குலாப். இவ்வாறே கவிஞர் சிற்பியும்,

"பாரதி கனவு கண்ட பெண் பாரதத்தில் இல்லை என்றும்
சோவியத்தில்தான் சுடர்விட்டு ஒளிர்கிறாள்"[67]

என்றும் கூறுகிறார்.

---

64. இ.சு. முத்துசாமி, சந்தத்தில் சிந்திப்பேன், ப. 27.
65. ப.வேலுசாமி, இந்திரஜாலம் கவிதைகள், ப. 39.
66. இன்குலாப், ஒவ்வொரு புல்லையும், ப. 243.
67. சிற்பி, மௌன மயக்கங்கள், ப. 109.

1974ஆம் ஆண்டு விலைவாசி ஏற்றத்தை எதிர்த்து குஜராத் பெண்கள் ஊரடங்கு உத்தரவையும் மீறித் திரண்டெழுந்த காட்சியை,

*"ஊரடங்குச் சட்ட உத்தரவை மீறி*
*இருளின் கணத்தைத் தீப்பந்தங்களால் உதைத்து*
*துப்பாக்கிச் சனியனை விறகுகளால் நொறுக்கப்*
*பெண்கள் பட்டாளம் பீடுநடை போடுகிறது"*[68]

என்று கவிஞர் இன்குலாப் பதிவு செய்துள்ளதைக் காணமுடிகின்றது. அங்கொன்றும் இங்கொன்றும் என்ற நிலையில் இருந்தாலும் அரசியல் போராட்டங்களில் பெண்கள் பங்கெடுப்பு வளர்ந்து வந்துள்ளதை மேற்கண்ட கவிதைகள் விளக்கி நிற்கின்றது.

## 5.29.முடிவுரை

❖ "பெண்களின் மீட்பியற் சிந்தனைகள்" என்னும் இவ்இயலில் பெண்கள் தற்சார்பு அடைய பெண்ணிய மீட்சி குறித்த சிந்தனைகள் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

❖ பெண்ணியம் என்பது பெண்ணின் மகத்துவத்தை உள்ளடக்கமாகக் கொண்ட ஓர் உலகத்தத்துவம் என்பதை வலியுறுத்துகின்றது.

❖ பெண்களின் அடிப்படை உரிமைகள் எவை என்பதை வரையறுப்பதில் பெண்ணியச் சிந்தனையாளர்கள் பல விடயங்களில் ஒத்த கருத்தினைக் கொண்டுள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

❖ உரிமை என்பது உலக உயிர்கள் அனைத்திற்கும் பொதுவானது என்பதை மேற்கண்ட கவிதைகளின்வழி காணமுடிகின்றது.

❖ பெண்களின் நால்வகைப் பண்புகளான அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு போன்றவை இயல்பாகவே பெண்களின் உள்ளத்தில் புதைந்து கிடப்பதைக் கவிதைகளின்வழி அறியமுடிகின்றது.

---

**68.** இன்குலாப், மு.நூ., ப. 25.

- ❖ ஆணுக்குப் பெண் அடிமையில்லை என்ற கருத்தைக் கவிஞர்களின் கவிதைகள் மெய்ப்பிக்கின்றன. "ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே" என்ற பழமொழிக்கு அரண்சேர்க்கும் வகையில் பெண்களின் பெருமைகள் பேசப்பட்டிருப்பதைப் பார்க்கமுடிகின்றது.
- ❖ பெண்கல்வியின் அவசியத்தை எடுத்துரைக்கும் கவிஞர்களின் கவிதைகள் மிகவும் போற்றத்தக்கதாகும். ஆணும் பெண்ணும் இணைந்தே வாழும் இச்சமூகத்தில் இருபாலருக்கும் இருக்கும் சமூக மதிப்பீடுகள் இங்கே சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.
- ❖ பெண்களுக்கான உரிமைகளைப் பெற, பெண் விடுதலைக்கான உரிமைக்குரல் தரணியெங்கும் ஒலிக்க வேண்டும் என்பதைக் கவிஞர்களின் கவிதைகள் வலியுறுத்தி நிற்கின்றன.
- ❖ ஆண்களை எவ்வளவு உயர்வாகப் பேசினாலும் அந்த ஆணுக்குக் கட்டாயம் பெண்துணை தேவை என்பதை வலியுறுத்துவதோடு, பெண்மக்கள் இல்லாவிட்டால் ஆண்களுக்குப் பேறும் இல்லை, பிறப்புமில்லை என்பதைக் கவிஞர்களின் வரிகள் உறுதிசெய்கின்றன.
- ❖ பெண்ணினத்தின் மீட்சிக்காகவும் எழுச்சிக்காகவும் பல்வேறு சிந்தனைகளை ஜீவாவின் படைப்புகள் வலியுறுத்தும் வகையில் அமைந்திருப்பதைக் காணமுடிகின்றது. பெண்ணடிமைத்தனத்தைத் தூக்கிப்பிடித்துக் காத்துவருவதில் மூடத்தனத்திற்கு முழுப்பங்கு உண்டு என்பதைச் சமூகச் சீர்திருத்தவாதிகளின் கருத்துகள் எடுத்துரைக்கின்றன.
- ❖ பெண்விடுதலைக்காகப் போராடுவோர் போர்க்குணம் மிக்கவராய் விளங்கி வீரத்தோடு போரிட வேண்டும் என்ற ஆர்வத்தைக் கவிஞர்களின் கவிதைகள் தூண்டுவதாய் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

- ❖ வரதட்சணையால் ஏற்படும் சிக்கலைக் கூறுவதோடு வரதட்சணை வாங்குவோரை ஏளனப்படுத்தி எதிர்க்கத் தூண்டும் கவிதைகளும் காணப்படுகின்றன. விதவைப் பெண்களின் மறுமணம் குறித்த அறிவுரைகள் சமூகச் சீர்திருத்தவாதிகளாலும் கவிஞர்களின் கவிதைகளாலும் வலியுறுத்தப்பட்டிருப்பதைக் காணமுடிகின்றது.

- ❖ அரசியலில் பெண்கள் பங்குகொண்டு அவர்களுக்கான உரிமைகளை மீட்டெடுக்கும் முயற்சியில் பெண்களே கலந்துகொண்டிருப்பதைக் கவிஞர்களின் கவிதைகளில் காட்சிப்படுத்தப்பட்டிருப்பதைப் பார்க்க முடிகின்றது.

- ❖ இவ்வாறு பெண்களின் மீட்பியற் சிந்தனைகள் குறித்த படைப்புகளைச் சமூகச் சீர்திருத்தவாதிகளும், அறிஞர்களும் கூறுவதோடில்லாமல் இதற்கு அரண்சேர்க்கும் வகையில் கவிஞர்களின் கவிதைகளிலும் காட்சிப்படுத்தப்பட்டிருப்பதைக் காணமுடிகின்றன.



# ஆய்வு நிறைவுரை

"***தமிழ்ப் புதுக்கவிதைகளில் பெண்ணியம்***" என்னும் பொருண்மையில் ஆய்வு செய்யப்பட்டதன் அடிப்படையில் இயல்தோறும் கண்டறியப்பட்டுள்ள முடிவுகள் "***ஆய்வு நிறைவுரை***" என்னும் இப்பகுதியில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

"எல்லா வினைகளுக்கும் ஓர் எதிர்வினை உண்டு" என்பது நியூட்டனின் கருத்தாகும். அவரது கருத்து அறிவியலுக்கு மட்டும் பொருந்துவதன்று; இலக்கியத்திற்கும் பொருந்தும். தமிழ் இலக்கியப் படைப்பாக்கத்தில் காலங்காலமாக ஆண்களின் ஆதிக்கமே மேலோங்கியுள்ளது. இதற்குத் திட்டமிட்ட காரணங்கள் எவையேனும் இருந்திருக்குமோ என ஆராய்வது அவசியம் என்றாலும், இன்றைய நிலையில் ஆண்களோடு போட்டியிடுவதற்கு ஏற்பப் பெண்களும் படைப்பாக்கத் துறையில் ஈடுபட்டிருப்பது வரவேற்கத் தக்கதாகும். அதனடிப்படையில் தமிழ் இலக்கியப் படைப்பின் கவிதைத் துறையில் ஈடுபட்டுள்ள பெண்ணியம் பேசும் சமகாலத்தைச் சேர்ந்த இருபால் கவிஞர்களின் படைப்புகளும் பெண்ணிய நோக்கில் ஆய்வுக்குட்படுத்தப்பட்டன.

முதலாவது இயலில், பெண்ணியம், பெண்ணிய விளக்கம், தோற்றம், வரலாறு, பெண்ணிய வகைகள், மேலை நாட்டுப் பெண்ணியம், இந்தியப் பெண்ணியம், தமிழ்நாட்டுப் பெண்ணியம், மற்றும் பெண்ணியத்தின் மூன்று அலைகள், பெண்ணியம் குறித்த கவிதையின் பாடுபொருள்கள் இங்கு விரிவாக ஆராயப்பட்டள்ளன.

பெண்ணியம் என்பது ஆண்களை எதிர்ப்பதன்று. மாறாக, பெண்களுக்கான உரிமைகளைப் பெறுவதே பெண்ணியம் ஆகும். காலங்காலமாக அடிமைப்பட்டு வாழ்ந்து வந்த பெண்ணினமானது இன்று ஆண்களுக்கு இணையாக எல்லாத் துறையிலும்

ஈடுபட்டிருப்பது பெண்ணியவாதிகளின் கருத்துக்கு மேலும் அரண் சேர்ப்பதாக அமைகின்றது.

வரலாற்று அடிப்படையில் பார்த்தால் தாய்வழிச் சமூகமானது தந்தைவழிச் சமூகமாக மாற்றம் பெற்றபோதே, பெண்களை அடிமைப்படுத்தும் கருத்தியல்கள் தோற்றம்பெற்று அவை மரபாக மாற்றம் பெற்றிருப்பதை அறியமுடிகின்றது.

இன்றைய சூழலில் தமிழ்ப் புதுக்கவிதைகளில் "பெண்ணியம்" என்பது தனித்ததொரு சிறப்பினைப் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இரண்டாவது இயலில், பணிப்பெண்கள் எதிர்கொள்ளும் பல்வேறு சிக்கல்கள் கவிதையின்வழி எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

பெண்கள், தற்சார்பினை அடைவதற்குப் பொருளாதாரம் ஓர் அடிப்படை என்பதும் அதனை அடைய தொழில், அலுவலகப் பணிகள் முதலிய ஊதியம் கிடைக்கும் பணிகள் மேற்கொள்ளவேண்டியது அவசியமாகின்றன. எனவே, தொழில்களிலும் அலுவலகப் பணிகளிலும் ஈடுபடும் பெண்கள் சில வக்கிர குணம் கொண்ட ஆண்களால் ஏற்படும் பல்வேறு சிக்கல்களைக் கவிஞர்களின் கவிதைகள் வெளிப்படுத்தியுள்ளன.

பெண்கள் எதிர்கொள்ளும் இச்சமூகச் சிக்கல்கள் களையப்பட வேண்டும் என்ற நோக்கிலும், பெண்ணுரிமைச் சிந்தனையை வளர்த்தெடுக்கும் விதத்திலும் கவிஞர்கள் பலர் கவிதை படைத்துள்ளனர். பெண்களை அடிமைப்படுத்தும் விதத்தில் கட்டமைக்கப்பட்டுள்ள சமூக நடவடிக்கைகளின் ஆணிவேரை அறுக்கும் ஆயுதங்களைத் தாங்கி வந்த கவிதைகளையும் காணமுடிகின்றன.

பணிக்குச் செல்லும் பெண்கள், வீடு, அலுவலகம் என்று வேலைப் பகிர்வின்மையால் இரட்டைப் பணிச்சுமையை மேற்கொண்டு பல்வேறு சிக்கல்களுக்கு ஆளாகி வருகின்றனர் என்பதைக் கவிஞர்களின் கவிதைகள் சுட்டிக்காட்டியுள்ளன.

ஊடகத்துறையில் வேலை செய்யும் பெண்கள் ஆடவர்களின் காம இச்சைக்கு ஆட்படுகின்றனர் என்பதைக் கவிதைகள் வெளிப்படுத்தி நிற்கின்றது. அதேபோல் விளம்பரத்தில் நடிக்கும் பெண்கள் ஆபாச உடைகளில் நடிக்கும் நிர்பந்தத்திற்குத் தள்ளப்படுவதையும் அதனால் அவர்கள் அடையும் துன்பத்தையும் கவிதைகள் எடுத்துரைக்கின்றன.

அலுவலகம் செல்லக்கூடிய பெண்கள், வீட்டை விட்டு வெளியேறி மீண்டும் வீடு வந்து சேருவதற்குள் ஆண்களின் பல்வேறு விதமான பார்வைகளுக்கும் சீண்டல்களுக்கும் ஆளாக நேரிடுவதையும், கூலி வேலை செய்யும் பெண்கள் கங்காணிகளின் அத்துமீறல்களுக்கு ஆட்படுவதையும் காணமுடிகின்றது.

தனியார் மற்றும் அரசு அலுவலகங்களுக்கு வேலைக்குச் செல்லும் பெண்கள், அலுவலக வேலைகளையும் வீட்டுவேலைகளையும் செய்யும் இரட்டைப் பணிச்சுமைக்கு ஆளாகின்றனர் என்பதைக் கவிதைகளின்வழி அறியமுடிகின்றது.

இரட்டைப் பணிச்சுமைக்கு ஆளாகும் பெண்கள் தாம் தேடிய வருவாயில் தமக்குரிய தேவைகளைப் பூர்த்தி செய்வதற்குக்கூட, தந்தையிடமும் கணவனிடமும் அனுமதி பெறவேண்டிய நிலை உள்ளதைக் கவிதைகள் எடுத்துரைத்துள்ளன.

வியாபாரத் தளத்தில் பெண்களுக்கு ஏற்படும் பல்வேறு சிக்கல்கள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. அரசு வேலையைத் தவிர, தனியார்த் துறையில் வேலை செய்யும் பெண்களுக்குச் சம ஊதியம் இல்லாமல் வஞ்சிக்கப்படுவதை அறியமுடிகின்றது.

இவ்வாறு வேலைக்குச் செல்லும் பெண்கள் பல்வேறு சிக்கல்களை அனுபவிப்பதோடு பல இன்னல்களுக்கும் ஆளாகின்றனர் என்பதைக் கவிஞர்களின் கவிதைகள் தெளிவுபடுத்தியுள்ளன.

பணிக்குச் செல்லும் பெண்கள் வீடு, அலுவலகம் என்று இரண்டு நிலைகளிலும் இரட்டைப் பணிச்சுமைக்கு ஆளாகின்றனர். இதனால் வேலைக்குச் செல்லும் பெண்கள் உள்ளத்தாலும் உடலாலும் துன்பப்படுவதைக் காணமுடிகின்றது. இந்நிலையிலிருந்து பெண்கள் விடுபடவேண்டுமானால், வீட்டு வேலையைத் தன் மனைவியுடன் சேர்ந்து ஆண்கள் பகிர்ந்துகொள்ள வேண்டும். அவ்வாறு செய்யும்பட்சத்தில் வேலைக்குச் செல்லும் பெண்கள் இரட்டைப் பணிச்சுமையிலிருந்து விடுபடமுடியும்.

மூன்றாவது இயலில், இன்றைய ஆணாதிக்கச் சமூகத்தில் இல்லத்தரசிகளாக இருக்கும் பெண்கள் விடியற்காலை எழுந்தது முதல் இரவு தூங்கும் வரை குடும்பப் பொறுப்புக்களைச் சுமக்கும் ஊதியமில்லாத குடும்ப வேலைக்காரிகளாக நடத்தப்படுகின்றனர்.

இல்லத்தரசிகளாக இருக்கக் கூடிய பெண்கள் கணவன், குழந்தைகள், மாமனார், மாமியார் ஆகியோருக்குத் தேவையான அனைத்து வேலைகளையும் செய்யும் குடும்ப அடிமையாகவே வாழ்ந்து வருவதோடு, கருத்துச் சுதந்திரம்கூட இல்லாத நிலையில் வாழ்ந்து வருகிறார்கள் என்பதைக் கவிஞர்களின் கவிதை வரிகள் வெளிக்காட்டுகின்றன.

திருமணம் ஆகி இல்லத்தரசிகளாக இருக்கக்கூடிய பெண்கள், வீட்டு வேலை செய்யும் கூலியில்லா வேலைக்காரியாகவே மதிக்கப்படுவதோடு அவர்களின் உழைப்பு சுரண்டப்படுவதையும் காணமுடிகின்றது.

சமுதாய மாற்றம் என்பது தானாக நடப்பதில்லை. அதற்கு ஒவ்வொரு பெண்ணும் தன்னை மீட்டெடுக்க வேண்டும் என்ற சிந்தனை எழுச்சியுடன் செயல்படத் தூண்டும் கவிஞர்களின் கவிதைகளையும் பார்க்க முடிகின்றன.

பெண்ணின் அடிமைநிலை பல தலைமுறைகளைக் கடந்து வந்து கொண்டிருக்கிறது. பெண்ணடிமைத்தனம் என்பது காலங்காலமாக அரங்கேறி வருவதை கவிதைகள் எடுத்துக்காட்டியுள்ளன.

பெற்றோரின் பொறுப்பின்மையால் இளம்வயதில் திருமணம் செய்து வைக்கின்றனர். சிறுவயது முதலே பெண்கள் சுதந்திரமாகச் செயல்பட விடுவதில்லை ஆகையால், அவர்கள் சுதந்திரமாக முடிவெடுக்கும் உரிமையைக்கூட இழக்கின்றனர்.

குடும்பத் தளத்திலும், சமூகத் தளத்திலும் பெண்கள் மரபு சார்ந்த பணிகளை மேற்கொள்கின்றனர் என்பதைக் கவிஞர்கள் சுட்டிக்காட்டியுள்ளனர்.

ஆணாதிக்கத்தின் போக்கால், குடும்பப் பெண்கள் பல்வேறு துன்புறுத்தலுக்கு ஆளாக நேரிடுவதோடு, இல்லத்தரசிகளில் பலர் குடும்ப அடிமையாக நடத்தப்பட்டு வீட்டுச் சிறையில் வைக்கப்பட்டுள்ளதையும் கவிதைகள் எடுத்துக்காட்டியுள்ளன.

இல்லத்தரசிகளாக இருக்கக் கூடிய பெண்கள் வீட்டில் வேலையின்றி இருப்பதாகவே கணவன்மார்கள் எண்ணிக்கொள்கின்றார்கள்போலும். காலையில் கணவன் எழுந்திருப்பதற்கு முன்பாகவே எழுந்து வீட்டு வேலைகளைச் செய்து, காலை உணவு உண்ணச் செய்து, மதிய உணவும் தயார் செய்து வைத்து அலுவலகம் செல்லும் கணவனுக்கு எடுத்துக் கொடுத்து இன்முகத்தோடு அனுப்பி வைக்கின்றாள் மனைவி. கணவன் வேலைக்குச் சென்றதும் குழந்தைகளைக் குளிப்பாட்டி, ஆடை மாற்றி, உணவு கொடுத்து பள்ளிக்கு அனுப்பி வைக்கும் பொறுப்பும் பெண்களுக்குரியது. குழந்தையைப் பள்ளிக்கு அனுப்பிவிட்டு, வீட்டைச் சுத்தம் செய்தல், துணி துவைத்தல் என்று வீட்டு வேலைகள் அனைத்தையும் செய்து முடிப்பதற்குள் அலுவலகம் சென்ற கணவன் வீடு திரும்பிவிடுவார். திரும்பி வந்த கணவனுக்கு மாலை நேர சிற்றுண்டி, இரவு உணவு என்று எல்லாம் செய்து கணவன், குழந்தை ஆகியோர் உறங்கச் சென்ற பின்பு மனைவியானவள் உறங்கச் செல்வதுண்டு. இவ்வாறு குடுமப்பப் பெண்கள் தன் குடும்பத்திற்காக ஓயாது

உழைக்கும் ஓர் இயந்திரமாகவே செயல்பட வேண்டியுள்ளதை அறியமுடிகின்றது. இத்தகையப் பெண்களின் தியாகம் போற்றப்பட வேண்டியதாகும்.

நான்காவது இயலில், பெண் குழந்தைகள் பிறந்தது முதலே பல இன்னல்களுக்கு ஆட்படுவதையும், குழந்தைத் தொழிலாளர்களாக வலம் வருவதையும், பணி செய்யும் இடத்தில் பாதுகாவலர்களாக இருக்க வேண்டியவர்களாலேயே வன்பகடிக்கு ஆளாவதையும் கவிஞர்களின் கவிதைகள் வெளிப்படுத்துகின்றன.

பெண் குழந்தைகள் சிசுவிலிருக்கும்போதே சமூகத்தினரால் புறக்கணிக்கப்பட்டு சிசுவிலேயே கொலை செய்யப்பட்டிருப்பதைக் கவிஞர்களின் கவிதைகள் உறுதிசெய்கின்றன. அதையும் மீறி அக்குழந்தை பிறந்தாலும்கூட பாலினப் பாகுபாடு பார்க்கப்பட்டு பெண்குழந்தை ஒதுக்கப்படுவதை கவிதைகள் வெளிக்காட்டியுள்ளன.

இன்றைய சமுதாயத்தில் தன்னலமும், சுயநலமும் பெருகிப்போன இக்காலகட்டத்தில் குழந்தைத் தொழிலாளர்களாகப் பெண் குழந்தைகள் தீப்பெட்டித் தொழிற்சாலைகளில் பணி செய்யும் இயந்திரங்களாக வலம் வருவதைக் காணமுடிகின்றது.

பெண் குழந்தைகளைப் பெறுவதும், அவர்களை வளர்ப்பதும் பெரும் சுமையாகக் கருதி வருகின்றனர்.

ஆண்களின் மிருகச் செயலுக்குப் பெண் குழந்தைகள் ஆளாகின்றனர். சிறு வயதுக் குழந்தைகளும் பாலியல் துன்புறுத்தலுக்கு ஆளாகி அவர்களின் வாழ்க்கை கேள்விக்குறியாக மாறிவிடுவதை கவிதைகள் வெளிப்படுத்துகின்றன.

பெண் குழந்தைகள் மீதான தாக்குதல்களும், பாலியல் வன்முறைகளும் இச்சமூகத்தில் இன்றும் அரங்கேறிய வண்ணம் நடைபெற்றுக் கொண்டிருப்பதைக் காணமுடிகின்றது.

பெண்கள், மகள், குழந்தை, மாணவி, தோழி, ஃபிகரு, காதலி, மனைவி, தேவிடியா, நடத்தை கெட்டவ , குடியைக் கெடுக்கிறவ, சமூக சேவகி, டீச்சர், தாதி, வேலைக்காரி, இலக்கியவாதி, நடிகை, போராளி, உழைப்பாளி எனப் பல்வேறு பெயர்களில் அழைக்கப்படுவதைக் கவிதைகளில் காணமுடிகின்றன.

பெண் குழந்தைகள் வேண்டாம் என்று ஒதுக்கும் இச்சமூகத்தில் தன் பெற்றோர்களைப் பேணிப் பாதுகாக்கும் பொறுப்பை இறுதிக்காலத்தில் இப்பெண்களே ஏற்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

ஐந்தாவது இயலில், பெண்களின் நால்வகைப் பண்புகள், தாய்மைச் சிறப்பு, பெண்கல்வியால் ஏற்படும் மாற்றம், பெண்ணின் போரக்குணம், அரசியல் சிந்தனை, விடுதலை இயக்கப் போராட்டங்கள் மற்றும் பெண்ணிய மீட்சி குறித்த சிந்தனைகள் கவிதைகளாக இடம்பெற்றுள்ளன.

“வரலாறு என்பது வருக்கப் போராட்டங்களின் தொகுப்பே” என்றார் காரல் மார்க்ஸ். உலக வரலாற்றில் ஒடுக்குவோருக்கும், ஒடுக்கப்படுகின்றவருக்கும், சுரண்டலுக்கும், சுரண்டலுக்கெதிரானவர்களுக்கும் இடையில் நடைபெறும் போர். இது ஒரு தொடர் நிகழ்வாக இருக்கிறது என்பதைச் சமூகவியலாரும், வரலாற்று அறிஞர்களும் எடுத்துரைக்கின்றனர்.

மானுட சமுதாயத்தில் சரிபாதியினராகியப் பெண்கள் ஒடுக்கப்படுவோராகவும், சுரண்டப்படுவோராகவும் தங்களை உணர்ந்த நிலையில் தங்களுக்கான விடுதலை உணர்வை முன்னெடுத்துச் செல்ல வேண்டியவராயினர். அதனால், பெண் என்பவள் அடிமையில்லை என்பதை நிரூபிக்கவே பெண்ணியவாதிகளாகத் தங்களை மாற்றிக்கொண்டு அவர்களுக்கான உரிமையை மீட்டெடுக்க முயன்றனர்.

“ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே” என்ற பழமொழியானது பெண்ணின் உயரிய பண்பினை விளக்குவதாக அமைகின்றது. ஆணும் பெண்ணும்

இணைந்தே இருக்கும் இச்சமூகத்தில் இருபாலருக்கும் இருவேறு மதிப்பீடுகள் நிலவி வருவதைக் காணமுடிகின்றது.

ஆண், பெண் சமதர்மம் குறித்து ஜீவாவின் பாடல்கள் எடுத்துரைத்துள்ளன. ஆண்களுக்கும் பெண்களுக்கும் சட்டம் வெவ்வேறாகக் காணப்படுவதைச் ஜீவாவின் பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

பெண்ணடிமைத் தனத்தைத் தூக்கிப் பிடித்துக் காத்து வருவதில் மூடநம்பிக்கைக்கும், மூடத்தனத்திற்கும் முழுப்பங்கு உண்டு என்பதைக் கவிதைகள் உணர்த்துகின்றன.

உலகளவில் தோன்றிய தொழிற்புரட்சியின் காரணமாக விழிப்புணர்வைப் பெற்ற பெண்கள் தங்களின் விடுதலை குறித்த தத்துவத்திற்குப் "பெண்ணியம்" என்று பெயரிட்டனர் என்பதை அறியமுடிகின்றது.

கல்வியாலும், பொருளாதார உயர்வாலும் இந்தியச் சமூகத்தில் குறிப்பாகத் தமிழ்ச் சமூகத்தில் பெண்ணிய மீட்சி குறித்த சிந்தனைகளும், செயற்பாடுகளும் தோற்றம் பெற்று வளர்ந்து வருகின்றன.

எந்தச் சூழ்நிலையிலும் மக்கள் உரிமைகளை அதிகாரத்தோடு நிலைநிறுத்துவது அரசு என்னும் நிறுவனமே ஆகும். எனவே, பெண்கள் அவர்களுக்கான உரிமைகளையும் செயற்பாடுகளையும் மீட்டெடுக்க அவ்அரசுடன் தங்களையும் இணைத்துக்கொள்ள வேண்டும் என்பதை அறியமுடிகின்றது.

பெண்ணிய மீட்சி என்பது வெறுமனே பெண்களுக்கான உரிமைகளைப் பெற்றுத் தருவது மட்டுமல்ல.  இந்தச் சமூகத்தையே மாற்றியமைக்க முயல்வதாகும்.

ஆண்களும் பெண்களும் ஒருவருக்கொருவர் ஏற்றத்தாழ்வுகள் பாராது, சரிநிகர் சமமாக வாழும் நிலையைப் பெற்றால் சமூகமும் நாடும் நிலைபெற்று வளம்பெற்று வாழும் என்பது திண்ணம்.

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட இருபால் கவிஞர்களின் கவிதைகளை ஒப்புநோக்கும்போது, பெண் கவிஞர்கள் பெண்களுக்கு ஏற்படும் மன வேதனைகளை, பாலியல் சிக்கல்களை, சமூக ஒடுக்குமுறைகளைத் தாம் அனுபவித்ததால் அழுத்தம் திருத்தமாகத் தம் கவிதைகளில் வெளிப்படுத்தியுள்ளனர்.

ஆண் கவிஞர்கள் பெண்களுக்கு ஏற்படும் சிக்கல்களைத் தம் கவிதைகளில் பதிவு செய்திருந்தாலும், அக்கவிதைகள் அவ்வலிகளைப் பார்த்தும், கேட்டும், அறிந்தும் மேலோட்டமாக வெளிப்படுத்துவனவாகவே அமைந்துள்ளன.

பெண்ணுரிமைக்கானப் பாதுகாப்பு வலிமையான வகையில் சொல்லப்பட வேண்டுமெனில், பண்பாட்டு மாற்றத்தின் அடிப்படையிலான மக்களின் மனமாற்றமும் அம்மனமாற்றத்தை ஏற்படுத்த வலிமையான சட்டமும் அவசியமானதாகக் கருதப்படுகின்றது. அத்தகைய மாற்றத்தை ஏற்படுத்தக் கவிஞர்கள் தத்தம் கவிதைகள்வழி கொண்டுவர ஈடுபட்டுள்ளனர். எனவே, இத்தகைய கவிஞர்களின் பெண்ணிய மீட்சி குறித்த கருத்துப் பரப்புதலுக்கு இன்றைய நிலையில் ஓரளவு வெற்றி கிடைத்துள்ளதை அறியமுடிகின்றது.



# மேலாய்வுக் களங்கள்

"***தமிழ்ப் புதுக்கவிதைகளில் பெண்ணியம்***" என்ற தலைப்பில் ஆய்வு செய்ததன் விளைவாக இத்தலைப்பை ஒட்டிய கீழ்வரும் தலைப்புகளில் மேலாய்வு செய்வதற்கு வாய்ப்புள்ளது.

1. ஆண் கவிஞர்களின் கவிதைகளில் பெண்ணியம்
2. பெண் கவிஞர்களின் கவிதைகளில் பெண்ணியம்
3. பத்தாண்டு தமிழ்ப் புதுக்கவிதைகளில் பெண்ணியம்
4. ஐந்தாண்டு தமிழ்ப் புதுக்கவிதைகளில் பெண்ணியம்
5. தமிழச்சி தங்கபாண்டியன் கவிதைகளில் பெண்ணியம்
6. கனிமொழி கவிதைகளில் பெண்ணியம்
7. ஆண்டாள் பிரியதர்ஷினி கவிதைகளில் பெண்ணியம்
8. சல்மா கவிதைகளில் பெண்ணியம்

# துணைநூற் பட்டியல்

**முதன்மை நூல்கள்**

## அ.பெண் கவிஞர்கள்


1. அனிதா, - கனவு கலையாத கடற்கன்னி,
உயிர்மை பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2008.

2. ஆண்டாள் பிரியதர்ஷினி, - சுயம் பேசும் கிளி,
ராகவேந்திரா வெளியீடு,
சென்னை,
முதற்பதிப்பு, 2001.

3. ” ” - தோகையெல்லாம் துப்பாக்கிகள்,
ராகவேந்திரா வெளியீடு,
சென்னை,
முதற்பதிப்பு, 2002.

4. ” ” - முத்தங்கள் தீர்ந்துவிட்டன,
குமரன் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2004.

5. இளம்பிறை, - நிசப்தம்,
பொன்னி வெளியீடு,
சென்னை,
முதற்பதிப்பு, 1998.

6. கனிமொழி, - கருவறை வாசனை,
வ.உ.சி. நூலகம்,
சென்னை,
நான்காம் பதிப்பு, 2012.

7. ” ” - அகத்திணை,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில்,
நான்காம் பதிப்பு, 2012.

8. கனிமொழி, - கறுக்கும் மருதாணி,
வ.உ.சி. நூலகம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு, 2013.

9. ”” - சிகரங்களில் உறைகிறது காலம்,
வ.உ.சி. நூலகம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு, 2015.

10. குட்டி ரேவதி, - முலைகள்,
பனிக்குடம் பதிப்பகம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு, 2003.

11. ”” - உடலின் கதவு,
பனிக்குடம் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2006.

12. ”” - பூனையைப்போல அலையும் வெளிச்சம்,
அடையாளம் பதிப்பகம்,
திருச்சி,
முதற்பதிப்பு, 2010.

13. சல்மா, - பச்சைத் தேவதை,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில்,
நான்காம் பதிப்பு, 2014.

14. ”” - ஒரு மாலையும் இன்னொரு மாலையும்,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில்,
ஏழாம் பதிப்பு, 2014.

15. சுகிர்தராணி, - கைப்பற்றி என் கனவு கேள்,
காலச்சுவடு பதிப்பம்,
நாகர்கோவில்,
முதற்பதிப்பு, 2002.

16. சுகிர்தராணி, - காமத்திப்பூ,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில்,
ஐந்தாம் பதிப்பு, 2015.

17. தமிழச்சி தங்கபாண்டியன், - எஞ்சோட்டுப் பெண்,
உயிர்மை பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2003.

18. ”” - வனப்பேச்சி,
உயிர்மை பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2007.

19. ”” - மஞ்சணத்தி,
உயிர்மை பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2009.

20. ”” - அருகன்,
உயிர்மை பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2011.

21. தாமரை, - ஒரு கதவும் கொஞ்சம் கள்ளிப்பாலும்,
குமரன் பதிப்பகம்,
சென்னை,
நான்காம் பதிப்பு, 2009.

22. பிருந்தா, சே., - வீடு முழுக்க வானம்,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில்,
முதற்பதிப்பு, 2009.

23. பொன்மணி வைரமுத்து, - பொன்மணி வைரமுத்து கவிதைகள்,
சூர்யா லிட்ரேச்சர் லிமிடெட்,
சென்னை,
முதற்பதிப்பு, 1991.

24. மாலதி மைத்ரி, - நீலி,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில்,
முதற்பதிப்பு, 2005.

25. ”” - எனது மதுக்குடுவை,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில்,
முதற்பதிப்பு, 2011.

26. ”” - நீரின்றி அமையாது உலகு,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில்,
மூன்றாம் பதிப்பு, 2012.

27. மீனாட்சி, இரா., - மீனாட்சி கவிதைகள்,
காவ்யா வெளியீடு,
சென்னை,
இரண்டாம் பதிப்பு, 2006.

28. வெண்ணிலா, அ., - பெண் எழுதும் காலம்,
அகநி வெளியீடு,
வந்தவாசி,
முதற்பதிப்பு, 2007.

29. ”” -ஆதியில் சொற்கள் இருந்தன,
அன்புநிலா பதிப்பகம்,
வந்தவாசி,
மூன்றாம் பதிப்பு, 2008.

30. ”” - இசைக்குறிப்புகள் நிறையும் மைதானம்,
அன்பு நிலா பதிப்பகம்,
வந்தவாசி,
முதற்பதிப்பு, 2008.

31. ”” - நீரிலலையும் முகம்,
பாவை பப்ளிகேஷன்ஸ்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு, 2015.

32. வைகைச் செல்வி, - அம்மி,
காவ்யா வெளியீடு,
வந்தவாசி,
முதற்பதிப்பு, 2008.

**ஆ.ஆண் கவிஞர்கள்**

33. அப்துல் ரகுமான், - ஆலாபனை,
கவிக்கோ பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1995.

34. ”” - நேயர் விருப்பம்,
நேசனல் பப்ளிஷர்ஸ்,
சென்னை,
பத்தாம் பதிப்பு, 2004.

35. ”” - பால்வீதி,
நேஷசனல் பப்ளிஷர்ஸ்,
சென்னை,
பதினாறாம் பதிப்பு, 2012.

36. ”” - கவிக்கோ கவிதைகள்,
நேஷனல் பப்ளிஷர்ஸ்,
சென்னை,
முதற்பதிப்பு, 2013.

37. அறிவுமதி, - அறிவுமதி கவிதைகள்,
தமிழோசைப் பதிப்பகம்,
கோவை,
முதற்பதிப்பு, 1999.

38. இன்குலாப், - ஒவ்வொரு புல்லையும்,
புதுமலர் படைப்பகம்,
கோவை,
முதற்பதிப்பு, 1999.

39. கலாப்ரியா, - உளமுற்ற தீ,
சந்தியா பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2013.

40. ”” - தண்ணீர்ச் சிறகுகள்,
சந்தியா பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2014.

41. கலாசுப்ரமணியம் (பதி.ஆ.), - பிரமிள் கவிதைகள்,
அடையாளம் வெளியீடு,
திருச்சி,
முதற்பதிப்பு, 2007.

42. காமராசன், நா., - பொம்மைப் பாடகி,
பூம்புகார் பிரசுரம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1980.

43. ”” - கறுப்பு மலர்கள்,
குமரன் பதிப்பகம்,
சென்னை,
பதினைந்தாம் பதிப்பு, 2014.

44. சண்முகசுந்தரம்,சு.(தொகு.ஆ.), - பழமலய் கவிதைகள்,
காவ்யா வெளியீடு,
சென்னை,
முதற்பதிப்பு, 2009.

45. சிற்பி, - சிரித்த முத்துக்கள்,
மணிவாசகர் நூலகம்,
சிதம்பரம்,
முதற்பதிப்பு, 1968.

46. ”” - மௌன மயக்கங்கள்,
கோலம் வெளியீடு,
பொள்ளாச்சி,
முதற்பதிப்பு, 1982.

47. ”” - சிற்பி கவிதைகள் - தொகுதி 1,
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி)லிட்.,
சென்னை,
முதற்பதிப்பு, 2011.

48. ”” - சிற்பி கவிதைகள் - தொகுதி 2,
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி)லிட்.,
சென்னை,
முதற்பதிப்பு, 2011.

49. தமிழன்பன் ஈரோடு, - அந்த நந்தனை எரித்த நெருப்பின் மிச்சம்,
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1982.

50. ”” - ஈரோடு தமிழன்பன் கவிதைகள்
(தொகுதி-2),
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2007.

51. ”” - ஈரோடு தமிழன்பன் கவிதைகள்
(தொகுதி-3),
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2007.

52. ”” - பனிபெய்யும் பகல்,
பூம்புகார் வெளியீடு,
சென்னை,
முதற்பதிப்பு, 1998.

53. பழநிபாரதி, - காதலின் பின் கதவு,
குமரன் பதிப்பகம்,
சென்னை,
பத்தாவது பதிப்பு, 2014.

54. ”” - தனிமையில் விளையாடும் பொம்மை,
குமரன் பதிப்பகம்,
சென்னை,
மூன்றாவது பதிப்பு, 2014.

55. மீரா, - கனவுகள் + கற்பனைகள் =
காகிதங்கள்,
அகரம் வெளியீடு,
தஞ்சாவூர்,
பதினேழாம் பதிப்பு, 2012.

56. ”” - கோடையும் வசந்தமும்,
அன்னம் வெளியீடு,
தஞ்சாவூர்,
இரண்டாம் பதிப்பு, 2014.

57. முத்துக்குமார், நா., - நா.முத்துக்குமார் கவிதைகள்,
பட்டாம்பூச்சி பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2016.

58. மேத்தா, மு., - ஊர்வலம்,
கவிதா வெளியீடு,
சென்னை,
பதினேழாம் பதிப்பு, 2012.

59. ”” - காத்திருந்த காற்று,
கவிதா வெளியீடு,
சென்னை,
ஒன்பதாம் பதிப்பு, 2012.

60. ”” - கண்ணீரப் பூக்கள்,
கவிதா பப்ளிகேஷன்ஸ்,
சென்னை,
முப்பத்தைந்தாம் பதிப்பு, 2015.

61. வைரமுத்து, - இன்னொரு தேசிய கீதம்,
கலைஞன் பதிப்பகம்,
சென்னை, 1982.

62. ”” - பெய்யெனப் பெய்யும் மழை,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிட்,
சென்னை,
முதற்பதிப்பு, 1999.

63. ”” - வைரமுத்து கவிதைகள்,
சூர்யா வெளியீடு,
சென்னை,
இரண்டாம் பதிப்பு, 2000.

64. ”” - திருத்தி எழுதிய தீர்ப்புகள்,
சூர்யா லிட்ரேச்சர் (பி) லிட்,
சென்னை,
இருபத்தைந்தாம் பதிப்பு, 2013.

65. ஜெயந்தா நெல்லை, - தென்றலோடு சில தினங்கள், வாலி பதிப்பகம், சென்னை, நான்காம் பதிப்பு, 2014.

**துணைமை நூல்கள்**

1. அபர்ணா மகந்தா, - மார்க்சியமும் பெண் நிலை வாதமும், பொன்னி வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, 1988.

2. அரங்க மல்லிகா, (தொகு.ஆ.), - தமிழ்க் கவிதைகளில் பெண்ணியம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, முதற்பதிப்பு, 2008.

3. அரசு மணிமேகலை, - ஒரு வானம்பாடி வாய் திறக்கிறது, பத்மாவதி பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1980.

4. அருண்மொழி, - இசை முழக்கம், ஆர்த்தி பதிப்பகம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1983.

5. அழகப்பன், ஆறு., - தாலாட்டுப் பாடல்கள், பாரி நிலையம், சென்னை, முதற்பதிப்பு, 1966.

6. அஜிதா, பி.எஸ்., - சரிபாதி பெண்கள் சமமானவர்கள் தானா? (பெண்ணுரிமைக் கையேடு), பாரதி புத்தகாலயம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 2011.

7. ஆசு, (ஆ.சுப்ரமணியம்), - என்றொரு மௌனம், தவம் வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, 1999.

8. இரயாகரன், பி., - ஆணாதிக்கமும் சமூக ஒடுக்கு முறைகளும், கீழைக்காற்று பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2001.

9. இளங்கலை மணி, - விடியல் கீதம், விடியல் வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, 1992.

10. இளமதி சானகிராமன், க., - பெண்ணியம் பேச, குறிஞ்சி பதிப்பகம், புதுச்சேரி, முதற்பதிப்பு, 2002.

11. இளையபாரதி, - விசாரணைகள், நிஜங்கள் வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, 1998.

12. ஔவை, - எதை நினைந்தழுவதும் சாத்தியமில்லை, காலச்சுவடு பதிப்பகம், நாகர்கோவில், முதற்பதிப்பு, 2014.

13. கண்ணதாசன், - கண்ணதாசன் கவிதைகள், தொகுதி-5, வானதி பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1978.

14. கந்தையாபிள்ளை, ந.சி., - பெண்களும் சமூகமும், ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், சென்னை, முதற்பதிப்பு, 1985.

15. கபிலன், - தெரு ஓவியம், யாளி பதிவு வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, 1999.

16. கருமலைப்பழம்நீ, பாவலர், - அழகு,
விசாலாட்சி பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1985.

17. கலியாண சுந்தரனார்,திரு.வி., - பெண்ணின் பெருமை(அ)வாழ்க்கைத் துணை,
பாவை பப்ளிஷர்ஸ்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு, 2014.

18. கஸ்தூரி ராசா, - கஸ்தூரி ராசாவின் கவிதைகள்,
ஞாயிறு பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1998.

19. கார்த்திகா, - இவளுக்கு இவள் என்றும் பேர்,
உயிர்மை பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2010.

20. கீதா சுகுமாரன், - ஒற்றைப் பகடையில் எஞ்சும் நம்பிக்கை,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில்,
முதற்பதிப்பு, 2014.

21. குட்டி ரேவதி, - தனிமையின் ஆயிரம் இறக்கைகள்,
அடையாளம் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2010.

22. கேசவன், கோ.(பதி.ஆ), - பாரதியம்,
அன்னம் வெளியீடு,
சிவகங்கை,
முதற்பதிப்பு, 1983.

23. கோவேந்தன், த., - புதுநானூறு,
புதுமைப் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1985.

24. சண்முகம், குருவிக்கரம்பை, - குருவிக்கரம்பை சண்முகம் கவிதைகள்,
பாண்டியன் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1976.

25. சாலை இளந்திரையன், - அன்னை நீ ஆட வேண்டும்,
பாரி நிலையம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1964.

26. சுகிதா, - ஒரு காதலும் ஒரு செம்பு தண்ணீரும்,
உயிர்மை பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2013.

27. சுசீலா, எம். ஏ., - பெண் இலக்கியம் வாசிப்பு,
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை,
முதற்பதிப்பு, 2001.

28. ”” - விடுதலைக்கு முன் தமிழ்நாவல்களில் பெண்ணியம்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1994.

29. சுத்தானந்த பாரதி, - உலகப்பாட்டு,
சுத்தானந்தர் நூலகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1962.

30. சுபத்ரா, - எந்தன் தோழா,
மனிதம்,
திருச்சி,
முதற்பதிப்பு, 1990.

31. செல்வகணபதி, பொன்., - கைது செய்யப்பட்ட நியாயங்கள்,
மக்கள் வெளியீடு,
சென்னை,
முதற்பதிப்பு, 1981.

32. செல்வி, இரா., - பெண்மையச் சிந்தனைகள்,
காவ்யா வெளியீடு,
சென்னை,
முதற்பதிப்பு, 2010.

33. செல்வி திருச்சந்திரன், - தமிழ் வரலாற்றுப் படிமங்கள்,
சிலவற்றில் ஒரு பெண்நிலை நோக்கு,
குமரன் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1997.

34. சேதுமணி மணியன், - தமிழ் நாவல்களில் மதிப்புகள்,
செண்பகம் வெளியீடு,
மதுரை,
முதற்பதிப்பு, 1990.

35. சேதுராமன், வா. மு., - நெஞ்சத்தோட்டம்,
அழகுப் பதிப்பகம்,
இராமநாதபுரம்,
முதற்பதிப்பு, 1965.

36. சோமசுந்தரம், நா., -அறிவே தெய்வம்,
பொன்முடி பதிப்பகம்,
காரைக்குடி,
முதற்பதிப்பு, 1969.

37. ஞானி, - எதிர்எதிர்கோணங்களில் ...
தத்துவம், மதம், மானுடம்,
காவ்யா வெளியீடு,
சென்னை,
முதற்பதிப்பு, 2002.

38. ஞானக்கூத்தன், - கடற்கரையில் சில மரங்கள்,
சிட்டால் பபனிகேஷன்ஸ்,
சென்னை,
முதற்பதிப்பு, 1983.

39. தமிழ்ச்செல்வன், - பெண்மை என்றொரு கற்பிதம்,
பாரதி புத்தகாலயம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2009.

40. தமிழ்நாடன், - மனுதர்மம்,
காவ்யா வெளியீடு,
சென்னை,
முதற்பதிப்பு, 2012.

41. தியாகராஜன், - செங்கீதம்,
ரோமா பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1983.

42. தேசிக விநாயகம் பிள்ளை, கவிமணி, - மலரும் மாலையும்,
பாரி நிலையம்,
சென்னை,
பத்தாம் பதிப்பு, 1961.

43. தேவதத்தா, - பெண்ணியம் ஒரு வரலாற்றுப்பார்வை,
அன்னை தெரசா மகளிர்
பல்கலைக்கழகம்,
கொடைக்கானல்,
முதற்பதிப்பு, 1991.

44. தேவதத்தா, கமலி, தி., - பெண்ணியக் கலைச்சொல் விளக்கக்
கையேடு,
அன்னை தெரசா மகளிர்
பல்கலைக்கழகம்,
முதற்பதிப்பு, 1992.

45. தொல்காப்பியர், - தொல்காப்பியம்,
கழக வெளியீடு,
சென்னை, 1986.

46. நடராஜன், தி.சு., - திறனாய்வுக் கலை,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை,
முதற்பதிப்பு, 1998.

47. பக்தவத்சல பாரதி, - பண்பாட்டு மானுடவியல்,
மகாகவி பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1993.

48. பஞ்சாங்கம், க., - பெண் - மொழி - புனைவு,
பெங்களூர்,
முதற்பதிப்பு, 1999.

49. பச்சியப்பன், - உனக்குப் பிறகான நாட்களில்,
பொன்னி வெளியீடு,
சென்னை,
முதற்பதிப்பு, 1998.

50. பரிமளம், க., - இந்துப் பெண்ணியம்,
சமுதாயச் சிந்தனை செயல் ஆய்வு மையம்,
மதுரை,
முதற்பதிப்பு, 1995.

51. பரிமேலழகர்(உ.ஆ.), - திருக்குறள்,
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை,
எட்டாம் பதிப்பு, 2007.

52. பழனியப்பன், மு., - விடுதலைக்கு முந்தைய பெண்களின் நாவல்கள்,
தி பார்க்கர், சென்னை,
முதற்பதிப்பு, 2003.

53. ,, - மகாராணியின் அலுவலக வழி,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை,
முதற்பதிப்பு, 2010.

54. பாப்ரியா, - ஜன்னல் கைதிகள்,
நர்மதா பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1984.

55. பாரதி, - பெண் வார்ப்பும் வளர்ப்பும்,
பூஞ்சோலை பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1993.

56. பாரதியார், - பாரதியார் கட்டுரைகள்,
பூம்புகார் பிரசுரம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1977.

57. ”” - பாரதியார் கவிதைகள்,
தென்றல் நிலையம்,
சிதம்பரம்,
ஒன்பதாம் பதிப்பு, 2008.

58. பாரதிதாசன், - பாரதிதாசன் கவிதைகள்,
சுவாமிமலை பதிப்பகம்,
சென்னை,
ஐந்தாம் பதிப்பு, 2016.

59. ”” - குடும்ப விளக்கு,
மணிவாசகர் நூலகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1994.

60. பிரேமா, இரா., - பெண்ணிய அணுகுமுறைகள்,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1998.

61. ”” - கற்பு கலாச்சாரம்,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1998.

62. ”” - பெண்ணியம்,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை,
ஐந்தாம் பதிப்பு, 2013.

63. ”” - பெண் எழுத்துக்களின் அரசியல்,
அறிவுப் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2007.

64. புவியரசு, - இதுதான்,
அன்னம் வெளியீடு,
சிவகங்கை,
முதற்பதிப்பு, 1975.

65. பெரியார், - பெரியார்க் களஞ்சியம்,
பெரியார் சுயமரியாதைப் பிரச்சார
நிறுவன வெளியீடு,
சென்னை, 1991.

66. ”” - பெண் ஏன் அடிமையானாள்,
பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவன
வெளியீடு,
சென்னை,
இருபத்து ஒன்பதாம் பதிப்பு, 1992.

67. ”” - மதமும் மங்கையரும்,
பேரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவன
வெளியீடு,
சென்னை, 1999.

68. பொற்கோ, - பொற்கோவின் கவிதைகள்,
தமிழ் நூலகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1987.

69. ப்ரேமா ரேவதி, - யாக்கையின் நீலம்,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில்,
முதற்பதிப்பு, 2014.

70. மஞ்சுளா, ஜி., - தீ மிதி,
கீற்று வெளியீட்டகம்,
குமரி மாவட்டம்,
முதற்பதிப்பு, 2007.

71. மணியரசன், பெ., வளவன், மா., - பாரதி ஒரு பரம்பரைப் பாடல்கள்,
கார்க்கி நூலகம்,
சென்னை, 1982.

72. மலையமான், வி., - மலையமான் கவிதைகள்,
ஒளிப் பதிப்பகம்,
சென்னை, 1989.

73. மாதங்கி, - நாளை பிறந்து இன்று வந்தவள்,
உயிர்மை பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 2008.

74. மாலதி ஹரீந்திரன், - மாலதி ஹரீந்திரன் ஹைகூ கவிதைகள்,
மாலதி ஹரீந்திரன் வெளியீடு,
முதற்பதிப்பு, 1996.

75. முகவை முத்து, - புது(வை)க் கவிதைகள்,
அரசி பதிப்பகம்,
புதுச்சேரி,

76. முடியரசன், - முடியரசன் கவிதைகள்,
பாரி நிலையம்,
சென்னை, 1961.

77. முத்துசாமி, இ. சு., - சந்தத்தில் சிந்திப்பேன்,
பாரி நிலையம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1980.

78. முத்துச் சிதம்பரம், ச., - பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும்,
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1995.

79. முத்துமோகன், ந., - ஐரோப்பியத் தத்துவங்கள்,
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை,
முதற்பதிப்பு, 2015.

80. மேத்தா, மு., - நந்தவன நாட்கள்,
கவிதா பப்ளிகேஷன்ஸ்,
சென்னை,
பதினொன்றாம் பதிப்பு, 2012.

81. மேத்தா, மு., - அவர்கள் வருகிறார்கள்,
கவிதா பப்ளிகேஷன்ஸ்,
சென்னை,
பத்தாம் பதிப்பு, 2010.

82. யுகபாரதி, - மனப்பத்தாயம்,
ராஜேஸ்வரி புத்தக நிலையம்,
சென்னை,

83. ரசூல், ஹெச். ஜி., - மைலாஞ்சி,
சரம், கன்னியாகுமரி,
முதற்பதிப்பு, 2000.

84. ரமண கங்கா, - சின்னச் சின்ன இழைகள்,
ஏரக வெளியீடு,
மதுரை,
முதற்பதிப்பு, 1980.

85. ராஜம் கிருஷ்ணன், - காலந்தோறும் பெண்,
நேஷனல் புக் டிரஸ்ட்,
புதுதில்லி,
முதற்பதிப்பு, 1994.

86. வத்ஸலா, - சுயம்,
ஸ்நேகா,
சென்னை,
முதற்பதிப்பு, 2000.

87. வள்ளியப்பா, அழ., - மலரும் உள்ளம்,
பாரி நிலையம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1954.

88. விஷ்ணு நாகராஜன், - புதிய நிலா,
அகரம் வெளியீடு,
சிவகங்கை,
முதற்பதிப்பு, 1982.

89. வேங்கடராமன், சு., - எண்பதுகளில் தமிழ்ப் புனைகதைகளில் பெண்ணியம்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1993.

90. வேதநாயகம்பிள்ளை, ச., மாயூரம், - பெண் கல்வி, பெண் மானம்,
செல்லப்பா பதிப்பகம்,
மதுரை,
முதற்பதிப்பு, 2011.

91. வேதாச்சலம், ஆ., - திரு.வி.க. மணிமொழிகள்,
பர்வத வர்த்தினி பதிப்பகம்,
சென்னை, 1981.

92. வேலுசாமி, ப., - இந்திர ஜாலம்,
சிற்பி பதிப்பகம்,
பொள்ளாச்சி,
முதற்பதிப்பு, 1983.

93. லாவண்யா சுந்தரராஜன், - இரவைப் பருகும் பறவை,
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில்,
முதற்பதிப்பு, 2011.

94. ஜீவானந்தம், ப., - ஜீவாவின் பாடல்கள்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு, 2007.

95. ”” - ஜீவாவின் புதுமைப் பெண்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை,
ஏழாம் பதிப்பு, 2007.

96. ஜெகதீசன், ஆ., - பாலின சமத்துவம்,
வீ.பாலசுப்பிரமணியன் வெளியீடு,
திருச்சிராப்பள்ளி,
முதற்பதிப்பு, 2011.

97. ஜெயந்தி குமார், - இப்படிக்குக் காதல்,
சரஸ்வதி பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு, 1997.

98. ஸ்ரீவித்யா, இரா., - நவீனப் பெண்ணியல் திறனாய்வும் வ.ரா.வின் புதினங்களும், காவ்யா வெளியீடு, சென்னை, 2008.

99. ஹசீனா பர்வீன், - வைகறைக் கோலம், அகில் பதிப்பகம், கோவை, இரண்டாம் பதிப்பு, 1997.

**பதிப்பிக்கப் பெறாத ஆய்வேடுகள்**

1. இந்திரா, ரெ., - பெண்ணிய நோக்கில் பிரபஞ்சன் புதினங்கள், முனைவர் பட்ட ஆய்வேடு, பெரியார் பல்கலைக்கழகம், சேலம், 2010.

2. மாரியம்மாள், கி., - நவீனத் தமிழ் ஆங்கிலப் புதினங்களில் பெண்ணியம், முனைவர் பட்ட ஆய்வேடு, புதுவைப் பல்கலைக்கழகம், புதுச்சேரி, 1993.

**நாளிதழ்**

1. தினத்தந்தி, மதுரைப்பதிப்பு, நாள்: 06.02.2019

2. தி இந்து கோவைப் பதிப்பு, நாள்: 28.03.2019.

**வார இதழ்**

1. குமுதம் வார இதழ், சென்னைப்பதிப்பு, நாள்: 20.01.1997.

**அகராதிகள்**

1. ஆசிரியர்குழு, - சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, மறுபதிப்பு, 2012.

2. கந்தையா, ந.சி., - செந்தமிழ் அகராதி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, மறுபதிப்பு, 1999.

3. சிங்காரவேலு முதலியார்(பதி.ஆ.), - ஆக்ஸ்போர்டு அகராதி, தமிழ் இலக்கியக் கலைக்களஞ்சியம், ஆசியக் கல்வி நிறுவனம், புதுதில்லி, 1983.

4. பெரியார், - பெரியார் அகராதி, பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவன வெளியீடு, சென்னை, 1999.

**ஆங்கில நூல்கள்**

1. Bhasker A.Shukla, - Women on women: A Feminist Study, Sarup & Sons Publishers, NewDelhi, First Edition 2006.

2. Helen Tierney, - Women’s Studies Encyclopaedia, Greenwood Press, West Dort, USA, 1999.

3. Peter Barry, - Beginning Theory An Introduction to Literary and Cultural Theory, Manchester University Press, Manchester, United Kingdom, Fourth Edition, 2017.

4. Woolf, - Women writing Jasbir Jain,(Edn.), Rawat Publications, New Delhi, 1996.

5. ……………, - Women Awake, Central Social Welfare Board, Jeevan Deep, New Delhi, 1985.

**DICTIONARY**

1. ………………, - Delux Dictionary, Delux Publishers, Delhi, 2016.

**ENGLISH JOURNAL**

1. Frontline,
   The Hindu Group of Publishers,
   Chennai,
   Date: 04.02.2001.



# பின்னிணைப்பு

## கவிஞர்களின் நிழற்படங்கள்

### பெண் கவிஞர்கள்



அனிதா



ஆண்டாள் பிரியதர்ஷினி



இளம்பிறை



கனிமொழி



குட்டி ரேவதி



சல்மா

# ஆண் கவிஞர்கள்


அப்துல் ரகுமான்


அறிவுமதி


இன்குலாப்


கலாப்ரியா


நா.காமராசன்


சிற்பி



தமிழன்பன்



பழநிபாரதி



பழமலய்



பிரமிள்



மீரா



நா.முத்துக்குமார்

# தமிழ்ப் புதுக்கவிதைகளில் பெண்ணியம்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**சு.கிருஷ்ணமூர்த்தி**

**பதிவு எண்: 2009R1365/2015-2016**

**நெறியாளர்**

**முனைவர் ச.இராமமூர்த்தி**

**தமிழாய்வுத்துறை**

**மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி, சிவகங்கை.**





## அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தர நிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்றுத் தரமதிப்பீட்டில் 3.64
தரப்புள்ளிகளுடன் $A^{+}$ தகுதி மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் -
பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

**காரைக்குடி-630 003**

**ஏப்ரல் - 2019**

# ஆய்வு நிறைவுரை

"***தமிழ்ப் புதுக்கவிதைகளில் பெண்ணியம்***" என்னும் பொருண்மையில் ஆய்வு செய்யப்பட்டதன் அடிப்படையில் இயல்தோறும் கண்டறியப்பட்டுள்ள முடிவுகள் "***ஆய்வு நிறைவுரை***" என்னும் இப்பகுதியில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

"எல்லா வினைகளுக்கும் ஓர் எதிர்வினை உண்டு" என்பது நியூட்டனின் கருத்தாகும். அவரது கருத்து அறிவியலுக்கு மட்டும் பொருந்துவதன்று; இலக்கியத்திற்கும் பொருந்தும். தமிழ் இலக்கியப் படைப்பாக்கத்தில் காலங்காலமாக ஆண்களின் ஆதிக்கமே மேலோங்கியுள்ளது. இதற்குத் திட்டமிட்ட காரணங்கள் எவையேனும் இருந்திருக்குமோ என ஆராய்வது அவசியம் என்றாலும், இன்றைய நிலையில் ஆண்களோடு போட்டியிடுவதற்கு ஏற்பப் பெண்களும் படைப்பாக்கத் துறையில் ஈடுபட்டிருப்பது வரவேற்கத் தக்கதாகும். அதனடிப்படையில் தமிழ் இலக்கியப் படைப்பின் கவிதைத் துறையில் ஈடுபட்டுள்ள பெண்ணியம் பேசும் சமகாலத்தைச் சேர்ந்த இருபால் கவிஞர்களின் படைப்புகளும் பெண்ணிய நோக்கில் ஆய்வுக்குட்படுத்தப்பட்டன.

முதலாவது இயலில், பெண்ணியம், பெண்ணிய விளக்கம், தோற்றம், வரலாறு, பெண்ணிய வகைகள், மேலை நாட்டுப் பெண்ணியம், இந்தியப் பெண்ணியம், தமிழ்நாட்டுப் பெண்ணியம், மற்றும் பெண்ணியத்தின் மூன்று அலைகள், பெண்ணியம் குறித்த கவிதையின் பாடுபொருள்கள் இங்கு விரிவாக ஆராயப்பட்டள்ளன.

பெண்ணியம் என்பது ஆண்களை எதிர்ப்பதன்று. மாறாக, பெண்களுக்கான உரிமைகளைப் பெறுவதே பெண்ணியம் ஆகும். காலங்காலமாக அடிமைப்பட்டு வாழ்ந்து வந்த பெண்ணினமானது இன்று ஆண்களுக்கு இணையாக எல்லாத் துறையிலும்

ஈடுபட்டிருப்பது பெண்ணியவாதிகளின் கருத்துக்கு மேலும் அரண் சேர்ப்பதாக அமைகின்றது.

வரலாற்று அடிப்படையில் பார்த்தால் தாய்வழிச் சமூகமானது தந்தைவழிச் சமூகமாக மாற்றம் பெற்றபோதே, பெண்களை அடிமைப்படுத்தும் கருத்தியல்கள் தோற்றம்பெற்று அவை மரபாக மாற்றம் பெற்றிருப்பதை அறியமுடிகின்றது.

இன்றைய சூழலில் தமிழ்ப் புதுக்கவிதைகளில் "பெண்ணியம்" என்பது தனித்ததொரு சிறப்பினைப் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இரண்டாவது இயலில், பணிப்பெண்கள் எதிர்கொள்ளும் பல்வேறு சிக்கல்கள் கவிதையின்வழி எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

பெண்கள், தற்சார்பினை அடைவதற்குப் பொருளாதாரம் ஓர் அடிப்படை என்பதும் அதனை அடைய தொழில், அலுவலகப் பணிகள் முதலிய ஊதியம் கிடைக்கும் பணிகள் மேற்கொள்ளவேண்டியது அவசியமாகின்றன. எனவே, தொழில்களிலும் அலுவலகப் பணிகளிலும் ஈடுபடும் பெண்கள் சில வக்கிர குணம் கொண்ட ஆண்களால் ஏற்படும் பல்வேறு சிக்கல்களைக் கவிஞர்களின் கவிதைகள் வெளிப்படுத்தியுள்ளன.

பெண்கள் எதிர்கொள்ளும் இச்சமூகச் சிக்கல்கள் களையப்பட வேண்டும் என்ற நோக்கிலும், பெண்ணுரிமைச் சிந்தனையை வளர்த்தெடுக்கும் விதத்திலும் கவிஞர்கள் பலர் கவிதை படைத்துள்ளனர். பெண்களை அடிமைப்படுத்தும் விதத்தில் கட்டமைக்கப்பட்டுள்ள சமூக நடவடிக்கைகளின் ஆணிவேரை அறுக்கும் ஆயுதங்களைத் தாங்கி வந்த கவிதைகளையும் காணமுடிகின்றன.

பணிக்குச் செல்லும் பெண்கள், வீடு, அலுவலகம் என்று வேலைப் பகிர்வின்மையால் இரட்டைப் பணிச்சுமையை மேற்கொண்டு பல்வேறு சிக்கல்களுக்கு ஆளாகி வருகின்றனர் என்பதைக் கவிஞர்களின் கவிதைகள் சுட்டிக்காட்டியுள்ளன.

ஊடகத்துறையில் வேலை செய்யும் பெண்கள் ஆடவர்களின் காம இச்சைக்கு ஆட்படுகின்றனர் என்பதைக் கவிதைகள் வெளிப்படுத்தி நிற்கின்றது. அதேபோல் விளம்பரத்தில் நடிக்கும் பெண்கள் ஆபாச உடைகளில் நடிக்கும் நிர்பந்தத்திற்குத் தள்ளப்படுவதையும் அதனால் அவர்கள் அடையும் துன்பத்தையும் கவிதைகள் எடுத்துரைக்கின்றன.

அலுவலகம் செல்லக்கூடிய பெண்கள், வீட்டை விட்டு வெளியேறி மீண்டும் வீடு வந்து சேருவதற்குள் ஆண்களின் பல்வேறு விதமான பார்வைகளுக்கும் சீண்டல்களுக்கும் ஆளாக நேரிடுவதையும், கூலி வேலை செய்யும் பெண்கள் கங்காணிகளின் அத்துமீறல்களுக்கு ஆட்படுவதையும் காணமுடிகின்றது.

தனியார் மற்றும் அரசு அலுவலகங்களுக்கு வேலைக்குச் செல்லும் பெண்கள், அலுவலக வேலைகளையும் வீட்டுவேலைகளையும் செய்யும் இரட்டைப் பணிச்சுமைக்கு ஆளாகின்றனர் என்பதைக் கவிதைகளின்வழி அறியமுடிகின்றது.

இரட்டைப் பணிச்சுமைக்கு ஆளாகும் பெண்கள் தாம் தேடிய வருவாயில் தமக்குரிய தேவைகளைப் பூர்த்தி செய்வதற்குக்கூட, தந்தையிடமும் கணவனிடமும் அனுமதி பெறவேண்டிய நிலை உள்ளதைக் கவிதைகள் எடுத்துரைத்துள்ளன.

வியாபாரத் தளத்தில் பெண்களுக்கு ஏற்படும் பல்வேறு சிக்கல்கள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. அரசு வேலையைத் தவிர, தனியார்த் துறையில் வேலை செய்யும் பெண்களுக்குச் சம ஊதியம் இல்லாமல் வஞ்சிக்கப்படுவதை அறியமுடிகின்றது.

இவ்வாறு வேலைக்குச் செல்லும் பெண்கள் பல்வேறு சிக்கல்களை அனுபவிப்பதோடு பல இன்னல்களுக்கும் ஆளாகின்றனர் என்பதைக் கவிஞர்களின் கவிதைகள் தெளிவுபடுத்தியுள்ளன.

பணிக்குச் செல்லும் பெண்கள் வீடு, அலுவலகம் என்று இரண்டு நிலைகளிலும் இரட்டைப் பணிச்சுமைக்கு ஆளாகின்றனர். இதனால் வேலைக்குச் செல்லும் பெண்கள் உள்ளத்தாலும் உடலாலும் துன்பப்படுவதைக் காணமுடிகின்றது. இந்நிலையிலிருந்து பெண்கள் விடுபடவேண்டுமானால், வீட்டு வேலையைத் தன் மனைவியுடன் சேர்ந்து ஆண்கள் பகிர்ந்துகொள்ள வேண்டும். அவ்வாறு செய்யும்பட்சத்தில் வேலைக்குச் செல்லும் பெண்கள் இரட்டைப் பணிச்சுமையிலிருந்து விடுபடமுடியும்.

மூன்றாவது இயலில், இன்றைய ஆணாதிக்கச் சமூகத்தில் இல்லத்தரசிகளாக இருக்கும் பெண்கள் விடியற்காலை எழுந்தது முதல் இரவு தூங்கும் வரை குடும்பப் பொறுப்புக்களைச் சுமக்கும் ஊதியமில்லாத குடும்ப வேலைக்காரிகளாக நடத்தப்படுகின்றனர்.

இல்லத்தரசிகளாக இருக்கக் கூடிய பெண்கள் கணவன், குழந்தைகள், மாமனார், மாமியார் ஆகியோருக்குத் தேவையான அனைத்து வேலைகளையும் செய்யும் குடும்ப அடிமையாகவே வாழ்ந்து வருவதோடு, கருத்துச் சுதந்திரம்கூட இல்லாத நிலையில் வாழ்ந்து வருகிறார்கள் என்பதைக் கவிஞர்களின் கவிதை வரிகள் வெளிக்காட்டுகின்றன.

திருமணம் ஆகி இல்லத்தரசிகளாக இருக்கக்கூடிய பெண்கள், வீட்டு வேலை செய்யும் கூலியில்லா வேலைக்காரியாகவே மதிக்கப்படுவதோடு அவர்களின் உழைப்பு சுரண்டப்படுவதையும் காணமுடிகின்றது.

சமுதாய மாற்றம் என்பது தானாக நடப்பதில்லை. அதற்கு ஒவ்வொரு பெண்ணும் தன்னை மீட்டெடுக்க வேண்டும் என்ற சிந்தனை எழுச்சியுடன் செயல்படத் தூண்டும் கவிஞர்களின் கவிதைகளையும் பார்க்க முடிகின்றன.

பெண்ணின் அடிமைநிலை பல தலைமுறைகளைக் கடந்து வந்து கொண்டிருக்கிறது. பெண்ணடிமைத்தனம் என்பது காலங்காலமாக அரங்கேறி வருவதை கவிதைகள் எடுத்துக்காட்டியுள்ளன.

பெற்றோரின் பொறுப்பின்மையால் இளம்வயதில் திருமணம் செய்து வைக்கின்றனர். சிறுவயது முதலே பெண்கள் சுதந்திரமாகச் செயல்பட விடுவதில்லை ஆகையால், அவர்கள் சுதந்திரமாக முடிவெடுக்கும் உரிமையைக்கூட இழக்கின்றனர்.

குடும்பத் தளத்திலும், சமூகத் தளத்திலும் பெண்கள் மரபு சார்ந்த பணிகளை மேற்கொள்கின்றனர் என்பதைக் கவிஞர்கள் சுட்டிக்காட்டியுள்ளனர்.

ஆணாதிக்கத்தின் போக்கால், குடும்பப் பெண்கள் பல்வேறு துன்புறுத்தலுக்கு ஆளாக நேரிடுவதோடு, இல்லத்தரசிகளில் பலர் குடும்ப அடிமையாக நடத்தப்பட்டு வீட்டுச் சிறையில் வைக்கப்பட்டுள்ளதையும் கவிதைகள் எடுத்துக்காட்டியுள்ளன.

இல்லத்தரசிகளாக இருக்கக் கூடிய பெண்கள் வீட்டில் வேலையின்றி இருப்பதாகவே கணவன்மார்கள் எண்ணிக்கொள்கின்றார்கள்போலும். காலையில் கணவன் எழுந்திருப்பதற்கு முன்பாகவே எழுந்து வீட்டு வேலைகளைச் செய்து, காலை உணவு உண்ணச் செய்து, மதிய உணவும் தயார் செய்து வைத்து அலுவலகம் செல்லும் கணவனுக்கு எடுத்துக் கொடுத்து இன்முகத்தோடு அனுப்பி வைக்கின்றாள் மனைவி. கணவன் வேலைக்குச் சென்றதும் குழந்தைகளைக் குளிப்பாட்டி, ஆடை மாற்றி, உணவு கொடுத்து பள்ளிக்கு அனுப்பி வைக்கும் பொறுப்பும் பெண்களுக்குரியது. குழந்தையைப் பள்ளிக்கு அனுப்பிவிட்டு, வீட்டைச் சுத்தம் செய்தல், துணி துவைத்தல் என்று வீட்டு வேலைகள் அனைத்தையும் செய்து முடிப்பதற்குள் அலுவலகம் சென்ற கணவன் வீடு திரும்பிவிடுவார். திரும்பி வந்த கணவனுக்கு மாலை நேர சிற்றுண்டி, இரவு உணவு என்று எல்லாம் செய்து கணவன், குழந்தை ஆகியோர் உறங்கச் சென்ற பின்பு மனைவியானவள் உறங்கச் செல்வதுண்டு. இவ்வாறு குடுமப்பப் பெண்கள் தன் குடும்பத்திற்காக ஓயாது

உழைக்கும் ஓர் இயந்திரமாகவே செயல்பட வேண்டியுள்ளதை அறியமுடிகின்றது. இத்தகையப் பெண்களின் தியாகம் போற்றப்பட வேண்டியதாகும்.

நான்காவது இயலில், பெண் குழந்தைகள் பிறந்தது முதலே பல இன்னல்களுக்கு ஆட்படுவதையும், குழந்தைத் தொழிலாளர்களாக வலம் வருவதையும், பணி செய்யும் இடத்தில் பாதுகாவலர்களாக இருக்க வேண்டியவர்களாலேயே வன்பகடிக்கு ஆளாவதையும் கவிஞர்களின் கவிதைகள் வெளிப்படுத்துகின்றன.

பெண் குழந்தைகள் சிசுவிலிருக்கும்போதே சமூகத்தினரால் புறக்கணிக்கப்பட்டு சிசுவிலேயே கொலை செய்யப்பட்டிருப்பதைக் கவிஞர்களின் கவிதைகள் உறுதிசெய்கின்றன. அதையும் மீறி அக்குழந்தை பிறந்தாலும்கூட பாலினப் பாகுபாடு பார்க்கப்பட்டு பெண்குழந்தை ஒதுக்கப்படுவதை கவிதைகள் வெளிக்காட்டியுள்ளன.

இன்றைய சமுதாயத்தில் தன்னலமும், சுயநலமும் பெருகிப்போன இக்காலகட்டத்தில் குழந்தைத் தொழிலாளர்களாகப் பெண் குழந்தைகள் தீப்பெட்டித் தொழிற்சாலைகளில் பணி செய்யும் இயந்திரங்களாக வலம் வருவதைக் காணமுடிகின்றது.

பெண் குழந்தைகளைப் பெறுவதும், அவர்களை வளர்ப்பதும் பெரும் சுமையாகக் கருதி வருகின்றனர்.

ஆண்களின் மிருகச் செயலுக்குப் பெண் குழந்தைகள் ஆளாகின்றனர். சிறு வயதுக் குழந்தைகளும் பாலியல் துன்புறுத்தலுக்கு ஆளாகி அவர்களின் வாழ்க்கை கேள்விக்குறியாக மாறிவிடுவதை கவிதைகள் வெளிப்படுத்துகின்றன.

பெண் குழந்தைகள் மீதான தாக்குதல்களும், பாலியல் வன்முறைகளும் இச்சமூகத்தில் இன்றும் அரங்கேறிய வண்ணம் நடைபெற்றுக் கொண்டிருப்பதைக் காணமுடிகின்றது.

பெண்கள், மகள், குழந்தை, மாணவி, தோழி, ஃபிகரு, காதலி, மனைவி, தேவிடியா, நடத்தை கெட்டவ , குடியைக் கெடுக்கிறவ, சமூக சேவகி, டீச்சர், தாதி, வேலைக்காரி, இலக்கியவாதி, நடிகை, போராளி, உழைப்பாளி எனப் பல்வேறு பெயர்களில் அழைக்கப்படுவதைக் கவிதைகளில் காணமுடிகின்றன.

பெண் குழந்தைகள் வேண்டாம் என்று ஒதுக்கும் இச்சமூகத்தில் தன் பெற்றோர்களைப் பேணிப் பாதுகாக்கும் பொறுப்பை இறுதிக்காலத்தில் இப்பெண்களே ஏற்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

ஐந்தாவது இயலில், பெண்களின் நால்வகைப் பண்புகள், தாய்மைச் சிறப்பு, பெண்கல்வியால் ஏற்படும் மாற்றம், பெண்ணின் போரக்குணம், அரசியல் சிந்தனை, விடுதலை இயக்கப் போராட்டங்கள் மற்றும் பெண்ணிய மீட்சி குறித்த சிந்தனைகள் கவிதைகளாக இடம்பெற்றுள்ளன.

“வரலாறு என்பது வருக்கப் போராட்டங்களின் தொகுப்பே” என்றார் காரல் மார்க்ஸ். உலக வரலாற்றில் ஒடுக்குவோருக்கும், ஒடுக்கப்படுகின்றவருக்கும், சுரண்டலுக்கும், சுரண்டலுக்கெதிரானவர்களுக்கும் இடையில் நடைபெறும் போர். இது ஒரு தொடர் நிகழ்வாக இருக்கிறது என்பதைச் சமூகவியலாரும், வரலாற்று அறிஞர்களும் எடுத்துரைக்கின்றனர்.

மானுட சமுதாயத்தில் சரிபாதியினராகியப் பெண்கள் ஒடுக்கப்படுவோராகவும், சுரண்டப்படுவோராகவும் தங்களை உணர்ந்த நிலையில் தங்களுக்கான விடுதலை உணர்வை முன்னெடுத்துச் செல்ல வேண்டியவராயினர். அதனால், பெண் என்பவள் அடிமையில்லை என்பதை நிரூபிக்கவே பெண்ணியவாதிகளாகத் தங்களை மாற்றிக்கொண்டு அவர்களுக்கான உரிமையை மீட்டெடுக்க முயன்றனர்.

“ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே” என்ற பழமொழியானது பெண்ணின் உயரிய பண்பினை விளக்குவதாக அமைகின்றது. ஆணும் பெண்ணும்

இணைந்தே இருக்கும் இச்சமூகத்தில் இருபாலருக்கும் இருவேறு மதிப்பீடுகள் நிலவி வருவதைக் காணமுடிகின்றது.

ஆண், பெண் சமதர்மம் குறித்து ஜீவாவின் பாடல்கள் எடுத்துரைத்துள்ளன. ஆண்களுக்கும் பெண்களுக்கும் சட்டம் வெவ்வேறாகக் காணப்படுவதைச் ஜீவாவின் பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

பெண்ணடிமைத் தனத்தைத் தூக்கிப் பிடித்துக் காத்து வருவதில் மூடநம்பிக்கைக்கும், மூடத்தனத்திற்கும் முழுப்பங்கு உண்டு என்பதைக் கவிதைகள் உணர்த்துகின்றன.

உலகளவில் தோன்றிய தொழிற்புரட்சியின் காரணமாக விழிப்புணர்வைப் பெற்ற பெண்கள் தங்களின் விடுதலை குறித்த தத்துவத்திற்குப் "பெண்ணியம்" என்று பெயரிட்டனர் என்பதை அறியமுடிகின்றது.

கல்வியாலும், பொருளாதார உயர்வாலும் இந்தியச் சமூகத்தில் குறிப்பாகத் தமிழ்ச் சமூகத்தில் பெண்ணிய மீட்சி குறித்த சிந்தனைகளும், செயற்பாடுகளும் தோற்றம் பெற்று வளர்ந்து வருகின்றன.

எந்தச் சூழ்நிலையிலும் மக்கள் உரிமைகளை அதிகாரத்தோடு நிலைநிறுத்துவது அரசு என்னும் நிறுவனமே ஆகும். எனவே, பெண்கள் அவர்களுக்கான உரிமைகளையும் செயற்பாடுகளையும் மீட்டெடுக்க அவ்அரசுடன் தங்களையும் இணைத்துக்கொள்ள வேண்டும் என்பதை அறியமுடிகின்றது.

பெண்ணிய மீட்சி என்பது வெறுமனே பெண்களுக்கான உரிமைகளைப் பெற்றுத் தருவது மட்டுமல்ல. இந்தச் சமூகத்தையே மாற்றியமைக்க முயல்வதாகும்.

ஆண்களும் பெண்களும் ஒருவருக்கொருவர் ஏற்றத்தாழ்வுகள் பாராது, சரிநிகர் சமமாக வாழும் நிலையைப் பெற்றால் சமூகமும் நாடும் நிலைபெற்று வளம்பெற்று வாழும் என்பது திண்ணம்.

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட இருபால் கவிஞர்களின் கவிதைகளை ஒப்புநோக்கும்போது, பெண் கவிஞர்கள் பெண்களுக்கு ஏற்படும் மன வேதனைகளை, பாலியல் சிக்கல்களை, சமூக ஒடுக்குமுறைகளைத் தாம் அனுபவித்ததால் அழுத்தம் திருத்தமாகத் தம் கவிதைகளில் வெளிப்படுத்தியுள்ளனர்.

ஆண் கவிஞர்கள் பெண்களுக்கு ஏற்படும் சிக்கல்களைத் தம் கவிதைகளில் பதிவு செய்திருந்தாலும், அக்கவிதைகள் அவ்வலிகளைப் பார்த்தும், கேட்டும், அறிந்தும் மேலோட்டமாக வெளிப்படுத்துவனவாகவே அமைந்துள்ளன.

பெண்ணுரிமைக்கானப் பாதுகாப்பு வலிமையான வகையில் சொல்லப்பட வேண்டுமெனில், பண்பாட்டு மாற்றத்தின் அடிப்படையிலான மக்களின் மனமாற்றமும் அம்மனமாற்றத்தை ஏற்படுத்த வலிமையான சட்டமும் அவசியமானதாகக் கருதப்படுகின்றது. அத்தகைய மாற்றத்தை ஏற்படுத்தக் கவிஞர்கள் தத்தம் கவிதைகள்வழி கொண்டுவர ஈடுபட்டுள்ளனர். எனவே, இத்தகைய கவிஞர்களின் பெண்ணிய மீட்சி குறித்த கருத்துப் பரப்புதலுக்கு இன்றைய நிலையில் ஓரளவு வெற்றி கிடைத்துள்ளதை அறியமுடிகின்றது.



# மேலாய்வுக் களங்கள்

"***தமிழ்ப் புதுக்கவிதைகளில் பெண்ணியம்***" என்ற தலைப்பில் ஆய்வு செய்ததன் விளைவாக இத்தலைப்பை ஒட்டிய கீழ்வரும் தலைப்புகளில் மேலாய்வு செய்வதற்கு வாய்ப்புள்ளது.

1. ஆண் கவிஞர்களின் கவிதைகளில் பெண்ணியம்
2. பெண் கவிஞர்களின் கவிதைகளில் பெண்ணியம்
3. பத்தாண்டு தமிழ்ப் புதுக்கவிதைகளில் பெண்ணியம்
4. ஐந்தாண்டு தமிழ்ப் புதுக்கவிதைகளில் பெண்ணியம்
5. தமிழச்சி தங்கபாண்டியன் கவிதைகளில் பெண்ணியம்
6. கனிமொழி கவிதைகளில் பெண்ணியம்
7. ஆண்டாள் பிரியதர்ஷினி கவிதைகளில் பெண்ணியம்
8. சல்மா கவிதைகளில் பெண்ணியம்